# பாரதியார்

PĀRATIYĀR

## வரலாறும் கவிதையும்

VARALARUM KAVITAIYUM




BY SUNDARAM. P.M

இயற்றியவர் :

**பேராசிரியர் திரு. ப. மீ. சுந்தரம், M. A.**

தமிழ்த்துறைத் தலைவர்

உஸ்மானியா சர்வகலாசாலை, ஹைதராபாத்





**ஓரியன்ட் லாங்மன்ஸ் லிமிடெட்**

பம்பாய் கல்கத்தா மதராஸ்




# முன்னுரை

அன்பரீர் !

சென்ற டிசம்பர்த் திங்கள், 14ஆம் நாள், சிகந்தராபாத்தில், தென்னிந்தியக் கழகத்தின் சார்பில் பாரதித் திருவிழா, முதன் மந்திரியின் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. அவ்விழாவில் யான் கலந்துகொள்ளச் சென்றகாலை பல பாரதியன்பர்கள் என்னிடம் வந்து பாரதிப் பாடல்களைப் பற்றிய ஆராய்ச்சி நூல் ஒன்றை எழுதி வெளியிடுமாறு வேண்டினர். அவ்வன்பர்கள் வேண்டுகோட்கிணங்கி, **பாரதியார் வரலாறும் கவிதையும்** என்ற இச்சிறு நூலை எழுதி வெளியிடலானேன். மகாகவி பாரதியாரைப் பற்றிப் பல அன்பர்கள் எழுதியுள்ளபோதினும், அன்னாரின் பெருமைக்கேற்ற பல நூல்கள் பல அறிஞர்களால் பலவகையாக எழுதப்படவேண்டுமென்பது அடியேனது துணிபு. இக்கருத்து பற்றியே எழுதப்பட்ட இச்சிறு நூலில் குற்றங்குறைகள் இருப்பின் அறிஞர் மனங்கொள்வாராக. இந்நற்பணியில் என்னைப் புகுத்திய எல்லாம் வல்ல அருட்சக்தியைப் பணிந்து போற்றுகின்றேன்.

ஹைதராபாத்,
23-1-'53

அன்பன்,
ப. மீ. சுந்தரம்

# பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| பிறப்பும் இளமையும் | ... | ... | 1 |
| திருமணம் | ... | ... | 5 |
| தந்தையார் பிரிவு | ... | ... | 6 |
| காசிமாநகர் | ... | ... | 8 |
| அழியாப்பொருள் | ... | ... | 12 |
| குரு தரிசனம் | ... | ... | 13 |
| வங்காளப் பிரிவினையும் சுதேசி இயக்கமும் | | ... | 15 |
| திலகருக்கு ஆபத்து | ... | ... | 17 |
| புதுவை வாழ்க்கை | ... | ... | 19 |
| வாரண்டு நீங்கியது | ... | ... | 25 |
| கண்ணிற்கு மைதீட்டியது | ... | ... | 28 |
| ஆடை வழங்கல் | ... | ... | 28 |
| புதுவை நீக்கம் | ... | ... | 30 |
| ஆணும் பெண்ணும் | ... | ... | 33 |
| திருவல்லிக்கேணி | ... | ... | 34 |
| பாரதியாரின் கவிதை | ... | ... | 37 |
| பாரதியார் கடவுட்பண்பு | ... | ... | 37 |
| பாரதியார் சமயம் | ... | ... | 42 |
| பாரதியார் பெண்மை | ... | ... | 46 |
| பாரதியார் சமுதாயம் | ... | ... | 54 |
| பாரதியார் தேசியம் | ... | ... | 60 |
| பாரதியார் தமிழ்ப்பற்று | ... | ... | 68 |
| பாரதியார் உயிர்நேயம் | ... | ... | 78 |
| பாரதியார் பெரியார்வழிபாடு | ... | ... | 84 |
| பாரதியார் தத்துவநிலை | ... | ... | 89 |
| பாரதியார் நூன்மரபு | ... | ... | 96 |
| பாரதியார் பிரபந்தங்கள் | ... | ... | 101 |
| பாரதியார் வாழ்த்தும் சீட்டும் | ... | ... | 114 |
| பாரதியார் அங்கதம் (Satire) | ... | ... | 122 |
| பாரதியார் கவிதா சக்தி | ... | ... | 126 |

உ

பராசக்தி துணை

# பாரதியார் வரலாறும் கவிதையும்

புண்ணிய முடைத்தே! புண்ணிய முடைத்தே!
கண்ணிய சுப்பிர மண்ணியன் பிறப்பே!

## பிறப்பும் இளமையும்

பாரத நாட்டின் புண்ணிய மேலீட்டாலும், செந்தமிழன்னைத் தவப்பயனாலும் தென் தமிழ் நாட்டின் தென்பகுதியில் திருநெல் வேலி ஜில்லாவில் சிவப்பேரி என்னும் கிராமத்தில் மகாகவி சுப்பிர மணிய பாரதியார் 1882-ஆம் ஆண்டு கார்த்திகைத் திங்கள் மூல நன்னாளில் அவதரித்தார். இவர் தந்தையார் பெயர் சின்னசாமி அய்யர். தாயார் இலக்குமி அம்மையார். அறம் பொருள் இன்பமான அறநெறி வழாமல் இல்லறத்தை நடாத்தி வரும் இவ்விருவர்களுக் கும் ஆண்மகப் பேறு கிடைத்ததின் பயனை நினைந்து எல்லாம் வல்ல இறைவன் அருளைப் போற்றிப் புகழ்ந்தனர்.

சின்னசாமி அய்யரோ தன் வருணத்திற் கேற்ற நல்லியல்பு களும் ஒழுக்கங்களும் ஒருங்கே வாய்க்கப்பெற்றுத் திகழ்ந்ததுடன் தமிழ்ப் புலமையும் கணித அறிவும் கூரிய நுட்ப புத்தியும் கைவரப் பெற்றிருப்பதைக் கண்ட எட்டயபுரம் அரசர் இவர்மீது அன்பு கூர்ந்து தன் பணியாளர்களில் ஒருவராக அமர்த்திக் கொண்டார். "அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்" என்ற முதுமொழிக் கிணங்க அய்யரவர்களும் தனது கடமைகளைச் செவ்வனே இயற்றி உற்றாரும் மற்றாரும் தன்னை நன்கு மதித்துப் பாராட்டும் வண்ணம் ஒழுகலாயினர்.

மண் களிக்கப்பெற்ற மாதவச் செம்மலாகிய நம் சுப்பிரமணி யன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, நொடி பயின்றும் நடை பழகியும் பெற்றோர் உள்ளம் குளிரும்படி

வளர்பிறையென வளருங் காலையில், ஊழ்வினை வயத்தால் குழந்தை ஐந்தாண்டு நிறைவதற்குள் அருமைத் தாயார் இலக்குமி அம்மையார் இறைவன் திருவடி நீழல் எய்தினர். சின்னசாமி அய்யர் சிறிது காலந்தாழ்த்து மறுமணம் செய்துகொள்ள இசைந்ததின் காரணமாக இல்லற வாழ்க்கைப் புத்துயிர் பெற்று எழுந்தது. பாரதியாரும் அன்ஞரின் தங்கையான பாகீரதியும் சிற்றன்னையான வள்ளியம்மையின் வயமாக வளர்ந்து தாயைத்துறந்த சேயென யாரும் கருதாவண்ணம் அன்பு கெழுமிய உள்ளத்தராய் ஒழுகி வரலாயினர். பிள்ளைப் பருவத்தில் பாரதியார் தனது தந்தையிடம் மிகுந்த பயமும் மரியாதையும் காட்டி வந்தமையால் தனது சிற்றன்னையாரிடமே தனக்கு வேண்டிய பொருள்களைக் கேட்டும், பெற்றும், அளவளாவியும் வருவாராயினர்.

சின்னசாமி அய்யர் தனது புதல்வனைத் தகுந்த முறையில் கல்வி பயிலுவித்து அவையின் கண்ணே முந்தியிருப்பச் செய்தலே சிறந்தகடமையெனக் கருதிய மனத்தினராய், தாயைப் பிரிந்த பாரதியாரின் உடல் வளர்ச்சியில் அதிக நோக்கங்கொள்ளாது உயிர் வளர்ச்சியில் அதிக ஊக்கங்காட்டத் தலைப்பட்டனர். பள்ளிப் பருவத்தினராகிய பாரதியாருக்கு, தானே கணித வகைகளைக் கற்பிப்பதும், கல்வி அறிவு தீட்டுதலும், விளையாட்டயர்வுகளில் அதிகமாக ஈடுபடாதபடி கண்டித்தலுமாக இருந்தனர் என்ற குறிப்புக்கள் பாரதியார் பாடலினின்றும் இங்கு தெளிவாகின்றது.

> "வேண்டு தந்தை விதிப்பினுக் கஞ்சியான்
> வீதியாட்டங்க ளேதினும் கூடிடேன்,
> தூண்டு நூற்கணத்தோடு தனியனாய்
> தோழமை பிறிதின்றி வருந்தினேன்." (சுயசரிதை)

அச்சமே கீழ்களது ஆசாரம் என்பதற்கேற்ப, சிறு பிராயத்தில் பள்ளிக்குப் போவதும் காலத்தை வீணுகக் கழிக்காமல் படிப்பதும் எழுதுவதுமாக இருந்த பாரதியார், எட்டு ஒன்பது வயதிலேயே பகலிலும் இரவிலும் மனதைக் கவரத்தக்க கனவுகள் காண்பதும் அதனுல் களிப்படைவதுமாக இருந்தார். தமிழில் சிந்து வடிவாகத் தமிழ் இன்பத்தைச் சிந்திய அண்ணுமலை ரெட்டியாரின் காவடிச் சிந்தில் பாரதியாருக்கு அதிக மோகம் உண்டு. தமிழ் தேறும்

செந்தமிழ்த் தாசனாகப் பின்னர் விளங்கப்போகும் நம் கவிஞர் பெருமானாகிய பாரதியார், சென்னிக்குள நகரண்ணல் கொடுத்த பதங்களைப் படித்து, மனனம் செய்து, தனக்கு வேண்டிய வகையில் இன்னிசையுடன் பாடிப்பாடி மகிழ்வாராயினர். கவிதாப் பிரவாகத்தில் முதன்முறை அவர் மூழ்கியது இக்காலமே. குலவித்தைக் கல்லாமற் பாகம் படுமாகையால் நூலறிவோடு தன் குடும்ப வாசனையும் பெற்ற பாரதி அண்ணல் இப்பிராயத்திலேயே, வேதாகமங்கள் கற்றுத் தெளிந்த தன் பக்கலுள்ள வயது முதிர்ந்த பெரியோர்களிடம், சாத்திரங்களைப் பற்றி வினவுதலும், விடைபகர்தலுமாகத் தத்துவ நிலைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்க ஆரம்பித்தார். சில சமயங்களில் பள்ளிப் பலகையையும் ஏட்டுச் சுவடிகளையும் தெருத்திண்ணையில் விட்டுவிட்டு இயற்கையன்னையின் காட்சிச் சாலைகள் நிறைந்த சோலை இடங்களிலும் நீர்த் தடங்களிலும் சென்று தியான பரராய் நின்று ஆனந்தித்து உல்லாசமாக வீடு திரும்புவார். காதல் மோகங்கொண்டு திரிந்த செய்தி, அன்னார் நூல்களில் ஆங்காங்குக் காணப்படுவது இத்தன்மையான இயற்கை அன்னையிடம் ஏற்பட்ட காதலேயாம்.

வாணியின் காதல் அன்னாரை வளர்த்து வந்தது. பெரியார் பரம்பொருளை அடையக் காட்டிய வழிகள் பல திறத்தன. ஆன்ம நேய ஒருமைப்பாட்டிற் கலக்கும் மெய்யடியார்கள் சென்ற மார்க்கங்களினிடையே எளிதில் பற்றுதற்கேற்ற நாயகி-நாயக பாவம் பாரதியார் உள்ளக்கிழியில் நன்கு வரையப் பெற்றிருந்தது. கலைமகளைக் கட்டியணைத்து முத்தங் கொடுத்தலே உண்மைக் காதல் என்ற கொள்கையிலே அவர் ஈடுபட்டிருந்தமையினாலேதான் அவர் பெயர் பாரதி என்றாயிற்று.

சின்னசாமி அய்யரோ தன் மகன் தவப்புதல்வன், தண்ணளியன் என்று பிறர் கூறும் சொற்களைக் கேட்டு வந்தனரேயன்றி அவ்வுண்மையைத் தான் நேரில் அனுபவிக்க ஒண்ணாமலேயே இருந்து வந்தார். எட்டயபுரம் மன்னனிடம் பாரதியார் சில சமயங்களில் சென்று தான் இயற்றிய கவிகளைப் படித்துக் காண்பித்தும், இக்காலத்தில் நல்லிசைப் புலவர் இல்லை என்ற வசைமொழி தன்னால் நீங்கப்பெறும் என்றும் சொல்லி வருவதுண்டு. அரசர் கல்வி கேள்விகளில் மிக்கவராகவும் கலைக் கண்ணாளராகவும் இருந்து

வந்தமையால் சுப்பையா என்ற பாரதியாரைப் பல வகைகளிலும் ஊக்கினதன்றி நன்மகனைப் பெற்ற சின்னசாமி அய்யரையும் புகழ்ந்து பாராட்டி வந்தார்.

சிறு பிராயத்தில் ஒரு சாலை மாணவர்களாக இருந்தவர்களில் சிலர் பாரதியாரின் திட உணர்ச்சியையும் உயர்ந்த குறிக்கோள்களையும் ஞானப் பெருக்கையும் கண்டு அவரிடம் அதிக அன்பாகவும் மரியாதையாகவும் நடந்து கொள்வதுண்டு. நண்பர்கள் பக்கத்தில் இருக்கவும் பாரதியார் எதிர்பாராதபடி அருமையான இனிய பதங்களைப் பாடுவார். இன்பமேலீட்டால் ஆடுவார். எல்லோரும் மகிழ்ந்து களியாட்டயர்வர். இம்முறையில் அனுபவித்த அருமைத் தோழர்களுள் ஒருவர் பேராசிரியர் திரு. சோமசுந்தர பாரதியாராவர். பாரதியாரின் பெருமையையும் ஆற்றலையும் இளமையிலிருந்து அறிந்து அனுபவித்து வந்த அண்ணல் அவரே யாவர்.

திருநெல்வேலியிற் சென்று ஆங்கிலக் கல்வி பெறுமாறு தன் தந்தையார் அனுப்பிவைத்ததைக் குறித்து பாரதியார் மனத் தளர்ச்சியுடன் ஏற்றுக்கொண்ட செய்தி அவர் வாக்கினின்றும் புலனாகிறது. (Anglo - Vernacular School) பள்ளிகளில் வெள்ளை அரசாங்கத்தினர், அக்கால அரசியலுக்குத் தக நியமித்திருந்த கல்வித் திட்டத்தைக் கவிஞர் பெருமான் பலபடக் கண்டித்தும் வெறுத்தும் கூறி உள்ளார்.

> "நெல்லையூர்ச் சென்றவ் வூணர் கலைத்திறன்
> நேருமாறெனை எந்தை பணித்தனன்."
>
> "சேரன் தம்பி சிலம்பை யிசைத்ததும்
> தெய்வ வள்ளுவன் வான்மறை செய்ததும்
> பாரில் நல்லிசைப் பாண்டிய சோழர்கள்
> பார ளித்துத் தர்மம் வளர்த்ததும்" (சுயசரிதை)

என்றவைகள் அக்காலப் பிள்ளைகட்குப் பாடமாக இராததும், பேடிக் கல்வியைப் பயின்றுழல் பித்தராக அன்னார் அமைந்ததும் நம் கவிஞரின் உள்ளத்தைத் துன்புறுத்தியது என்பதாம். தான் இவ்வுண்மையைத் தெளிந்தும் தந்தையார் ஆணையை மறுக்க அஞ்சி, சிறிது காலம் ஆங்கிலக் கல்விச் சாலையிலும் பயின்றதுண்டு. பொருளை வீணாகச் செலவழித்துத் தாய் நாட்டின் பெருமையையும், மேம்பாடுகளையும், தமிழ்க் கல்விச் சிறப்பையும் ஓர்ந்து கொள்ளாமல் காலத்

தைப் போக்க நேரிட்டதே என்று மனம் புழுங்குகின்றார் சுப்பையன். அது வருமாறு:—

“சூதிலாத வுளத்தின னெந்தை தான்
சூழ்ந்தெ னக்கு நலஞ்செய நாடியே.” (சுயசரிதை)

“செலவு தந்தைக்கோ ராயிரஞ் சென்றது
தீதெனக்குப் பல்லாயிரஞ் சேர்ந்தன
நலமோ ரெட்டுணை யுங்கண்டி லேனிதை
நாற்ப தாயிரங் கோயிலிற் சொல்லுவேன்.” (சுயசரிதை)

## திருமணம்

கவிதா மணியான பாரதி, பத்தாமாட்டைப் பிராயத்தராய் உள்ள ஞான்றே கலைவாணியின்பாற் காதல் கொண்டு மோக வலையிற் சிக்கினர் என்பது முன்னரே சுட்டப்பட்டது. ஞானக்காதல் அவர் உள்ளத்தில் பெருக்கு எடுத்து ஓடினும் மெய்யுறு புணர்ச்சியின் காரணமாகிய உலக வாழ்வில் பாரதியாரைப் புகுத்துவான் வேண்டி, நல்லிலக்கணமமைந்த ஓர் நங்கையை, சின்னசாமி அய்யரும் சிற்றன்னையாரும் கூட்டு மணம் நிகழ்த்த நிச்சயித்தனர். பாரதியாரின் பன்னிரண்டாவது ஆண்டுக்குள் திருமண ஏற்பாடுகள் சித்தமாயின. “அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை” என்ற தமிழ் மறை வாசகத்திற்கு யாதும் பழுது செய்ய எண்ண மிலாராய், “தந்தை சொல் மிக்க மந்திர மில்லை” எனக் கொண்டு, செந்திருவன்னளாகிய செல்லம்மாளென்னும் செல்வியை வாழ்க்கைத் துணையாகக் கொண்டார். வசிட்டன், இராமபிரான், வள்ளுவன் முதலியோர்க்கு வாய்த்த மாதர் போல் வாய்ப்பின், மனையறம் மாண்புடைத்தாம்; அற்றேல் மணம் செய்யாது ஆண்மையைக் கைக்கொண்டு பிரமசரியமே நடத்தல் வேண்டும் என்ற கருத்துக்களைப் பாரதியார் பாடிப் போதல் படிப்போர்க்கு அவரது உள்ளத் தெளிவும் உயரிய நோக்கமும் தெள்ளிதிற் புலனும். முன்னர் கூறியபடி திருமணம் நடந்தகாலத்தில் தனது வயதில் மிகக் குறைந்த செல்லம்மாளின் தொடர்பை ஓர் கேளியென்றே எண்ணினராம். வினையின் வழியது உயிர்நிலை என்று தெளிந்த பாரதியார் ஏற்ற பண்புகளுடன் தான் ஒழுகுவதோடு, காதலியின்பால் மிக்க அன்பு காட்டத் தலைப்பட்டார். மணமக்கள் அக்காலக் குல வழக்கப்படி ஒருவரோடொருவர் அள

வளாவி மகிழ்தல் விலக்கப்பட்டிருந்ததாயினும், பாரதியார் தன் காதலைகள் செல்லம்மாள் காதில் மோதும்படி சில வமயங்களில் அழகிய பாடல்களைப் பாடுவதுண்டு. அன்னார் தன் கட்புலனுகுந் தருவாயில் இனிமையாகப் பாடி உற்சாகப் படுத்திவந்தனர். நாணம், பெண்களின் பிறப்பணி. பாரதியார் பாடும் காதற் பாட்டுக்கள் செல்லம்மாள் உள்ளத்தைப் பூரிக்கச் செய்யுமேனும், தான் ஒன்றும் பதில் கூறுது புன்முறுவல் பூப்பராம். அகப்பொருட்டுறையின் பாற் படும் இலக்கண வகைகளில் தலைவியை நோக்கிக் கூறுதல் ஓர் மரபு. ஆறுமுக வேலன் தனது காதலியான வள்ளியம்மையின்பாற் சென்று தனது தணியாக் காதலைத் தெரிவித்துக் கொள்ளும் காம பாவசமான நிலையை அண்ணுமலை ரெட்டியார் மனக் கண்ணுல் பார்த்துப் பாடியுள்ளார். இச் சுவைப் பகுதி பாரதியாரின் கவிதா உள்ளத்தில் பாய்ந்திருந்தமையால் சமயம் நேர்ந்தபோது அப்பாட லைப் பாடினர் போலும்! மணப்பந்தலில் கவிமணி பாரதியார் தனது மணவினையைக் குறித்து ஓர் ஆசுகவி பாடி, வந்திருந்தோரை இன்பக் கடலில் திளைக்க வைத்த செய்தி கவனிக்கத் தக்கதாகும்.

## தந்தையார் பிரிவு

துள்ளித் திரிந்துத் துடுக்காய் விளையாடும் பள்ளிச் சிறுவனைப் பண்படுத்திப் பயன் கொள்ளுமாறு செய்த தந்தை சின்னசாமி அய்யர் நோய்வாய்பட்டு மணவினையின் மறுவாண்டே இறந்தார். அரு மைத் தந்தையார் பொருளாசை யென்னும் பிணியிற் பிணிபட்டு உழன்று வாடிய வாட்டம் நம் பாரதியார் மனதை உருக்கி விட்ட தென்றே கூறலாம். அக்கருத்து பின்வருமாறு பயின்றுள்ளன.

“ ஈங்கிதற் கிடை யெந்தை பெருந்துயர்
எய்தி நின்றனன் தீர வறுமையான்
ஓங்கி நின்ற பெருஞ்செல்வம் யாவையும்
ஊணர் செய்த சதியி லிழந்தனன் ;
பாங்கி னின்று புகழ்ச்சிகள் பேசிய
பண்டை நண்பர்கள் கைநெகிழ்ந் தேகினர் ;
வாங்கி யுய்ந்த கிளைஞரும் தாதரும்
வாழ்வு தேய்ந்தபின் யாது மதிப்பரோ ?” (சுயசரிதை)

கேவலம், பொருளையே மதித்து அருள் வழிச்செல்லாது குல ஒழுக்கங்கெட்டு நெறி தவறிப் போகும் மாந்தர்களைக் கண்டு மனங்

கொதித்தெழுந்த பாரதியார் தனது தந்தையார் செயலை நினைந்து வருந்தினர். பின்னர் பணத்தாசையில் வெறுப்புற்றனர். பொருளற்றார் பூப்பரொருகால் அருளற்றார் எங்ஙனம் பூத்தல் கூடுமென அறிவிக்கும் மறைவாக்குகள் என்றும் உண்மையனவே. இதை உணர்ந்த கவிப்பெருமான் கீழே வருமாறு கழறிக் கூறினர். அவை :—

**"பார்ப்ப னக்குலங் கெட்டழி வெய்திய**
**பாழ டைந்த கலியுக மாதலால்**
**வேர்ப்ப வேர்ப்ப பொருள்செய்வ தொன்றையே**
**மேன்மை கொண்ட தொழிலெனக் கொண்டனன் ;**
**ஆர்ப்பு மிஞ்சப் பலப்பல வாணிகம்**
**ஆற்றி மிக்க பொருள் செய்து வாழ்ந்தனன் :**
**நீர்ப்ப டுஞ்சிறு புற்புத மாமது**
**நீங்கவே யுளங் குன்றித்த ளர்ந்தனன்."** **(சுயசரிதை)**

மனமாசற்ற தூய்மையாளனன பாரதி, சமன் செய்து சீர் தூக்குங் கோல்போல் நின்று, வருணச்சிரம தருமம் நிலை நிற்காவிடில் சமூக வாழ்வு சிதறிப்போகுமல்லவோ! தங்கள் தங்கள் நிலைக்கேற்றவாறு பொருந்திய கடமைகளைச் செம்மையாகச் செய்தலே தவவொழுக்கமாகும் என்று சிறப்பித்துரைத்தல் அழகிதன்றோ? இதுவே ஆண்மை மிக்க ஆன்றோர் ஒழுக்கன்றோ!

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்"** **(குறள்)**

என்றதனல் ஓர்ந்து கொள்க.

தந்தை இறந்தபின் வறுமை நோய் தலை காட்டியது. இதனை எதிர்பாராத பாரதியார் இல்லற வாழ்விற் கேற்ற பொருளைத் தேட வேண்டிய நிலைமையில் வந்துவிட்டார். "நடுவணது எய்த இருதலையும் எய்தும்" என்றார் பெரியோர்.

**"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருளல்ல தில்லை பொருள்."** **(குறள்)**

ஆதலின், பொருள் பெறுதல் வேண்டி, பொன்னுடையார் வாயிலிற் போய் வீணே காலங்கழிக்க ஒருப்படாத பாரதியாரின் மனோநிலை அவரது சுயசரிதையின் அடிகளில் நன்கு வெளியாகின்றது.

**“ தந்தை போயினன் பாழ்மிடி சூழ்ந்தது ;**
**தரணி மீதினி லஞ்ச லென் பாரிலர் ;**
**சிந்தையிற் றெளி வில்லை ; உடலினில்**
**திறனுமில்லை ; உரனுளத் தில்லையால் ;**
**மந்தர்பாற் பொருள் போக்கிப் பயின்றதால்**
**மடமைக் கல்வியில் மண்ணும் பயனில்லை.**
**எந்த மார்க்கமும் தோன்றில தென்செய்கேன் ?**
**ஏன் பிறந்தன னித்துயர் நாட்டிலே ?”** (பொருட்பெருமை)

புலமைமிக்கப் பெருந்தகையாளரும், இந்நாட்டினிலே வறுமைத் துன்பத்தை அனுபவித்ததுண்டு. கொடுமையினும் கொடுமை இளமையில் வறுமையன்றோ? மிடியால் மயக்கமுற்ற நம் மதிவாணன் சிறிது தளர்ச்சியடைந்து, பின்னர் மனவுறுதியடைந்து நின்றார்.

**“ சிலதினங்க ளிருந்து மறைவதிற்**
**சிந்தை செய்தவன் செத்திடுவானடா !**
**ஞானமுந் துறவும் பெற்றிலாதவர்**
**நானிலத்துத் துயரன்றிக் காண்கிலார்**
**போனதற்கு வருந்திலன் ”** **(பொருட்பெருமை)**

என்ற எண்ணத்துடன் உறுதி தளராதிருந்தார்.

## காசிமாநகர்

ஆன்மாக்களின் பாவங்களைப் போக்கிப் புனிதமாக்கும் புண்ணியத் தெண்ணீராகிய கங்கையைப் பெற்றதும், பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபிரான் கந்தழி வடிவத்துள் நின்று அருள் சுரக்கும் அவிமுத்த மாநகரின்கண்ணதான தனது அத்தை இல்லத்தில் பாரதியார் தங்கினார். அத்தை குப்பம்மாளும் அவளது கணவன் கிருஷ்ணசிவனும் அங்கு செல்வாக்கோடு வாழ்ந்தவர்கள். தென்னாட்டிலிருந்து வடநாட்டிற்குச் செல்லும் அகதிகள், தேசாந்திரிகள் தங்குவதற்கென்று சில மடங்களைக் கட்டுவித்த முறையால் கிருஷ்ணசிவன் செல்வநிலை பெறுகிற்று. காசு வேண்டிக் காசிக்கு வந்த பாரதியாரையும் தன் மக்களோடு ஒருவராகவே கருதி, வேண்டிய உடைகளைக் கொடுத்தும் விரும்பிய உணவை அளித்தும் அன்னார் போற்றி வந்தனர். கல்விச் செல்வத்தைக் கொடுப்பதையே

நற்கருமமாகக் கருதிய கிருஷ்ணசிவன் தம் மருமகனை ஹிந்தியும் வடமொழியும் பயின்று வரும்படி கலாசாலையில் சேர்ப்பித்தார். அழகுக்கு அழகு செய்தாற்போலும், பொன்மலர் நாற்றம் பெற்றது போலும், நம் பாரதியாரின் ஆழ்ந்த அறிவுணர்ச்சிகள் ஆங்கு பரிமளிக்கத் தொடங்கின. பாரதியார் பிரவேசப் பரீட்சையில் முதன் முதலாகத் தேர்வு பெற்றதுடன் தன் சாலை மாணுக்கர்களோடு குல வேற்றுமையின்றிக் கலந்து காலங்கழித்து வந்தார். சில வேளைகளில் கங்கைக் கரைக்குச் சென்று எழில் ஒழுகும் காட்சிகளைக் கண்டு களிப்பதோடு, படகுகளில் ஏறிச்சென்று உல்லாசமான முறையில் அவர் உலாவி வருதலுமுண்டு. காசிமா நகர வாழ்க்கை தான் நம் கவிஞர் பெருமானுக்குப் பரந்த உள்ளத்தையும் விரிந்த நோக்கத்தையும் கூரிய தத்துவ உணர்ச்சியையும் அள்ளிக் கொடுத்தது என்று கூறுவது மிகையாகாது.

ஒரு சமயம் பாரதியார், தனது குடுமியைத் திருத்தி அமைத்துக் கொண்டும் வீசும் வீரம் மீசையிற் கொண்டும் கிருஷ்ணசிவன் முன் தோன்றிய காலத்து, அவர், "அம்மா! ஈதென்ன விந்தை!! குலவொழுக்கம் தவறிவிட்டான் சுப்பையன்! இனி யான் உடனிருந்தே உண்ணேன்" என்று ஓலமிட்டுச் சென்றனர். கிருஷ்ணசிவன் வைதிக நெறியில் வாழும் வழக்குடையவர். அறநெறிச் செல்லும் அந்தணர் ஒழுக்கத்தினர். பக்தி உடையவர். எனவே, கலவரமான சுப்பையாவின் தோற்றம் அன்னருக்குப் பிடிக்கவேயில்லை. பாரதியார், மரியாதை மேலீட்டால் பதில் ஒன்றும் பகராது அந்த வேளை உணவை உண்ணுது வாளா விருந்தனர். தலைப்பாகையும் சட்டையும் காலில் பூட்சும் அணிந்து பழகியவராதலால் திடீரென்று தன் மாமன் சொல்லியதற்கு வருந்தினுர். அத்தை, பாரதியாரைச் சமாதானம்செய்து உணவு அருத்தினுள் போலும்!

பந்தி போஜனம் அன்று முதல் நின்றதினுல் மாமன் மருகன் சந்திப்பு இல்லாது போயிற்று என்றே ஊகிக்கலாம். ஒரு நாள் கோயிலில் பூசை செய்யச் சென்ற கிருஷ்ணசிவன், திருவெம்பாவை பாடுவதற்கென்று வருகின்ற ஓதுவார் அன்று வாராதது கண்டு கவன்றுர். வீட்டிலுள்ள பெண்பாலார் சிலர் மணிவாசகப் பெருமான் தந்த அணிவாசகத் திருவெம்பாவையைப் பாடத் தெரிந்திருப்பினும், பெண்கள் தீபாராதனைக்கென்று பாடுவது சிவனுக்குத் திருப்

தியைக் கொடுக்கவில்லை. அத்தை குப்பம்மாள் தூண்டுதலினால் பாரதியார் பாடும்படி ஏற்பாடாயிற்று. ஞாலங் கருதுபவர் கலங்காது காலங்கருதி யிருப்பதுபோல் பாரதியார் வாய்ப்புக் கிடைத்ததைப் பற்றி மகிழ்ந்து மாமனின் கோபத்தை அகற்றுவதற்கு இதுவே நல்ல தருணம் என்றெண்ணியவராய் இனிமையான இசை ஞானத்தோடு திருவெம்பாவையைப் பாடி முடித்தார். தீபாராதனை முடிந்ததும் கிருஷ்ணசிவன் பாரதியாரைப் பார்த்து, "நீயே சிறந்த சிவ பக்தன்! உன் உள்ளமே ஒளி வீசும் உள்ளம்!" எனப் பன்னிப் பன்னி புகழ்ந்து பாராட்டி அன்றையதினம் தன்னுடன் இருந்து பந்தி போஜனம் செய்யும்படி ஏற்றுக் கொண்டார். அன்றுமுதல் பந்திபோஜனம் பாரதியார் சொந்த போஜனம் ஆயிற்று.

சிறு வயதிலிருந்தே பாரதியார் நல்ல உடை அணிந்து கொள்வதிற் பிரியமுள்ளவர் என்பது முன்னரே கூறப்பட்டது. தரித்திர நாராயணக் கோலத்தை அவர் விரும்பியதில்லை. இறப்பதற்கு முன்புகூட தனது தலைப்பாகையைத் திருத்திக்கொண்டும், கோட்டை நல்ல முறையில் அணிந்து கொண்டும் பயணத்திற்குத் தயாராக விருந்ததாகத் தெரிகிறது. "செல்வமென்பது சிந்தையின் நிறைவே" மிக்க செல்வவான்களும் உலக இன்பங்களை அனுபவிக்க மனமில்லாமல் பரிதவிப்பதுண்டு. கோடித் தொகுத்தாரும் துய்க்காது போதல் உண்டல்லவோ!

அது, வகுத்தான் வகுத்தமையே காரணம் என்பர் அன்பர் வள்ளுவனார். நம் பாரதியார், "இரக்கப் போனாலும் சிறக்கப்போ" வென்றும், "ஆடையில்லா மனிதன் அரை மனிதன்" என்றும் சொல்லப்படுவனவாகிய மூதுரைகளைக் கடைப்பிடித்தவர். கப்பல் அதிகாரிகள், இராணுவ தளகர்த்தர்கள் சின்னங்களோடு அணியும் உடைகளைப் போன்று, பாரதியாரும் பூத்தொழிலால் அலங்கரிக்கப்பட்ட நேர்மையான ஆடைகளை அணிவதுண்டு. யாரேனும் இதன் காரணத்தைக் கேட்பின், தான் "பாரத ராணியின் உண்மையான தளகர்த்தன்" என்று பதிலளிப்பாராம். என்னே இவரின் வீர உணர்ச்சியும் தேச பக்தியும்!

1902-ஆம் ஆண்டு பாரதியார் காசிமாநகர்விட்டுத் திரும்பி தன் சொந்த ஊராகிய எட்டயபுரம் சேர்ந்தார். குல ஆசாரங்கள் தலை ஓங்கி நின்ற காலம் அது. சமூகத்தின் மூடப் பழக்க வழக்கங்

களும், பெண்கள் சுயேச்சையான முறையில் நடக்க முடியாதபடி ஏற்பட்டுள்ள கட்டுப்பாடுகளும் அன்னாரின் மனதைப் புண்படுத்தின. தமிழர் நாகரிகம் நன்கு போற்றப்படாமலும், நீதி நூல்களும் சாத்திரங்களும் நன்கு பயிலப்படாமலும், பெருமைகுன்றி மங்கியிருப்பதைப் பார்க்கப் பார்க்க பாரதியார் உள்ளம் நெருப்பிலிட்ட மெழுகென உருகலாயிற்று. நம் பாரத நாட்டை முன்னணிக்குக் கொண்டுவரும் மகான் எங்குள்ளனனோ? அச்செயல் எப்பொழுது நிகழுமோ? என்றவாறெல்லாம் பன்முறை நினைந்து நெகிழ்ந்து அழுங்கினர்.

எட்டயபுர மன்னன் பாரதியார்மீது வைத்த பேரன்பால் அவரை அழைத்துத் தம் மாளிகையில் ஆசிரியத்தொண்டு செய்யும்படி நியமித்தார். உத்தம காவியங்களையும், நூல்களையும் அரசர்க்குப் படித்துக்காட்டிப் பொருள் கூறுவதும், பத்திரிகைகளில் கூறப்படும் அருஞ்செய்திகளை எடுத்து ஓதுவதும், வேதாந்த சித்தாந்த நுட்பங்களை ஆராய்ச்சி செய்து அறிஞர்களோடு தருக்கம் செய்து பொழுது போக்குதலுந்தான் நம் பாரதியார் தொழில். ஆங்கில மொழிப் புலமை வாய்ந்த வல்லுநராகிய ஷெல்லி, ஷேக்ஸ்பியர், பைரன், கீட்ஸ் உள்ளிட்ட பெரியார்களின் நூல்களை நுனித்தறிந்து இன்ப ரசத்தைப் பருகியதோடு மற்றவர்களும் துய்க்கும் வண்ணம் சாராம்சமான பகுதிகளை **ஷெல்லிதாசன்** என்ற செல்வப் பெயரால் பத்திரிகைகளில் வரைந்து வந்தார்.

இஃது இவ்வாறாக, ஒரு தினம் ஒரு வேடிக்கையான சம்பவம் எட்டயபுரத்தில் நிகழ்ந்தது. இவருடைய பாட்டனாரான அப்பாசுவாமி சிவன் ஆழ்ந்த வீரசைவர். திருமாலின் திருநாமத்தைக் கேட்ட அளவிலேயே இரண்டு செவிகளையும் பொத்திக்கொள்ளும் இயல்பினர். பாரதியாரின் பந்துக்களில் ஒருவர் இறந்ததற்குச் சென்றிருந்தபொழுது அப்பாசுவாமி சிவன் தருக்கத்தில் வல்லவரான பாரதியாரைச் சில கேள்விகள் கேட்க ஆரம்பித்தார். செத்த பிணத்தருகே சாம்பிணங்கள் கதறிக்கொண்டிருக்கவும், அதைப் பொருட்படுத்தாது, பாரதியாரை நாஸ்திகன் எனக் கருதிய அய்யரவர்கள் பாரதியாரைப்பார்த்து, "தெய்வமில்லையானால் இறந்த உயிர் எங்கு சென்றது?" என்று அதட்டிக் கேட்டார். தத்துவ ஞானியான நம் கவிஞர் பெருமான் சிற்றங்கொள்ளாது, "மறைய

வரே! ஆத்மா பிரமத்தில் ஒடுங்கியது” என்றாராம். கோபிக்க வேண்டாமென்றும், சவத்தை எடுப்பதற்குரிய காரியங்களைக் கவனிப்போமென்றும் கூறினாராம். இங்கு பாரதியாரின் சமத்காரமான பதில் நினைந்து போற்றற்குரியது.

## அழியாப் பொருள்

ஆங்கில அரசாட்சிக் காலங்களில் கிறிஸ்துவப் பண்டிகைகளும், புதியவாண்டு ஜனவரி மாத வேடிக்கைகளும் பல பெரிய நகரங்களிலும் நடைபெறுவதுண்டு. அத்தன்மையான திருவிழாக் காலங்களில் சாறயர் களங்கள் சென்னையிலும் பலவாக இருந்தன. ஒரு சமயம் எட்டயபுரத்தரசர் தன் முக்கிய அன்பர்களோடு அவ்விழாக்களைக் கண்டுவுவக்க எண்ணி டிசம்பர் மாதம் சென்னைக்கு வந்தார். சில நாட்கள் தங்க நேர்ந்தது. பாரதியாரும் வந்த அன்பர்களில் ஒருவர். இவரது மனைவியான செல்லம்மாள் தன் கணவரிடம் நல்ல புடவைகள் வாங்கி வருமாறு வேண்டிக்கொண்டார். பாரதியார் சென்னையினின்றும் மீண்டு எட்டயபுரம் வந்து சேர்ந்தார். இரண்டு வண்டிகளில் மூட்டைகள் பலமாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. செல்லம்மாளும் உள்ளம் மகிழ்ச்சி பொங்க முகமலர்ச்சியுடன் புன்முறுவல் பூத்து மூட்டைகளை அவிழ்த்தனர். எதிர்பாராதபடி எல்லாம் நூற் புடவைகளாகவும் பட்டாடைகளாகவும் இல்லாமல் சங்க நூல்களாகவும் ஆங்கில ஏடுகளாகவும் இருந்தன. காதலியின் வாட்டமுற்ற முகத்தைப் பார்த்த கவிஞன் அவ்வம்மையாருக்கென ஒரு புடவை வாங்கி உள்ளதாகவும், அரசர் கொடுத்த பணத்தில் சிறிய தொகை போக மற்றைய பொற்காசுகள் கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருளாகிய கல்விக்கே வழங்கப்பட்டதென்றும் கூறினர். “ஆசைப்படாதே! அழியும் பொருளைக் கொடுத்து அழியாச் செல்வத்தைக் கொணர்ந்தேன்” என்றார். கணவனது மகிழ்ச்சியே தன் மகிழ்ச்சியாகக்கொண்டொழுகுதலே கற்புடைய மகளிர் தலையாய கடனும்.

> “பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
> புத்தேளிர் வாழு முலகு” (குறள்)

என்ற பொய்யாமொழிக்கு எடுத்துக் காட்டாக நின்ற செல்லம்மாள் வருத்தம் நீங்கி உவகை உற்றனர்.

மற்றொரு நிகழ்ச்சியானது நம் பாரதியாரது மனோநிலையை மாற்றியது. ஒரு சமயம் கழுகு மலையில் நடந்த பூசலில் சாணார்களும் மறவர்களும் கட்சி கட்டிக் கொண்டனர். உற்சவ காலத்தில் ஏற்பட்ட சண்டையானதால் விழாத் தேரை நடத்தக் கூடாதென்பதாக வாதித்தனர். வேங்கட சுப்பையர் என்ற வேதியர் கழுகு மலை நிலப்பகுதியில் கண்காணிப்பாளராக இருந்தமையால் அவர் அங்கு ஏற்பட்ட சச்சரவைத் தீர்க்க வேண்டியதாயிற்று. இரு திறத்தாரும் பலத்துடன் போர் முகத்திலிருப்பதைக் கேட்ட வேங்கட சுப்பையர் உணவு அருந்துவதையும் ஒழித்துவிட்டுக் கலகம் நடக்கும் இடத்தருகே சென்றார். "ஊழ்வினை உருத்துவந்து ஊட்டுமென்பது" உண்மையாகையால், ஆண்டு நின்ற ஒருவன், "இவன் யாரடா பார்ப்பான் வழக்கு தீர்க்க வந்தவன்" என்று சொல்லிக் கொண்டே தனது கூரிய கத்தியால் அய்யரைக் குத்திக் கொன்று விட்டான். புலனழுக்கற்ற அந்தணாளனாகிய நம் பாரதி அறிஞன் இச்செயலைக் கண்டு நடு நடுங்கி உளம் பதைத்தார். வருண பேதத்தால் வரும் வாதங்களும், வேற்றுமையால் வரும் சச்சரவுகளும் மக்கள் வாழ்வை அடியோடு குலைத்துவிடும் என்று கருதிய பாரதி, அன்று முதல் சாதி சமயச் சழக்குகள் ஒழிய வேண்டுமென்று பாடுவாராயினர். தனது பாடல்களில் அநேக இடங்களில் இவ் வேற்றுமையைக் கண்டித்துரைத்தல் அழகினும் அழகன்றோ!

## குரு தரிசனம்

பாரதியார் மதுரையிலிருந்து சேது சமஸ்தானாதிபதிகளின் உயர்தரக் கலாசாலையில் சில காலம் தமிழாசிரியராகவிருந்து தொண்டாற்றினார். பின்னர், சென்னையிலுள்ள சுப்பிரமணிய அய்யருடன் கலந்த மனப்பான்மையராய், தன்னால் இயன்ற அளவு தேசத் தொண்டு இயற்றினார். 'சுதேசமித்திரன்' செய்தித்தாளில் உப ஆசிரியராக இருந்த காலத்திற்றான் பாரதியாரின் பெருமை பல மக்களுக்குத் தெரிய வந்தது. உண்மையான தேசியமில்லாப் போலி மக்களையும், ஆழ்ந்த கல்வி ஞானமில்லாத ஆஷாட பூதிகளையும், நாட்டின் சீர்குலைந்து வழி மயங்கிக் கிடக்குங்கால் இடை புகுந்து மக்களைப் பற்றிப் புடைத்துண்ணும் பதடிகளையும் பல படியாகத் தாக்கி எழுதுவாராயினர். அக்காலத்து எழுந்த பாரதியார் பாடல்கள் வீரச்சுவையும் அவலச்சுவையும், நகைச்சுவையும்

கலந்து மிளிர்வதாயின. திடசித்த உள்ளம் படைத்த நம் பாரதியாரின் தளரா ஊக்கத்தையும் உணர்ச்சியையும் கண்டு களித்த வ. உ. சிதம்பரம் பிள்ளை இவரிடம் மிக்க ஊக்கங் காட்டினர். தனது மரக்கப்பல் நில்லாது ஓட்டியதோடு பாரதியார் கவிக் கப்பலும் கவிழாது கடலில் நடக்குமாறு பிள்ளையவர்கள் கண்ணளித்தார். வ. உ. சிதம்பரம் பிள்ளையின் அஞ்சா நெஞ்சத்தையும் ஆற்றலையும் இங்கு எழுதுவதெனில் அது மிகப் பெரு நூலாகப் பெருகும் தாத்ததாதலின், விரிவஞ்சி விடுக்கின்றோம்.

1906-ஆம் ஆண்டு காசிமாநகரில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் சபைக்குச் சென்றிருந்த பாரதியார் புத்துணர்ச்சி பெற்று மீண்டார் என்றே கூறல் வேண்டும். தேசாபிமானம் பழுத்துக் கனிந்து, தன்னை அடைந்தோர்க்கு அவ்வினிய மணத்தை எடுத்து வழங்கும் வன்மை பெற்ற தாதாபாய் நௌரோஜியின் தலைமையில் அக்கூட்டம் நடைபெற்றது. சுயராஜ்யம் என்ற சொல் அங்குதான் பிறந்தது. மாபெருந்தலைவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்ந்த பாரதியாரின் உள்ளம் கார் பெற்ற தோகையைப்போல் களித்தது. கூட்டங்கலைந்து திரும்புங்கால் கல்கத்தாவிற்குச் சென்று அம்மாநகரின் காட்சிகளைக் கண்ட பாரதியார் டம்டம் என்ற ஊரில் வசித்துவந்த ஸ்ரீமத் விவேகானந்தரின் சிஷ்யையான ஸ்ரீமதி நிவேதா தேவியைக் காணச்சென்றார். அவ்வம்மையாரைப் பார்ப்பதற்கு முன் பாரதியார் அவரிடம் அவ்வளவு ஆர்வம் உடையவராக இருந்ததாகத் தெரியவில்லை. ஆங்கிலமாது ஆங்கிலமாதாகத்தானே இருக்கவேண்டும் என்று எண்ணினாராம். ஸ்ரீமதி நிவேதா தேவியைக் கண்டு பேசும்பொழுது பாரதியார் மனம் மாறிவிட்டதுடன், அன்னார் கூறிய அரிய அறிவுரைகளைப் பொன்னேபோல் போற்றிக் கொண்டார். தன் மனைவியை வெளியூர்களுக்கு அழைத்து வராத குற்றத்திற்குத் தன் குலவொழுக்கமே காரணம் எனக்கூற, ஸ்ரீமதி நிவேதா தேவி கோபங்கொண்டு பெண்மை பெருமையுடையதென்றும், பெண்களே நாட்டிற்கும் சமூகத்திற்கும் மணி விளக்காகத் திகழக் கூடியவர்களென்றும், பரஞான முத்தி இயல்புகளுக்கும் அப்பெண்களே துணையாவார்கள் என்றும் சொல்லி நிகழ்த்திய சொற்பொழிவானது பாரதியார் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதிந்தது. பின், அவ்வம்மையாரிடம் ஞானோபதேசமும் பெற்று, பிற்காலத்திய வாழ்வில் ஒரு சிறந்த தீரனாக இருக்கப் போவதை

அவ்வம்மையார் குறிப்பாலுணர்ந்து, இமயத்தினின்றும் அரிதில் கொண்டுவரப்பெற்ற சிறிய ஒரு பச்சிலையை அவ்வம்மையார் பிரசாத மாகக் கொடுக்கப்பெற்று, நம் பாரதியார் சொந்த ஊர் திரும்பினார். ஸ்ரீமதி நிவேதா தேவியிடம் பெற்ற பெறற்கரும் பரிசிலைத் தனக்குக் கிடைத்த ஒரு பெரிய பொக்கிஷமாகவே பாரதியார் கருதிப் பேணி வந்தார். குரு உபதேசத்திற்குப் பின் அவருக்கு மறு உபதேசம் வேண்டுமோ? சொல்லாமற் சொல்லும் மகாமௌன மந்திரத்தின் உண்மைத் தத்துவத்தைத் தெரிந்துகொள்ளும் பெற்றியோர்கள் தன்னைத்தான் அறிந்துகொள்வார்கள் அல்லவோ? "தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை, தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்" என்ற திருமூலர் மந்திரம் எக்காலத்தும் உண்மையன்றோ? பாரதியார் பாரதியின் உபதேசம் பெற்ற வரலாற்றை உள்ளக்களிப்பு பொங்கி வழியும் ஆனந்தக் களிப்பு நடையில் பாடியுள்ளார் என்பது நன்கு புலனாகின்றது.

## வங்காளப் பிரிவினையும் சுதேசி இயக்கமும்

இந்திய நாட்டின் வலது கைபோன்ற வங்காள தேசம் சுதேசி இயக்கத்தில் முன்னணியில் நின்று தொண்டியற்றிவரும் பேராற்றலைக் கண்டு மனம் பொறாத ஆங்கில அரசாங்கத்தார், அவ்வியக்கத்தின் ஆணி வேரை அறுக்கக் கருதி, வங்காள மாகாணத்தைப் பிரித்துவிடவேண்டிய சட்டதிட்டங்களை இயற்றி அமுலுக்குக் கொண்டுவந்தனர். இத்தீச்செயல், நாட்டு மக்களின் உணர்ச்சியைத் தட்டி எழுப்பியதோடு, தேச விடுதலைப் போராட்டத்தைத் தீவிரமாக நிகழ்த்துமாறு தூண்டிற்று. புதிய சகாப்தம் பிறந்ததென்று சொல்லலாம். பாரதியார் தமது உயரிய அபிப்பிராயங்களையும் உன்னதமான விருப்பங்களையும் தீட்டி எழுதுதற்குத் தகுந்த பத்திரிகை இல்லையே என்று மனங்கலங்கினார். 'விடுதலை' என்ற பத்திரிகையில் சில சமயங்களில் செந்தமிழ் நடையில் இன்னிசைப் பாடல்களைப் புனைந்து சக்தி வெள்ளம் கரை புரண்டோடும் பான்மையில் எழுதி வெளியிட்டார். தேசப்பணியாம் தெய்வத்தொண்டிற்கேற்ற பத்திரிகை எக்காலம் கிடைக்குமோ? என்ற எண்ணத்தினராய் இருந்து வந்தார். தனது மனத் துயரத்தையே தலை எடுப்பாக வைத்து, "என்று தணியுமிந்த சுதந்திர தாகம், என்று மடியுமெங்கள்

அடிமையில் மோகம்?" என்று கதறினர். "கையில் காசு இல்லை, முகத்தில் தேசு இல்லை" என்பதுபோல் பாரதியார் அறிவுச் செல்வரே அன்றி திருச் செல்வரல்லர். அங்ஙனம் கையற்ற நிலையில் உள்ள பாவேந்தன் மனங்களிக்கத் தோன்றினர் திருவல்லிக்கேணி திருமலை அய்யங்கார். முன்னரே தான் ஆங்கிலப் பத்திரிகையாக நடத்திவந்த 'பிரமவேதின்' என்ற பத்திரிகை, வருங்கால அரசியல் வாழ்வுக்குத் தகுந்த தொண்டாற்றும் ஆற்றல் பெற்றில்லாததை யூகித்து, சிறந்த ஒரு தமிழ்ப் பத்திரிகையை உற்பத்தி செய்யவேண்டும் என்ற அவாக்கொண்டு, அப்பத்திரிகையை இயக்கும் அருமை மகன் எங்குள்ளான் என்று தேடித்திரிந்தார். பாரதியாரின் குணஞ் செயல்களைப் பார்த்த திருமலையார், திடமான போராட்டஞ் செய்யத் தகுந்த ஆண்டகை இவரே ஆவர் எனக்கொண்டு சகல உரிமைகளையும் பாரதியாருக்கே தந்து பத்திராதிபராகவும் நியமித்தார்.

வேண்டியார் வேண்டுவன ஈந்தருளும் இறைவன் திருவருளை வியந்து நம் பாரதியார் பொறுப்புள்ள மனத்தினராய் தேசாவேசக் கனல் பொங்கி வழியும்படி சுதந்திரப் பாடல்களைப் பொழியலானர். ஜீவதாதுக்கள் நிரம்பிய பல்பொருட் பாடல்களை, ஆடியின் கண்ணே பனிநிழல் தோன்றுமாறு போல் காண்பித்து எழுதினர். 'இந்தியா' பத்திரிகை இந்திய நாட்டின் தவப்புதல்வனுகிய பாரதியின் உள்ளக் கிடக்கைகளைக் கள்ளங்கபடமின்றிக் காண்பித்து விளக்கியது. வீர ரசமானக் கருத்துக்களையும் கொதித்து எழும் தேசாபிமான உணர்ச்சிகளையும் சண்டமாருதம் சுழன்று அடிப்பதுபோல் 'இந்தியா' பத்திரிகை அடித்து வந்தது. 1907-ஆம் ஆண்டில் ஏப்ரல் மாதத்தில்தான் 'இந்தியா' பத்திரிகை வெளிவந்தது.

இக்காலங்களில் சுப்பிரமணிய பாரதியார் சென்னைக் கடற்கரையில் நிகழ்த்திய சொற்பொழிவுகள் இன்றும் அறிஞர் உள்ளத்தில் அழியாது நின்று மிளிர்கின்றன. லாலா லஜபதிராய் நாடு கடத்தப் பட்டதும், சூரத் காங்கிரஸ் குழப்பத்தில் முடிந்ததும், வீர சிதம்பரம் சிறைவாசம் சென்றதுமாகிய பெரிய சம்பவங்கள் நிகழ்ந்த காலம் இக்காலமேயாகும் என்று தெரிகிறது. வங்காள நாவலோன் பெபின் சந்திர பாலர் சென்னைக்கு வந்து அரியபெரிய சொற்பொழிவுகளைப் பொழிந்து, தமிழ் மக்களின் வீரஉணர்ச்சியை ஊக்குவித்துச் சென்றது நம் பாரதியாரின் சிறந்த முயற்சியாலேதான் என்க.

மெலிந்த உடலாயினும், மலிந்த குரலும் தெளிந்த ஞானமும் திகழப் பெற்றவரான காரணத்தால் பாரதியாரது கடற்கரைப் பிரசங் கங்களுக்கு வருபவர்கள் அன்னாரின் மணி வாக்குகளைக் கேட்டு மகிழ்வதற்காகவே திரள் திரளாகக் கூடுவர். யார் பேசினும் பேசாது போயினும் பாரதியார் பேசிவிட்டால் கடல்போன்ற ஜனசமூகம் உடல் பூரித்து உற்சாகமடையும். பாரதியார் வாதம் தீவிர வாதம். மிதவாதிகளின் கொள்கைகள் அக்காலச் சுதேச உணர்ச்சிக்கு பொருத்தமானதாக அவருக்குத் தோற்றவில்லை என்பதுதான். தீவிர வாதத்தில் இறங்கினாலன்றி நாடு நன்மை அடைவதற்கு அநேக நூற் றாண்டுகள் ஆகுமென்று அவர் நினைத்த தீர்க்க தரிசனஉணர்ச்சி பின் னர் வந்து தோன்றிய மாபெருந் தலைவர்களால் பின்பற்றப்பட்டது.

சந்திரபாலர் தென்னாட்டிற்கு வந்து சென்றபின், சென்னைக் கடற்கரைக் கூட்டங்கள் அதிகமாயின. தேச பக்தர்களாகிய ஜி. சுப் பிரமணிய அய்யர், சுரேந்திரநாத் ஆரியா முதலானவர்கள் கூட்டங் களில் பங்கெடுத்துக்கொண்டு பாரதியாரைத் தங்களுக்குத் தளகர்த்த னாக வைத்தமைத்துச் சுதந்திர ஒளி மங்காதவாறு துலக்கிக் கொண்டே வந்தனர்.

## திலகருக்கு ஆபத்து

தூத்துக்குடி வீர சிதம்பரம் பிள்ளை சுதேசிக் கப்பல் ஓட்டும் திட உணர்ச்சியுடன் பலபேரிடை சென்று பொருள் திரட்டி "சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி" என்ற பெயர்பெற்ற ஓர் கம்பெனியை நிர்மாணித்தார். தென்னிந்தியாவிற்கும் ஈழநாட்டிற் கும் நடந்துவரும் மேன்மையான வாணிபம் ஆங்கிலக் கப்பலின் வழி யாகவே நடந்துவந்தமை, பிள்ளை போன்ற சுதேசிகளுக்குப் பிடிக்க வில்லை. ஆதலால், சுதேசிக் கப்பல் போக்குவரத்து சாதனம் ஏற் படுத்தப்பட்டது. வீர சிதம்பரம், பணம் திரட்டும் நோக்கோடு சென்னைக்கு வந்திருந்த காலத்தில் தேனொடு பால் கலந்தற்றே என் றாற்போல பாரதியாரும் அவருடன் மனங்கலந்த பான்மையராய்த் தன் அரிய நண்பர்களிடம் அன்னாரை அழைத்துச் சென்று அறி முகப்படுத்திப் பொருள் திரட்டிக் கொடுத்தார்.

சூரத்தில் நடந்த காங்கிரஸ் மிக்க விநோதமாகவே நடந்த தென்னலாம். மிதவாதிகள் ஒரு புறம் திரளவும், தீவிர வாதிகளான

பாரதியார், சிதம்பரம் பிள்ளை போன்றவர்கள் நாட்டுத் திலகரான பால கங்காதரத் திலகர் தலைமையில் நின்று குவிந்ததும் வேடிக்கை யாகவே இருந்தது. லாலா லஜபதி ராயைத் தீவிர வாதிகள் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கவும், மிதவாதிகள் ராஷ் பிகாரி கோஷைத் தலைவராக இருக்கும்படித் தேர்ந்தெடுத்தனர். கோஷ், தனது தலைமை உரையைத் துவங்கியவுடனே கூட்டத்தில் குழப்பம் உண்டா யிற்று. திலகர் பெருமான் எழுந்து நின்றார். உடனே அவரை மேடையினின்றும் இழுத்துச் சிலர் தள்ளி விட்டனர். சரேலென்று "திலகருக்கு ஆபத்து" என்ற கூக்குரல் பாரதியார் சென்னைக் கூட்டத்தினின்றும் எழுந்தது. திலகர் பெருமான் காக்கப் பெற்றார். பின்னர் குழப்ப மேலீட்டால் ஏசல்கள் எழும்பின. தடியடிகள் விழுந்தன. நாற்காலிகள் பறந்தன. இம்முழக்கத்தோடு சூரத்தில் காங்கிரஸ் முகில் பொழிந்தது.

பின்னர், திலகர் தலைமையில் தீவிர வாதிகள் தனியாகக் கூடி ஆலோசனை செய்து சில தீர்மானங்களை நிறைவேற்றினர். அதன் பயனாக இந்திய நாட்டிலுள்ள எழுத்தாளர் குழு நிறுவப் பெற்றது. தங்கள் தங்கள் செய்தித் தாள்களில் தேச விடுதலைக்கென்று எங்ஙனம் பணியாற்றல் வேண்டும் என்ற ஏற்பாடுகள் திட்டஞ் செய்யப்பட்டன. அடக்கு முறைச் சட்டங்களை நாட்டுப் பத்திரிகை கள் ஏகமனதாகக் கண்டித்தன. மக்களுக்கு விழிப்பை ஏற்படுத்த வேண்டுமென்பது அத்தீர்மானங்களின் முக்கிய அம்சமாக இருந்தது.

'சென்னை ஜன சங்கம்' என்ற சங்கம் பாரதியாரால் ஏற்படுத்தப் பெற்று நடந்து வரலாயிற்று. ஆனால் விசேடமான பணியை அச் சங்கம் நிறைவேற்றியதாகத் தெரியவில்லை. நிற்க, சுதேச சாமான் களைத் தவிர பரதேசப் பண்டங்களை அறவே நீக்க வேண்டும் என்ற இயக்கம் அக்காலத்தில் தோன்றியது. 'பாரத பந்தர்' என்ற பெயருள்ள பண்டசாலை ஒன்றும் பாரதியாரால் திறக்கப் பெற்றது. 'சுயராஜ்ய தினம்' என்று இந்திய நாடு முழுதும் ஒரு தினத்தில் கொண்டாட வேண்டுமென்று தீர்மானித்தார்கள். சென்னை நகரில் தீவிர வாதிகள் ஒன்று சேர்ந்து ஊர்வலமாக வந்து கடற்கரையில் ஒன்று கூடிப் பிரசங்கங்கள் நடத்த வேண்டும் என்று நிச்சயித்திருந் தும், அச்சுயராஜ்ய தினத்தன்று பாரதியார் ஒருவரையன்றி மற்ற வர்கள் ஊர்வலத்தில் கலந்துகொள்ளப் பின் வாங்கினர். ஏனெனில்,

அரசாங்கத்தார் உத்தரவன்னியில் பொதுக் கூட்டங்களோ, ஊர் வலங்களோ நடைபெறுதற்குரிய சட்டங்கள் திட்டமாய் இருந்தன. பாரதியார் தன் அன்பர்களும் நண்பர்களும் பின் வாங்குவதை நினைந்து மிகவும் வருந்தித் தானே தேசியப் படையை அணிவகுத்து நடத்த சித்தமானார். வழக்கப்படி தனது தலைப்பாகை, சட்டை முதலி யன அணிந்து, தளகர்த்தச் சின்னங்களைத் தரித்து, பாரத ராணியின் தளகர்த்தன் யான் என்று சொல்லிக் கொண்டதற் கேற்ப ஊர்வலப் படையை முன்னணியில் நின்று செலுத்தினார். யாதொரு ஊறும் நேரிடாதபடி தான் பார்த்துக் கொள்வதாகச் சொல்லி, பூமாலை வேய்ந் துத் திலகமிட்டு நடந்த பாரதியாரின் படையெடுப்பு தண்டியாத் திரைக்குப் பின்னொருகாற் சென்ற காந்தியடிகளார் தவச்செயலை நினைவுறுத்துகின்றது. படையை நடத்திச் செல்லுங்காலை, வாயில் வந்தேமாதர கீதமும், கையில் ஞான வாளும், நெஞ்சில் உரமும் கொண்டு சென்னை மறுகிற் சென்ற சிறப்பை நினைக்குங்கால் "வாணன் பேரூர் மறுகிடை நடந்து நீணிலமளந் தோன் ஆடிய" குடக்கூத்தை நினைவுறுத்துகின்றது. மானம் சிறிதென்றெண்ணி வாழ்வைப் பெரிதென்றெண்ணும் மதியிலிகளுக்கல்லவோ தேசியப் படையை நடத்த மனம் கூசும்! நண்ணார் நாண அண்ணாந் தேகும் தமிழ்ப் புலவர் பெருமக்கள் பண்பாட்டினைப் பாடிக் களிக்கும் நம் பாரதியாருக்கா அத்தகைய இழிவு ஏற்படும்! அறம் அறத்தையே வளர்க்குமாகையால், பாரத சக்தியின் திருவருளால் பாரதியார் நடத்திச் சென்ற சுதந்திரப் படை அன்று யாதொரு ஊனமில்லாது விழாவைக் கடற்கரையிற் கொண்டாடி மகிழ்ந்து கலைந்தது.

## புதுவை வாழ்க்கை

'இந்தியா' பத்திரிகை கிராமங்கள்தோறும் சென்று உலாவி வந்தது. இதைப் பொறுக்க மனமில்லாத அரசாங்கத்தார் அப் பத்திரிகையை அச்சடிக்காதபடி செய்ய எத்தனித்தார்கள். எதேச் சாதிகார முறையைக் கண்டித்து வந்த பத்திரிகை எங்கு தடைப் பட்டுவிடுமோ என்று பாரதியார் கவலைகொண்டிருந்த சமயம் வீர சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணியசிவா முதலியவர்கள் தூத்துக்குடி காங்கிரஸ் சார்பாகக் குற்றவழக்குச் சாட்டப்பட்டு அரசாங்கத்தாரால் சிறையில் வைக்கப்பட்டனர். அக்காலச் சிறைவாசம் கொடிய சட்டங் களுக்கு உள்ளானது. கல் உடைப்பதும், செக்கு இழுப்பதும், கம்

பளங்கள் செய்வதுமான தொழில்களைக் குறித்த நேரத்தில் செய்து முடிக்க வேண்டும்; அற்றேல் சௌக்கடிதான் விழும். பாரதியார், சிதம்பரம் பிள்ளை முதலானவர்களைச் சிறையிற் கண்டு பேசி வந்த வுடன் தானும் சிறைசெல்ல நேரிடுமோ என்ற எண்ணங்கொண்டார். தன்மீது ஒரு வாரண்டு இருப்பதாகத் தெரிந்தபின் எப்படியாவது பத்திரிகைத் தொழில் நின்றுவிடலாகாது என்ற எண்ணத்தினுல், மறைவாக இருந்து பணியாற்றலே ஏற்புடைத்து எனக்கருதி, குடும் பத்தினரைவிட்டு நீங்கி ஓரிரவிலேயே புதுவைமாநகர்ச் சென்றடைந் தார். பந்துக்களினின்றும் பிரிந்து செல்லுதலோ, பல தினங்கள் உண்ணுமல் இருத்தலோ, பாரதியாரின் மனோநிலைக்கு விரோதமான தல்ல. சுயராஜ்யத் தொண்டு நின்றுவிடுமோ என்ற நினைப்பு வருங் கால் நெஞ்சம் துடித்து அயர்வார். புதுவை நகர் புகுந்த காரணம் இதுவேயாகும். மனைவியையும் மற்றுமுள்ளாரையும் தனது மைத் துனர் அப்பாதுரை வசம் விட்டுவிட்டுப் புதுவை சென்ற பாரதியார், புதிய இடமாகையால் அதிக இன்னல்களுக்கு ஆளாக நேர்ந்தது. "தான் செல்லும் திசைக்குப் பாழ் நட்டோரையின்மை" என்றதற் கேற்ப ஓர் சென்னை நண்பரின் கடித உதவியால் குப்புசாமி அய்யங் கார் என்றவரின் இல்லத்தில் சில தினங்கள் தங்கியபோது, அய்யங் கார் இவரிடம் அன்பு காட்டிவந்த போதிலும், ஆங்கில அரசாங்கத் தாரின் தூண்டுதலினுல் பிரஞ்சு அரசாங்கப் போலீஸார் புரட்சிக்கார ருகிய பாரதியாரைத் தன்னிடம் வைத்துக்கொண்டால் அடியோடு கெட்டு ஒழிந்துவிடுவாய் என்றெல்லாம் கூறி அய்யங்காரை மிரட்டவே அவர் மிகவும் பயந்து, பாரதியாரைத் தனது வீட்டைவிட்டு நீங்கும் படி வினயமாகக் கேட்டுக்கொண்டார். பாரதியாருக்கு, தான் புகவிட மாகச் சென்ற நகரமும் நண்பர்களும் தன்னை ஆதரிக்காமற்றள்ளிய நிலை, இருதலைக் கொள்ளி எறும்புபோல் தோன்றியது. தான் பாடிய "குயில்" பாட்டில் நம் கவிஞர் பெருமான் தனது ஆற்ருெணுக் கடுந்துயரை, "நாளொன்று போவதற்கு நான் பட்ட பாடனைத் தும், தாளம் படுமோ, தறி படுமோ, யார் படுவார்?" என்ருர்.

போலீஸார் துன்பம் ஒரு பக்கம், பொருளிலாத் துன்பம் மறு பக்கம், தெரியாத மக்களிடையே சென்று குறைபாடுகளைச் சொல்ல மனமில்லாத நிலைமை மற்றொரு பக்கம், இத்தனையும் சேர்ந்து நெருக்கவும், "எல்லாம் எனையாளும் ஈசன் செயல்" என்றே அவர் தியானித்து வந்தார்.

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு உயிர் அலமந்தபோது அஞ்சேல் என்று அருள் செய்யும் பெருங்கருணைத் தடங்கடல் அடியவரான நம் பாரதியார் இடுக்கண்ணை நீக்கலுற்றான். "குவளை" கிருஷ்ணமாச்சாரியார் என்பார் எதிர்பாராதபடி புதுச்சேரிக்கு வந்து பாரதியாரைக் கண்டார். உள்ள நிலைமையைத் தெரிந்துகொண்ட அவ்வன்பர் இருள் நீக்கி ஒளி பரப்பும் இளஞாயிறுபோல் பாரதியாரின் மனோ இருளை நீக்கினார். தன்னுடைய அருமை நண்பர்களான பலபுதுச்சேரிப்பிரமுகர்களைப் பாரதியாருக்கு அறிமுகப்படுத்தி அவருக்குத் தகுந்த ஆதரவு காட்டும்படி வேண்டிக்கொண்டார். மற்றுமுள்ள உதவிகளைப் பாரதியாருக்கு செய்து கொடுத்து மகிழ்வித்தார். இந்த நிகழ்ச்சியைக் குறித்துத்தான் "கண்ணன் என் சேவகன்" என்ற பாடலைப் பாரதியார் பாடினர் போலும்! புதுவை நகரின் பளிங்கு மண்டபங்களும், நேராகச்செல்லும் நீண்ட மாடவீதிகளும், பந்தி பந்தியாக அழகுற அமைந்துள்ள ஆவண வீதிகளும் கண்ணைக் கவரத்தக்கக் கடற்கரை ஓரங்களும், வண்ணமலர் காக்களும், தோட்டங்களும் நம் கவிஞர் உள்ளத்திற்கு மட்டடங்கா மகிழ்ச்சியை அளித்து வந்தன.

பாரதியார் புதுவை வந்து சேர்ந்த சில வாரங்களுக்குப் பின் 'இந்தியா' பத்திரிகையும் அவரோடு தோழமை கொண்டாட அங்கு வந்து சேர்ந்தது. அக்காலத்தில் பத்திரிகைத் தொழில் நடத்துவது தேர் ஓட்டுவது போன்றதுதான். அதிலும் பிரஞ்சு சர்க்காரின் சட்டங்கள் அதிக முடுக்கானவை. எனினும், பாரதியார் 'இந்தியா' பத்திரிகையைத் தகுந்த முறையில் நடத்தி வந்தார். கவிஞனின் செல்வ நிலையும் அவ்வளவு மோசமாக இராமல் சிறிது கண்ணியமாகவே இருக்கத் தலைப்பட்டது. இக்காலத்தில்தான் அவருக்குப் பெண் குழந்தை பிறந்தது. பெற்றோர் இல்லத்தில் வதிந்து வந்த செல்லம்மாள் பாரதி தன் கணவனின் விருப்பப்படி அக்குழந்தைக்கு 'சாகுந்தலா' என்று பெயரிட்டனர்.

சிறிது காலத்திற்குப் பிறகு பாபு அரவிந்த கோஷ் தேச விடுதலைக்குப் போராடிய குற்றத்தினால் புதுவை நகர் வந்து புகுந்தார். அன்னார் வரவு பாரதியாருக்கு அமர விஜயமாக இருந்தது. தினந்தோறும் அப்பெரியார் தங்கி உள்ள பேரில்லத்திற்குச் சென்று, அளவளாவி மகிழ்ந்து, கலந்து ஆலோசித்த வண்ணம் தன் தேச உத்

தாரணப் பணியை அதிக உற்சாகத்துடன் ஆற்றி வருவாராயினர். தென்னாட்டில் புத்துணர்ச்சி பெற்ற இளைஞர்களில் பலர் புதுச்சேரியையே புகலிடமாகக் கொண்டு நம் பாரதியாரிடம் வந்து சேர்ந்தனர். அவரிடம் வந்து சேர்ந்தவர்கள் சுமார் முப்பது பேர் வரையிலும் இருக்கலாம். எனவே, புதுவை நகர் தென்னாட்டுச் சுதேசிகளுக்குத் தங்குமிடமாகவும் தொண்டு செய்யத் தக்க தாயகமாகவும் மாறிற்று. இத்தருணத்தில் உண்மை தேச பக்தரும் புலமை மிக்க செந்தமிழ்ப் புரவலருமான வ. வே. சு. அய்யரும் அங்கு வந்து தன் குடித்தனத்தை ஏற்படுத்தினர். 'இந்தியா' பத்திரிகை அதிக காலம் நடத்தப்பட முடியாமல் நிறுத்தப்பட்டது. 'கர்மயோகி' என்ற பத்திரிகையும் சில ஆண்டுகள் பணியாற்றிப் பின்னர் மறைந்தது. 'தருமம்' என்ற பத்திரிகை பின்னர் உதயமாயிற்று. பிரஞ்சு தத்துவ ஞானியான ரிஷார் என்ற பெரியார் அரவிந்தரைக் காண வந்தபொழுது இத்தவலறுந் தொல் கேள்வித் தன்மையுடையார் குழுவில் கலந்து ஆனந்தமடைந்ததினால் இக்குழுவினரை விட்டு நீங்க மனமில்லாமல் புதுவையிலேயே தங்கிவிட்டார். வேதங்கள், வேதாகமங்கள், நீதி நூல்கள், இலக்கியங்கள் முதலானவைகளில் பாரதியார், அரவிந்தர், ரிஷார் முதலானவர்கள் அதிக ஈடுபாடு கொண்டு ஆராய்ந்து, உண்மைகளைத் தெளிந்துணர்ந்து கலந்த மனப்பான்மையராய் வாழ்ந்து வந்தனர். "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்றபடி, புதுவை மாநகர் சான்றோர் நிலவும் கலைக் கழகமாக மிளிர்ந்தது.

பாரதியார் வாழ்க்கை அடிக்கடி அமர்க்களமாகவே இருந்தது. தென்னாட்டில் சுதேசி இயக்கம் அதிகமாகத் தலையோங்கவே, புதுவையிலிருந்த தேச பக்தர்கள் அதிகமாகத் துன்புறுத்தப்பட்டனர். ஒரு நாள் பாரதியார் வீட்டில் இல்லாத சமயம் பார்த்துப் போலீஸார் உள்ளே நுழைந்து சர்ச்சை செய்து ஆண்டிருந்த கடிதங்களையும் பத்திரிகைகளையும் கைவசமாக்கிச் சென்றனர். வீடு திரும்பிய பாரதியார், இதைக் கண்ணுற்று மனங் கொதித்தனர். மனிதனுக்கு மனிதன் அடிமையாக இருக்கும் வாழ்வு ஓர் வாழ்வாகுமா? என்றார். மாண்பு மிக்க மனிதப் பிறவி இத்தனை இன்னல்களுக்கு ஆளாகும்படிச் செய்யும் அரசாங்கத்தாரின் பெருமை எத்தனை சிறுமை உடையதாகும்! என்றபடி எல்லாம் கூற ஆரம்பித்தார். பாரதியாரின் உறவினர்களில் சிலர் அவர்

மீது பொறுமை கொண்டு அரசாங்கத்தாருக்கு வேண்டிய சில உளவு களையும் சொல்லியதுண்டு. சிறிது காலத்திற்குப் பின் பத்திரிகை யாவும் நிறுத்தப்பட்டன. ஊதியம் பெறும் வழி ஒன்றும் இல்லை. என் செய்வார் அறிஞன்? வெளியூர்களிலிருந்து அனுப்பப் படும் கடிதங்களும் மணியார்டர்களுங்கூட போலீஸாரால் கைக் கொள்ளப்பட்டன. "இடுக்கண் வருங்கால் நகுக" என்ற தமிழ் மறையை நினைந்து நினைந்து தன்னைத் தேற்றிக் கொண்டார் பாரதி யார். வீட்டுக் காசைப் படுவாரை வீட்டைவிட்டுத் துரத்தியே வேட்டாண்டியாய் உலகில் ஓட்டாண்டியாக்குவார்க்குத் தெண்ட னிட்ட முறையிலேயே பாரதியார் வாழ்க்கை நடந்து வந்தது.

புதுவையில் தேர்தல் என்றால் மக்களுக்கு ஓர் கண்டம் என்றே சொல்லலாம். தேர்தல் நடக்கின்ற காலங்களில் பிரஞ்சு இந்தியச் சட்டங்கள் பாதுகாப்பு முறை நீங்கி எழுத்தளவிலேயே நிற்கும். தீமை செய்தோரை அரசாங்கச் சட்டங்கள் தீண்டா. நன்மை செய் தோரைப்பற்றி நவிலா. இத்தன்மையான சந்தர்ப்பம் பாரதியார் தம் மனைவியோடு புதுவையில் வாழ்ந்த காலத்தில் ஏற்பட்டது. தேர்தல் நடந்த காலத்து, செல்லம்மாள் பாரதியும் மற்றுமுள்ளார் மனைவிமார்களும் பாதுகாப்பான ஓர் நண்பர் வீட்டில் இராக்காலங் களைக் கழிப்பார்களாம். பாரதியார், வ. வே. சு. அய்யர் முதலிய சுதந்திர வீரர்கள் பாபு அரவிந்தர் இல்லத்தில் பொழுதைக் கழிப் பார்களாம். நன்மைக்காகப் போராடும் சுதேசி வீரர்கள் இம்முறை யில் நடந்துகொண்டது இகழ்ச்சிக் குரிய செயலென்று சிலர் கருதலாம். அதுவன்று; புகழ்ச்சியேயாம்! இவ்வுலகம் நிலைப் பதற்குக் காரணம்:—

"தனக் கென முயலா நோன்றாள்
பிறர்க் கென முயலுந ருண்மையானே"

என்ற புறப்பாட்டடிகள் ஈண்டு நினைவு கூர்தற்குரியது.

சுதந்திரப் போராட்டம் 'வந்தே மாதரம்' என்ற முழக்கத்தில் நின்றதிலிருந்து, அச்சொல்லைச் சொல்லியவர்கள் யாராகவிருப்பினும் சிறைத்தண்டனை என்பதாக ஏற்படலாயிற்று. சுதந்திரத்திற்குப் போராடும் மக்கள் முதன் முதலாகத் தங்களுக்கு உரிமையான குடும்ப சுதந்திரம், சரீர சுதந்திரம், சொத்து சுதந்திரம், வாக்கு

சுதந்திரம் யாவையையும் பறிகொடுத்தார்கள். இத்தகைய கொடிய தண்டனையால் மக்களிடையே அதிகமான உணர்ச்சியும் விழிப்பும் உண்டாயிற்று. அப்பொழுதுதான் பாரதியார் தியாகத்தையும், சத்தியத்தையும், ஜீவகாருண்யத்தையும் இந்திய மக்களுக்குத் தன் பாடல்களின் மூலம் உபதேசித்து வந்தார். செயற்கரிய செயலைச் செய்யவேண்டுமெனின் தன்னல இழப்பும் தைரியமும் இன்றியமையாதன என்பதே அவரது மந்திர உபதேசம். "மானம் சிறிதென் றெண்ணி வாழ்வைப் பெரிதென்றெண்ணும்" என்ற பாடலடிகள் பாரதியார் வாயினின்றும் சிந்திய மோகன முத்துக்கள். அடிமை வாழ்வு ஆன்ம வாழ்விற்கு விரோதமானது என்றும், அவ்வாழ்வை அறவே அகற்றிச் சுதந்திர வெள்ளம் பாரதநாட்டின் நிலப்பகுதியிற் பாய்ந்து மக்களைத் தழைக்கச்செய்து சாந்தியைக் கொடுக்க வேண்டும் என்றும் விரும்பிய அப்பேரறிஞன், பராசக்தியின் கருணையைப் பன்முறை வேண்டி நிற்பதைக் காணுங்கால், கள்ளத்திருக்கு ஓய்ந்த உள்ளத் திருக்கோயிலுள் இறைவன் குடிகொண்டுள்ளான் என்பதேயாம்.

புதுவை வாழ்க்கையில் இன்னும் சில நிகழ்ச்சிகள் அறிந்து இன்புறத்தக்கன. தன் மனைவியார் சமையலுக்கென்று "அரிசி இல்லையே" என்றால், உடனே பாரதியார் பலர் முன்னிலையில் அங்ஙனம் கூறவேண்டாம். "அகரம் இகரம்" என்று சொல்லவேண்டும் என்பாராம். "இல்லையென்ற கொடுமை உலகில் இல்லையாக வைப்பேன்" என்று உணர்ச்சியோடு கூறுவாராம். சில நண்பர்கள் ரகசியப் போலீஸாரது தொந்தரவினால் பாரதியாரைப் பார்க்கமுடியாமல் இராக்காலங்களில் வெகுநேரம் அவர் வீட்டில் தங்கி உரையாடிச் செல்வார்கள். அவ்வமயம் தான் பாடிய சில பாடல்களை அவ்வன்பர்களுக்குப் படித்துக் காண்பித்துச் செவிச்சுவை அளிப்பார். கவிதா சக்தி பெரிதும் படைத்துள்ள இம்மகா கவியின் போற்றலைக் கண்டு அவ்வன்பர்கள் இறும்பூதெய்தலோடு தங்களிடமுள்ள பொற்காசுகளையும் பெற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தி வழங்கிச் செல்வார்களாம். என்னே! கவிஞனின் மாண்பு! அறிவுடையார் எல்லாமுடையாரன்றோ!

பாரதியார் பிரஞ்சு மொழியைக் கற்றுக் கொண்டதுமன்றி தெலுங்கு மொழியிலுள்ள தேனையும் தனது சிறு பிராயத்தில்

படித்துத் தேர்ந்து நுகர்ந்திருந்தார். ஆங்கில மொழியிலும் அதிகப் பயிற்சி கொள்வாராயினர். ஆங்கிலம் பேசுந் திறம் பலரால் புகழப் பட்டிருப்பினும், அன்னார் ஓர் சமயம் ஓர் ஆங்கிலேயனுன உயர்தரப் போலீஸ் அதிகாரியிடத்தில் புதுவையில் சந்தித்துப் பேசித் தனது வாரண்டை நீக்கும்படிக் கோரினர். அத்துரைமகன் பாரதியார் வேண்டுகோளைப் பற்றிக் கவனிப்பதாகவும் இத்தன்மையான முறை யில் தன்னுடன் எந்த இந்தியனும் இத்துணை அழகும் இனிமையும் கலந்த ஆங்கிலத்தைப் பேசியதில்லை என்பதாகவும் சொல்லிப் புகழ்ந்து பாராட்டினன். உள்ளத்தில் தெளிவு ஏற்பட்டமையின் வாக்கினிலும் ஒளி உண்டாயிற்று.

பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு, குயில் பாட்டு முதலியன புதுவையில் வாழ்ந்த பொழுதுதான் எழுதியிருக்க வேண்டுமென்பது துணிபு. பாரதியாருக்குத் தேவையானவை மூன்றே பொருள். அவையாவன: தனிமை, காகிதம், எழுதுகோல். இந்த மும்மூர்த்திகள் சேர்ந்தால் பாடல் படைக்கப்பட்டுவிடும். அப்படைப்பின் இனிமை யில் பார்ப்போரும், கேட்போரும், பள்ளத்திலிறங்கும் வெள்ளம் போல் பாய்ந்து விடுவர். பாரதிப் புலவனின் சிறப்பு ஓர் தனிச் சிறப்பே ஆகும்!

## வாரண்டு நீங்கியது

ஓர் நாள் பாரதியார் தனது இல்லத்தின் மேன்மாடியில் தனக் குத் தெரிந்த நண்பரிடம் உரையாடிக் கொண்டிருந்தார். சாதாரண மாகப் பாரதியார் மென்மையான குரலில் பேச மாட்டாதவர் அன் றைய தினம் முணுமுணுத்துப் பேசினர். தானும் அந்நண்பரும் கீழே இறங்கி வெளியிற் சென்றூர்கள். செல்லம்மாள் பாரதி சந்தேகங் கொள்ளாது தனது கணவனர் வருகையை அன்று மணி 12 வரையிலும் எதிர்பார்த்திருந்தனர். பாரதியாரோ வரவில்லை. இவ்விஷயம் அக்கம் பக்கத்திலுள்ள நண்பர்களுக்கு எட்டியபோது அவர்களும் தேடிப் பார்த்துக் காணுமையால் ஏதோ சூது நடந் திருக்க வேண்டும் என்று கருதி மனங்கலங்கி இருந்தார்கள். பாரதி யாரிடம் வந்து பேசி அவரை அழைத்துச் சென்றவர் அரசாங்கத் தினருக்கு மறைமுகமாக வேலை செய்து கைக்கூலி வாங்கும் கயவன் என்று புலனுயிற்று. இல்லத்திலுள்ளவர்களது நிலைமையைக் கூறுது

விடுத்தலே நலம். தாம் மேவன செய்தொழுகும் கயவர்கள் கட்டுப் பாடற்றுத் தீயொழுக்கமே புரியும் திறத்தவர்களாதலான், நம் பாரதியாரிடம் நம்பிக்கைக் கிடனான வார்த்தைகளைச் சொல்லி, அவர் மீதிருந்த 'வாரண்டு நீங்கியது' எனப் புனைந்துரைத்துத் தங்கள் மோட்டார் வண்டியில் சென்னைக்கு அழைத்துச் செல்லலா யினர். "மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின், அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு" என்ற பொய்யாமொழி என்றும் பொய்யாமொழி யன்றோ! திருப்பாப்புலியூர் சமீபம் சென்ற காலை பாரதியாரின் ஆப்த நண்பராகிய சென்னை வக்கீல் ஒருவர் எதிர்பாராதபடி இச் செயலைக் கண்ணுற்று, தனது அரிய நண்பரை மீட்பதற்குத் தீர் மானித்தார். பாரதியார்மீது இருந்த வாரண்டானது இன்னும் நீங்க வில்லை என்பது அன்னாருக்கு உறுதியாகத் தெரியுமாதலால் பாரதி யாரை அழைத்து வந்த கீழ் மகனுக்குத் தகுந்தபடி சில வார்த்தை கள் சொல்லி அவனைத் தனியே செல்லும்படி செலுத்தி விட்டார். பின்னர் பாரதியாரைத் தன் நண்பர் இல்லத்திற்கு அழைத்துச் சென்று உணவு முதலானவைகள் அளித்ததுமன்றி, புதிய ஆடை களும் மலர் மாலைகளும் வாங்கி வழங்கினர். புதுவை நகரில் பாரதி தாசர்கள் ஏங்கி நின்று தவிக்கின்றனர். இரண்டாவது தினம் சென்னை வக்கீலும் பாரதியாரும் உற்சாகமான முறையில் வந்து மோட்டார் வண்டியினின்றும் இறங்கினர்கள். செல்லம்மாள் பாரதி யின் வாடிய முகம் அன்றலர்ந்த செந்தாமரையை நிகர்த்தது; பாபு அரவிந்தர், வ. வெ. சு. அய்யர் முதலான அன்பர்கள் நடந்த வரலாற்றை வக்கீலிடம் முழுதும் கேட்ட பின் மகிழ்ச்சியும் ஆச்சரிய மும் அடைந்தனர். வக்கீல் நண்பர் உள்ளன்பை மெச்சியதோடு அவர் செய்த பேருபகாரத்தையும் பலபடியாகப் போற்றிப் புகழ்ந் தனர்.

சில தினங்களுக்குப் பின் வாரண்டை நீக்கிய வம்பன் பாரதி யாரைக் காணுமாறு அவர் இல்லத்திற்கு வந்தான். கவிஞர் பெரு மானும் அன்னாருக்கு முகமன் கூறி வரவேற்றனர். வீட்டிலுள்ள வர்களோ பொறுக்க முடியாத கோபத்தை முகத்தினால் காண்பித் தனர். எவ்வுயிரும் தன் உயிர்போற் கருதும் நம் ஆத்ம ஞானியார் அவரிடம் அன்பு பாராட்டிப் பேசியபொழுது ஓர் பாடலையும் இயற்றிப் பாடிக் காண்பித்தார். அது வருமாறு:

"பகைவனுக் கருள்வாய்—நெஞ்சே
பகைவனுக் கருள்வாய்
புகை நடுவினில் தீயிருப்பதை
புவியில் கண்டோமே—நெஞ்சே
பகைநடுவினில் அன்புருவான நம்
பரமன் வாழ்கின்றான்—நெஞ்சே
தின்ன வரும்புலி தன்னையு மன்பொடு
சிந்தையிற் போற்றிடுவாய்—நெஞ்சே
அன்னை பராசக்தி அவ்வுரு வாயினள்
அவளைக் கும்பிடுவாய்—நெஞ்சே
பகைவனுக் கருள்வாய்—நெஞ்சே
பகைவனுக் கருள்வாய்!"

தம்மை இகழ்ந்தமை தாம் பொறுப்பதன்றி, தம்மை இகழ்ந்தவர் எரிவாய் நிரயஞ் சேராதவாறு, பரமனைப் பரிந்து வேண்டும் சான்றோர்களைப்போல், கவிஞர் பெருமான் தனது பகைவனை தன் முன்னுள்ள நண்பன் வீணாகாதவாறு இறைவனை இறைஞ்சிக் கேட்டல் எழிலுடைத்தன்றோ! நெஞ்சொடு கிளத்தலாகப் பாடிய பாடலின் இனிமை நினைந்து இன்புறத்தக்கது. பாரதியார் முன்னிலையில் இருந்த கயவன் தான் செய்த தீச்செயலுக் கிரங்கி கவிஞர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். தனது குற்றத்தைப் பொறுத்தருளும்படி வேண்டினான். பாரதியார் அவனுக்கேற்ற ஆறுதல் மொழிகளைச் சொல்லி ஆற்றினார்.

ஓர் சமயம் பாரதியார் கழுதைக் குட்டியைத் தன் தோளில் ஏற்றிக்கொண்டு முத்தமிட்டுக் கொஞ்சினார். செஞ்சடைப் பெருமான் ஒருகால் பன்றிக் குட்டிகளுக்குப் பாலூட்டிய புராண வரலாறு ஈண்டு நினைவிற்கு வருகிறது. சில சமயங்களில் பாரதியார் செய்கைகளும் பித்தன் செயல்களாகவே காணப்பட்டன. நெருக்கமுடையவர்கள் தன் செயலைக் கண்டு பித்தன் என்று அழைத்த பொழுது பாரதியார், "அப்பெயர் விசேடமுடையதே! சிவனே பித்தனாக உள்ளான்" என்றாராம். தம்பிரான் தோழர் தனது தேவாரப் பாசுரங்களில் சிவபெருமானை, "பித்தா பிறைசூடி" என்று அழைத்தது பெருமையாகவே கொள்ளப்பட்டதன்றோ! பரமஹம்சரான இராமகிருஷ்ணர் தன்னை ஒரு பித்தன் என்றே அடிக்கடிச் சொல்லிக்கொண்டது பொருள் பொதிந்த வாசகமேயன்றி வேறல்ல.

திருநாளைப் போவார் தான் தில்லை மன்ருடியைக் காண வேண்டு மென்று வேதியனிடம் பன்முறை ஓலமிட்டுக் கேட்ட காலையில், "பித்தம் பிடித்தவனே நீ!" என்ருர் வேதியர். நந்தனும், "பித்தம் தெளிய மருந்தொன்றிருக்குது பேரின்ப மன்றுள்ளே" என்ருர். இத்தன்மையான பித்தம் எப்பித்தங்களிலும் சேராத பெரும் பித்த மன்ரே!

## கண்ணிற்கு மைதீட்டியது

புதுவை நகரில் வாசனைப் பொருள்கள் வியாபாரியான ஒரு முகம்மதியர் பாரதியார் வீட்டிற்கு ஒரு தினம் வந்தார். வீட்டிலிருந் தோர் அவரிடமிருந்த வாசனைப் பொருள்களை விலைகேட்டு வாங்கிக் கொண்டனர். வியாபாரி தன் கையில் வைத்திருந்த அஞ்சனச் சிமிழைத் திறந்து அப்பொருளின் மேம்பாட்டை விரித்துரைத்தார். கண்ணிற்கு இனிமையையும் குளிர்ச்சியையும் கொடுக்கக்கூடிய மையைத் தமிழ் நாட்டு மக்கள் அன்று காலந்தொட்டே அணிவ துண்டு. "மையாடு கண்ணி பங்கன்" எனவும், "மைத்தடங் கண்ணி மணுளன்" எனவும், தமிழ் நாட்டு ஆன்ரோர்கள் கூறிப்போந் துள்ளதினல் கண்ணுக்கு மையிடுதலைப் பண்டைத் தமிழ் மாதர் விசேஷமாகக் கொண்டாடியது தெரிய வருகிறது. நம் பாரதியார் தமிழ்ச் செல்வரானபடியால் தம் கண்ணிற்கும் மையிட்டு எழுத இச்சை கொண்டார். அந்த வியாபாரி சொல்லிய முகவுரையில் மோகங்கொண்டு அவர் கொடுத்த மையை வாங்கித் தன் அருள் சுரக்கும் கண்களில் அணிந்து கொண்டார். வியாபாரி தன் கடை யைக் கட்டிக்கொண்டு அகன்று விட்டான். தீட்டப்பட்ட மை கண் களுக்கு அழகைச் செய்யாது அழுகையை உண்டு பண்ணியது. குளிர்ச்சியைக் கொடாமல் எரிச்சல் உண்டாக்கியது. பாரதியார் எளிய மனத்தவராதலால் யாரையும் வெகுண்டு உரைக்காதவர். என்ன செய்வார் இனி! கண்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக வேறு வைத்தியரை அழைத்து வேண்டிய சிகிச்சைகளைச் செய்து கண்ணைக் காப்பாற்றினர்.

## ஆடை வழங்கல்

தன் அருமை நண்பரான செட்டியார் வீட்டுத் தையற்காரனை அழைத்து, தன்னிடமிருந்த புதிய துணிகளைக் கொடுத்து வீட்டி

ஹுள்ளாருக்கும் தனக்கும் உடைகளைத் தைத்துக் கொடுக்கும்படி சொல்லியதுண்டு. தனக்கு வேண்டியதான ஒரு சட்டையும் தலைக்கு வேண்டியதான ஒரு குல்லாயும் செய்து தரும்படி தெரிவித்தார். தையற்காரன் விரும்பிய கூலி கொடுப்பதாகவும் குல்லாய் முகத்திற் கேற்ற மலர்ச்சி உடையதாகவும் இருத்தல் வேண்டுமென்பது பாரதியாரின் உத்தரவு. தையற்காரன் தன்னைத்தவிர மற்றையோர்க்குச் செய்துகொடுத்தவைகள் ஒருவாறு பொருத்தமாயின. நம் பாரதியாரின் சட்டை இரண்டு பாரதியார்கள் சேர்ந்து அணிந்து கொள்ளக் கூடியதாகவும், குல்லாய் முகம்மதியர் முறைக்கு ஏற்றதாயும் இருந்தன. துணியும் கெட்டுவிட்டது; அணிந்து கொள்ளலாமென்ற ஆசையும் பாழாய்விட்டது. தண்ணளி உடைய நம் தவமகன் அத்தையற்காரனைக் கோபிக்காமல் அவன் விரும்பிய கூலிக்கு மிகுதியாகவே கொடுத்து அவனை மகிழ்வித்தனர். அன்று மாலைக் காலத்தில் கடற்கரைக் காட்சிக்குச் செல்லும் எண்ணம் ஏற்படவே புதிய உடைகள் அணிந்து போகலாம் என்ற விருப்பமும் உடனெழுந்தது. உடைகளைக் கொண்ட முறையில் தன்னை அலங்கரித்துக் கொண்டு குல்லாயையும் அணிந்து வெளியே சென்றார். செல்லும் பொழுது பலர், இவரை உற்று நோக்கிய வண்ணமாகவே சென்று கொண்டிருந்தனர். பாரதியாருக்கு வழிச் செல்பவர்களெல்லாம் தன் சட்டையையும் குல்லாயையும்தான் தீவிரமாக நோக்குகின்றனர்; இவைகளை அணிந்து கொள்வது பொருந்தா ஒழுக்கம் போன்றது போலும் என்று நினைத்தார். வருகிற வழியில் ஒரு பிச்சைக்காரன் தென்பட்டான். “அய்யனே! இங்குவா, இவைகளை எடுத்துக்கொள்” என்று சொல்லிப் புன்முறுவலோடு தன் சட்டையையும் குல்லாயையும் அவனுக்கே வழங்கிவிட்டார். தியாகம், ஈத்துவக்கும் இன்பம் அறிந்தார் மாட்டே காணப்படும். இது போன்றது சீவகன் கேமசரியாரிடத்தினின்றும் நீங்கித் தனிவழியே செல்லுங் காலையில், தான் கண்ட வழிப்போக்கன் ஒருவனுக்குத் தன் அணிகலன்கள் யாவையையும் ஈந்து, “நீர் போம்” என்று கூற, அக்கலன்கள் பெற்றான் சீவகனை வலங்கொண்டு தொழுது போயினன். இவ்வரலாற்றுப் பகுதி சிந்தாமணி நூலில் படித்து இன்புறத்தக்கது. அத்தன்மையிலேயே தான் விரும்பிய ஆடைகளைத் தயங்காது பிறர் மகிழக்கொடுத்து மகிழ்ச்சிகொள்ளும் பெற்றிமை அவஞானம் அறத்துறந்த அடியார்கள் கண்ணதாம்.

## புதுவை நீக்கம்

வாள்களான நாட்கள் செல்லச் செல்ல, பாரதியாரின் மனம் பரிபக்குவ நிலைமையை அடைய ஆரம்பித்தது. மும்மலங்களில் முதன்மையான ஆணவ மலம் அவரைவிட்டு ஒதுங்க எண்ணியது. இகவாழ்விலுள்ள இன்பங்களை இத்தன்மையதெனக் கண்ட நம் கவிஞர் பெருமான் தனது வாழ்நாளில் இனி அடைய வேண்டியது பரஞான முத்தியே எனத்தெளிந்த உணர்ச்சியராய், பல சமயங்களில் யோகத்திலிருப்பதும் மௌன விரதங்கள் அனுஷ்டிப்பதும் நான்கு முழ உடையைத் தரிப்பதுமாக இருந்தார். இத்தகைய செயல் எளிமை யாகக் காணப்பட்டமையின், பலபேர் அவரைப் பரமனை நாடும் பற்றற்ற துறவி எனக்கொள்ளாது பித்தன் என்றே கொண்டனர்.

நிற்க, 1914-15-ஆம் ஆண்டில் 'சுதேசமித்திரன்' பத்திராதி பராக விளங்கிய திரு. அரங்கசாமி அய்யங்கார் பாரதியாருக்குத் தகுந்த உதவி செய்தார். வேண்டிய கட்டுரைகளை எழுதி அனுப் பினால் மாத ஊதியம் பாரதியாருக்குக் கொடுக்கப்படும் என்று அப்பெரியார் தெரிவித்திருந்தார். எழுதுவதில் நிபுணத்வம் பெற் றிருந்த அரங்கசாமி அய்யங்காரவர்களின் கூட்டுறவால் 'சுதேசமித்தி ரன்' பத்திரிகை அக்காலங்களில் அரிய புகழும் பெருமையும் பெற்று விளங்கியது. பாரதியாருக்குக்கிடைத்த இத்தன்மையான வாய்ப்பு பாலற்று ஏங்கிக்கிடந்த குழந்தை எழுந்து நடப்பதுபோல் தோன் றிற்று. ஹாஸ்யம் நிறைந்த சிறு கதைகளையும் அறிவுச்சுடர் விளங்கு கின்ற வியாசங்களையும், எழிலொழுகும் இன்னிசைப் பாடல்களையும் நம் கவிஞர் பெருமான் எழுதிக் குவித்தனர். பாரதியாரது பொரு ளாதார நிலை சிறிது செழித்தது. தேச விடுதலைக்காகப் போராடிய காங்கிரஸ் ஸ்தாபனத்தின் 50 ஆண்டுகளின் சரித்திரத்தையும் பாரதி யார் 'மித்திர'னில் எழுதினர். தாவர நூல் ஆராய்ச்சி வல்லுநரும் அறிவியற் கலைஞருமான ஸ்ரீமான் ஜகதீசச் சந்திரபோஸ் எழுதிய அரிய தாவர சாஸ்திர நூலை "ஜீவவாக்கு" என்ற தலையங்கத் துடன், தமிழில் பாரதியார் மொழி பெயர்த்து எழுதி வாலாயினர். இந்நூல் ஒன்றே பாரதியாரின் மொழி பெயர்ப்புத் திறனை எடுத்துக் காட்டுதற்குப் போதிய சான்றாகும்.

சிறிது காலத்திற்குப் பின் தன் சொந்த ஊரையும் நண்பர்களை யும் பார்க்கவேண்டும் என்ற தாகம் விஞ்சவே, சிறைவாசம் தனக்

குக் கிடைத்த போதினும் பாதகமில்லை, தனது தாய் நாட்டைக் காணவேண்டுமென்ற உறுதியைக் கொண்டார். இக்காலத்தில் 'ஹோம் ரூல்' இயக்கத்தின் அன்னையான அன்னிபெஸண்ட் அம்மையாரும், தென்னுப்ரிக்கா சத்தியாகிரகத்தை நடத்திப் புகழ் கொண்ட காந்தியடிகளாரும், உலகம் போற்றும் உத்தம கவிஞரு மான தாகூரும் நன்கு மதிக்கப்பட்டுச் சிறப்படைந்தனர். 1919-ஆம் ஆண்டு திடீரென்று ஓர் நாள் தன் அருமைக்காதலி செல்லம்மாளை அழைத்துக் கொண்டு புதுச்சேரியை விட்டு நீங்கினர். சென்னைக்குச் செல்லவருபவர்கள் போலீஸ் அதிகாரிகளால் கடலூரில் தடை செய்யப்பட்டனர். பாரதியார் காரணம் என்ன என்று கேட்க, அதிகாரிகள் தங்களிடம் இருந்த வாரண்டே உத்தரவு என்று கூறிச் சிறை செய்தனர். சில தினங்கள் சென்றபின் நம் கவிஞர் பெருமான் சிறையினின்றும் விடுதலை பெற்றனர். விடுதலை பெற்ற காலத்தில் அரசாங்கத்தார் ஏற்படுத்திய உத்தரவு என்னவெனில், பாரதியார் தன் நோக்கப்படிப் பல ஊர்களுக்கும் சென்று பிரசாரம் செய்யக்கூடாதென்றும், சில குறிப்பிட்ட ஊர்களில்தான் தக்க கண்காணிப்போடு வசிக்கவேண்டும் என்றும் குறிப்பிடப் பட்டிருந்தது. விடுதலை அடைந்த பாரதியார் சென்னைக்கு வந்து சேர்ந்தார்.

பின்பு தன் வாழ்க்கைத் துணையோடு கடையம் என்ற கிராமத்தில் சிறிது காலம் கழித்தார். 'சுதேசமித்திர'னுக்கு எழுதி வரும் தொண்டு நிற்காமலேயே நடைபெற்று வந்தது. அக்கிராமத்தில் உள்ள பல பேர்களிடம் பாரதியார் பேரன்பு காட்ட ஆரம்பித்தார். ஒரு சமயம் காக்கை விரும்பும் கனியான வேப்பம் பழத்தையும், வழிநடைப் பிரயாணிகள் விரும்பும் புளியம் பழத்தையும் அக்கிராமச் சிறுவர் தின்று கொண்டிருப்பதைப் பார்த்த பாரதியார், அவர்களை அணுகி, "இப்பழங்களை ஏன் சாப்பிடுகிறீர்கள் ?" என்றார். அதற்கு அவர்கள், "பசி மிகுதியால் உணவிற்காகச் சாப்பிடுகிறோம்" என்றனர். மனம் இளகிய பாரதி, தானும் அவர்களோடு சேர்ந்து வேப்பம் பழத்தையும் புளியங்காயையும் சாப்பிட்டார். என்னே ! இவரது எளிமை ! இக்கிராமத்திலுள்ள அம்மன் கோவிலைத்தான் நம் பாரதியார் "ஜகத் சித்திரம்" என்ற நூலில் அழகுற எழுதிப் போந்ததாகத் தெரிகின்றது.

சில சமயங்களில் பாரதியார் சமபந்தி போஜனம் செய்வதுண்டு. அச்செயல் அக்கிராமத்திலிருந்த அந்தணர்களுக்கு அடங்கா வெறுப்பை உண்டு பண்ணியதாம். அக்கம் பக்கங்களிலுள்ள சிற்றூர்களிலிருந்து பல மதத்தினர் நம் பாரதியாரைக்கண்டு பேச வருவதுண்டு. ஓர் சமயம் பல முஸ்லீம் நண்பர்கள் வந்தார்கள். அவர்களை இன்முகங்கொண்டு அன்புகாட்டி, 'குர் ஆன்' வேதத்தின் உயர்வுகளை அவர்களுக்கு எடுத்து உபதேசித்தார். அக்கூட்டத்தினர் பாரதியாரின் அருளுரையை வியந்து பாராட்டி ஆனந்தித்துச் சென்றனர்.

பாரதியார் பணம் இல்லாதவர் என்று சிலர் அவரைப் பரிகாசம் செய்து வருவதுண்டு. ஒருநாள் தன் கையிலிருந்த 100 ரூபாயை எடுத்து, "ஏழை என்ற சொல் என்னிடம் இல்லை" என்று சொல்வது போல் தெருவில் வீசி எறிந்தார். வழிப்போக்கர்களும் இளைஞர்களும் கிடைத்தபடிப் பொறுக்கிக்கொண்டு பாரதியாரை வாழ்த்திச் சென்றனர். முல்லைக்குத் தேர் கொடுத்த பாரியின் கொடை பாரதியின் கொடைக்கு நிகராமாறு எங்ஙனம்? ஓர்நாள் உணவிற்குக் கார் நோக்கி வாழும் வானம்பாடியைப்போல் ஏங்கி நிற்கும் பாரதி 100 ரூபாயைத் தன்கையில் வைத்துக்கொள்ளாமல் வாரியிறைத்தது கொடையினும் கொடையன்றோ! "சிறியரே மதிக்கும் இச் செல்வம்" என்று கருதினர் போலும்!

ஓர் தினம் காயக சிகாமணி முத்தையா பாகவதர் ஸ்ரீ ராம நவமியின் காரணமாக அரி கதை செய்தார். அன்னார் கதையைத் தமிழகத்தில் அனுபவியாதவர் இல்லை என்றே சொல்லலாம். கதை முடிந்த பிறகு பாரதியாரும் அவரைச் சந்தித்துப் பேசினார். தான் பாடிய "ஜெயபேரிகை கொட்டடா! கொட்டடா!" என்ற பாடலைத் தான் பாகவதரிடம் படித்துக் காட்டினாராம். முத்தையா பாகவதர் பாரதியாரின் அருமை பெருமைகளை அறிந்தவராதலின் அப்பாடலை நன்கு சுவைத்ததோடு பாரதியாரையும் பலபடப்புகழ்ந்தார். செத்தாரைப் போலே திரிகின்ற ஜீவன் முக்தர் நிலை, உலக மக்களில் பலருக்குத் தெரியாதாகையால் பாரதியாரைப் பைத்தியக்காரன் என்று நினைத்து அங்கு வந்தவர்கள் யாவரும் அன்றைய தினம் பாரதியார் யார் என்பதை உணர்ந்து வெட்கித்தனர்.

# ஆணும் பெண்ணும்

எட்டய புரத்திற்குச் சென்று தங்கிய பாரதியார் பலராலும் கொண்டாடப்பட்டார். அநேக ஆண்டுகள் கழித்து வந்தமையால் பாரதியாரின் உள்ளக்கிளர்ச்சி ததும்பி வழிந்ததென்றே கூறலாம். பார்க்கின்ற நண்பர்களைக் கட்டித் தழுவுவதும் பெரியோர்களைக் காணில் அஞ்சலி செய்து வணங்குவதும், தான் முன்னர்ப் பயின்ற சோலைகளுக்கும் நீர்த்தடங்களுக்கும் சென்று உலாவி வருதலுமாக இருந்தார்.

ஓர் நாள் செல்லம்மாளை அழைத்துத் தோட்டத்திற்குத் தன்னுடன் வருமாறு கூறினார். நவயுக வாசனை பெற்ற பாரதியார் மனப்பான்மை செல்லம்மாளுக்கு ஒருவாறு உடன்பாடாயினும் எட்டயபுர மக்களுக்கு அறவே மனங்கொள்ளமுடியாத செயலாகும். எனினும், செல்லம்மாள் தற்காத்துத் தற்கொண்டார் பேணித் தகைசான்ற சொற்காக்கும் பெண்மணியாகையால், தனது கணவனார் கட்டளையை மறுக்க அஞ்சி அவருடன் தோட்டத்திற்குப் புறப்பட்டார். இருவரும் கைகோத்துச் சென்றனர். அக்காட்சி தென் கைலாயத்தில் அப்பர் சுவாமிகள் கண்ட காட்சியைப்போலவே இருந்திருக்கலாம்! "காதன் மடப்பிடியோடு களிறு வருவன" காட்சியைப் போன்று பாரதியாரும் செல்லம்மாளும் நடந்து சென்றனர். பார்த்தவர் சிலர் நாணமுற்று வெட்கித்தனர். இன்னும் சிலர், பார்த்தவுடன் பரபரப்பாகப் பேசலாயினர். இந்த நிலையைக் கண்ணுற்ற நம் கவிஞர் பெருமான் செல்லம்மாளைத் தேற்றினாராம். மக்கள் இன்னும் அறியாமையில் மூழ்கி இருக்கிறார்கள். சமத்துவமே உயிர் வாழ்க்கை என்று சொல்லிக் காட்டுவதற்கே "புதுமைப் பெண்" என்ற பாடல் எழுதப்பட்டது போலும்!

**"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்**
**அறிவிலோங்கி இவ்வையந் தழைக்குமாம்**
**பூணும் நல்லறத் தோடிங்கு பெண்ணுருப்**
**போந்து நிற்பது தாய்சிவ சத்தியாம்**
**நாணு மச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்**
**ஞான நல்லறம் வீர சுதந்திரம்**
**பேணு நற்குடிப் பெண்ணின் குணங்களாம்**
**பெண்மைத் தெய்வத்தின் பேச்சுகள் கேட்டிரோ."**

(புதுமைப்பெண்)

திருவனந்தபுரத்திற்குச் சென்றிருந்த சமயம் பாரதியார் மிருகக் காட்சிசாலைக்குச் சென்றார். செல்லம்மாள் பாரதியும் உடன் சென்றார். "காக்கை குருவி எங்கள் சாதி" என்று பாடிய கவிஞன் கொடிய மிருகங்களான சிங்கத்தையும் தனது இனத்தாராகவே கருத ஆரம்பித்தார். சிங்கம் அடைத்திருந்த குகைக்கருகே சென்றவுடன் அப்பிராணியைப் பாதுகாப்போனை அழைத்து அம்மிருக ராஜனைத் தான் தழுவிக் கொள்ளவேண்டும் என்றார். பக்கத்திலுள்ளோர் அனைவரும் திடுக்கிட்டனர். பாரதியார் யார் யாது சொல்லியும் கேளாமல், அக்காட்டரசனிடம் சென்று, "மிருகராஜா! கவிராஜ பாரதி வந்திருக்கின்றேன்; உனது லாகவ சக்தியையும் வீரத்தையும் எனக்குக் கொடுக்க மாட்டாயா? உள்ளொன்று வைத்துப் புறமொன்று செய்யும் சுபாவம் இல்லாது என்பதையும், அன்பு கொண்டோரை வருத்தமாட்டீர்கள் என்பதையும், இங்கிருப்போர் தெரிந்து கொள்ளும்படி உன் கர்ஜனையின் மூலம் தெரியப்படுத்து ராஜா" என்று கூறினர். ஒரு சிங்க முதுகின்மேற் கொள்ளும் சித்து புருஷன் பாரதியார் என்பதால் அச்சிங்கம் தனது உரத்த குரலில் ஒரு கர்ஜனை செய்தது. அனைவரும் ஆச்சரியப்பட்டனர். பின்னர் அம் மிருகத்தைப் பாரதியார் அணுகித் தடவிக்கொடுத்துச் சந்தோஷத்தோடு நீங்கினர். இச்செயல் பாரதியாரின் அஞ்சா நெஞ்சத்தின் ஆத்ம சக்தியை நன்கு வெளிப்படுத்துகின்றதன்றோ!

## திருவல்லிக்கேணி

பாரதியாரிடத்தில் வந்த ஒரு சிறந்த தேசபக்தர் தன் வறுமையைச் சொல்லிக் காட்டினர். மிகுந்த தியாகிகளும் நன்கு போற்றப்படாமல் அக்காலத்தில் வாழ்ந்து வந்தனர். தேசமக்கள் உணர்ச்சி அளவில் இருந்தனரே அன்றிச் செயலளவிற்கு வரவில்லை. தன் நண்பர் படும் வறுமை நோயைக் களைவதற்கான பொருள் தன்னிடம் இல்லாததை நினைந்து பாரதியார் மனம் தளர்ந்தார். சிறிது தொகையை மற்றொரு நண்பரிடம் பெற்றுவந்து அவரது துன்பத்தைத் துடைத்தார். பின்னால், பாரதிக்கவிஞன் பாடிய பாடல் "பாரத சமுதாயம்" என்பது. அப்பாடலில் கொடுத்திருக்கும் இவ்விரண்டடிகள் அதிதீவிர உணர்ச்சி உடையது என்னலாம்.

"தனியொருவனுக் குணவில்லை யெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்"

என்றுபாடிய உயிர்ப் பண்பும் திடச்சித்தமும் என்னே! ஈண்டு—

" இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான் "

என்ற குறளடிகள் ஒப்பிட்டு நோக்கி உணர்தற்குரியது.

தெய்வ வழிபாட்டைத் திடமாக இயற்றி வரும் நம் ஆத்ம ஞானி ஓர் நாள் எதிர்பாராத விபத்துக்காளாயினர். பஞ்சவர்க்குத் தூது நடந்து பாரதம் கைசெய்த பார்த்தசாரதி நின்றுலாவும் திருக்கோயிலில் தினந்தோறும் வழிபாடியற்றி வரும் நம் பாரதியார் தனக்குப் பழக்கமான அக்கோயில் யானையிடம் சென்றார். அவ் வமயம் அக்களிறு மதங்கொண்டு மதி மயங்கிக் கிடந்தது. சங்கிலி களால் பிணைக்கப் பெற்றிருந்ததைக் கண்ணுற்ற கவிஞன் அதன் நிலைமை தெரிந்தும், தான் என்றும் கொடுத்து வரும் பிரசாதப் பொருளாகிய பழம், தேங்காய் முதலியவைகளை அன்றும் கொடுப் பதற்குச் சற்று அருகே சென்றார். தன்னியல்பிழந்த அக்களிறு தனது கொம்பால் சிறிது சிலுப்பிற்று. பாரதியாருக்கு நல்ல காயம் ஏற்பட்டுத் தன்வசமிழந்து கீழே சாய்ந்துவிட்டார். ஜனத்திரள் பார்க்கின்றதே ஒழிய வேறு ஒன்றும் செய்ய முடியாது பிரலாபிக் கின்றது. யானை தன் அன்பனை ஒன்றும் செய்யாமல் கால்களி னிடையே கிடந்த வண்ணம் வைத்துக் கொண்டிருந்தது. பாரதி யாரின் நெருங்கிய நண்பரான குவளைக்கண்ணன் என்பார் யானைத் தொழுவத்திற் பாய்ந்து வெகு விரைவாகக் கவிஞர் பெருமானை அப்புறப்படுத்தினர். பிறகு நல்ல சிகிச்சைகள் செய்யப்பட்டு குண மானது.

இந்நிகழ்ச்சிகளுக்குப் பின் "கிலாபத்" இயக்கத்தில் ஈடுபட்ட அலீ சகோதரர்கள் சென்னைக்கு விஜயம் செய்தார்கள். காந்தி அடிகளாரும் உடன் வந்தார். இம்மாபெரும் தலைவர்களைப் பார்த்துப் பேசிய பாரதியாரின் மனம் பூரித்தது. உவகை ஓங்கியது. நாடு ஒரு காலத்தில் இத்தன்மையான சக்தி மைந்தர்களால் விடுதலை அடையும் என்று எதிர்கால இன்பத்தை மனதுள் ஏற்று மகிழ்ந் தார்.

சுமார் 1920-ஆம் ஆண்டிலிருந்தே நம் கவிஞர் பெருமானது மெல்லிய உடல் மெலிய ஆரம்பித்தது. வாழ்க்கையில் இன்னல்களை அதிகமாகக் கண்ட பாரதியார் உடல் நிலை தளர்ந்த போதினும்

மனநிலை தளரவில்லை. உறுதி குன்றவில்லை. நாவில் "நாராயணு" என்ற சொல்லும், மனதில் ஆத்ம சிந்தனையும், இனி அடைய வேண்டியது அமர வாழ்வேயன்றி வேறொன்றுமில்லை என்ற உள்ளத்தராய் தனது வாழ்க்கையை நடத்தி வந்தார். ஈசனடியார்கள் இளமையிலேயே இறத்தல் இயல்பன்றோ! அங்ஙனமே ஜீவன் முக்தி அடைந்த நம் கவிஞர் பெருமான் 1921-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 11-ஆம் நாள் இறைவன் பதத்தை எய்தினர். புன்புலால் யாக்கையை நீத்துப் புகழுடம்பைப் பெற்ற பாரதியாரின் "பவ்விய ஜீவன்" பெற்ற பெறுதற்கரிய பேறுகள் அன்பும், அறனும், புகழும், புண்ணியமுமாம்.

# பாரதியார் கவிதை

கவிதை எத்தன்மையது என்பதையும் பாரதியார் கவிதா சக்தி எத்தன்மையது என்பதையும் கூறுவதற்கு முன் அவரது கவிதையி னின்றும் அறியக்கிடக்கும் பல்வேறு அரிய கருத்துக்களையும் குறிக் கோள்களையும் முன்னர்க் கூறிச்செல்லுதல் ஏற்புடைத்தாமென்று தோற்றுகிறது. கட்டிளமைப் பருவத்தில் நம் கவிஞர் பெருமான் காலஞ்சென்றமையால் அன்னார் சரித்திர வரலாற்றுப் பகுதிக்கேற்ற சான்றுகள் அதிகமாகக் காணப்படவில்லை. எனினும், அப்பெரி யாரின் சரித்திரம் பல அன்பர்களால் எழுதப் பெற்றிருப்பினும் நமக்கு மிக ஆதாரமாக அமைந்துள்ள நூல் செல்லம்மாள் பாரதி யாரால் எழுதப்பட்டதேயாம். பாரதியாரின் சுய சரிதைப்பாடல்கள் அவரது வரலாற்றிற்கு ஒருவாறு துணைபுரிகின்றனவேயன்றி முற்று முணர்தற்கு இடமானதன்றாயிற்று. எனவே, பழகியவர்கள் எழுதிய குறிப்புக்களையும் கண்டவர்கள் சொல்லிய கதைகளையும் கேட் டுணர்ந்த தன்மையிலேயே அன்னார் வரலாறு சுருங்கிய முறையில் வரையப்பெற்றது என்று உணர்க. சரித்திர வகையில் குற்றங்கள் இருப்பதற்கு இடமிருப்பினும் இருக்கலாம் என்பதை ஈண்டுத் தெரி வியாமலிருக்கக் கூடவில்லை. உண்மை பாரதியாரை அன்னார் பாடல் களே காட்டுவதாதலின் அதனையே கருவியாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டதென்று உணர்க.

# பாரதியார் கடவுட் பண்பு

படைப்புக் காலந்தொட்டு மக்களாய்த் தோன்றிய மன்னுயிர் களெல்லாம் தங்கள் தங்கள் வாழ்க்கையைக் காலத்திற்கேற்றவாறு செவ்விய முறையில் அமைத்துக்கொண்டு வாழ்ந்து வந்தனர். வாழ்க்கையின் இலட்சியங்கள் காலத்துக்கேற்ற மாறுதல்கள் அடை தல் இயற்கையேயாம். அங்ஙனம் வாழ்வில் ஈடுபட்ட மக்கள் பல் வேறிடங்களில் பல திறத்தொழில்களைச் செய்து வருங்கால் இயற் கையின் ஆணையால் நிகழும் நிகழ்ச்சிகளைக் கண்டு ஆச்சரியத்தையும் பயத்தையும் கொண்டனர். இத்தன்மையான உணர்ச்சி நாளுக்கு நாள் மக்கள் மனவறிவிற் புகுந்து குடிகொண்டது. உலகத்துப்

பொருள்களையும் அவைகள் தோன்றி மறையும் செயல்களையும் கண்ணுற்ற மதிவாணர்கள் சிந்தித்துத் தெளிந்த உணர்வின் பயனாய் இவ்வுலகத்தை இயக்கும் ஓர் அரிய சக்தி இருந்தே தீரவேண்டும் என்று துணிந்தனர். ஆனால், கட்புலனுக்குத் தெரியாத மாற்றம் மனங்கழியநின்ற பெருமையும், அவர்கள் உள்ளக்கருத்தில் எழாநிற்ப செஞ்ஞாயிற்றின் பண்புடைமையையும், தண்கதிர் மதியத்தின் தவள நிறத்தினையும் கண்டு கடவுள் சின்னங்களாகவே வணங்கி வந்தனர். திங்களும் ஞாயிறும் உலக அமைப்பிற்கு இன்றியமையாதனவாகிய பொருள்கள் எனக் கொண்டமையால் அப்பொருள்களின் இயக்கத்தால் ஏற்படும் தாவர வளர்ச்சியும், கடற் காட்சியும், மலை உயர்ச்சியும், வயல் கிளர்ச்சியும் அக்கால மக்களுக்கு இன்பம் விளைவித்தன. ஆகவே, இறைவனை இயற்கைக் காட்சியிற் கண்டு களித்து வணங்கினர் போலும். உலகமாகவும், உலகத்துப் பொருள்களாகவும், உலகத்துக் கப்பாலேயும் நின்று தனது ஐந்தொழிலை நிறைவேற்றி வரும் இயற்கை அன்னை அன்னோர்க்குத் தனது எழிலின் தன்மையிலேயே அருள்சுரந்தாள்.

பண்டைத் தமிழ் மக்கள் தெய்வ வழிபாட்டினை இயற்றிய செய்தி ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதான தொல்காப்பியம் என்ற நூலில் குறிக்கப்பட்டுள்ளது. பின்னர் ஏற்பட்டுள்ள சங்க நூல்களாகிய பரிபாடல், அகநானூறு, பத்துப்பாட்டு, திருக்குறள், சிலப்பதிகாரம் முதலான அரிய இலக்கியங்களிலும் விதந்தோதப்படுகின்றன. தொல்காப்பியக் காலத்துத் தமிழர்கள் இறைவனைக் கூறுமிடத்து, கொடி, வள்ளி, கந்தழி என்று அழைக்கின்றனர். உருவாகியும், அருவாகியும், அருவுருவாகியும் இறைவன் இயங்குகின்றான் என்ற உண்மை, அக்காலத்துத் திகழ்ந்த தமிழர்களுக்கு நன்கு விளங்கியது என்பது உறுதியாம்.

மேலும் இயற்கையன்னையின் எழிலொழுகும் தோற்றத்தைத் தமிழ்ப்புலமையாளர்கள், முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற பெயரிட்டு அழைத்தனர். இந்நிலப்பகுதிக்கேற்ற தெய்வங்களும் கூறப்பட்டன.

**" மாயோன் மேய காடுறை யுலகமும்**
**சேயோன் மேய மைவரை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புன லுலகமும்**

**வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே."**

**(தொல்-அகத்திணையியல்)**

மாயோள் பச்சை நிறத்தினளாகையான் "மாயோன்" என்ற சொல் பச்சை நிறமுடைய திருமாலுக்கு உரியதாக்கி, முல்லை நிலம் பசந்து காட்டக் கூடிய தன்மையைக் கொண்டு அக்கடவுளை அந்நிலத்துக்கு உரியராக்கினர். குறிஞ்சி நிலமாகிய முல்லைக்கு அணித்தாகிய மலையிடங்களில் இளஞாயிறு தோன்றும் தோற்றப் பொலிவை அழகிய உருவாக்கிக் கொண்டு அப்பகுதிக்கேற்ற தெய்வம் முருகன் என்றனர். இவ்வாறே நில இயற்கையை இயல்பான முறையில் பிரித்தளித்து அவ்வண்ணத்திற்கேற்ற கடவுளர்களையும் அமைத்துத் தங்கள் வழிபாடியற்றலாயினர். பல்வேறு தெய்வங்களாகப் பகுக்கப் பட்டிருக்கினும் இறைவன் ஒருவனே என்ற அடிப்படையான எண்ணம் அக்காலத் தமிழறிஞர்களுக்குத் தெரிந்தவொன்றேயாம்.

இந்நிலப் பகுதிகளில் உள்ள மக்கள் இறைவனை ஆலமர் கடம்பினும், ஆற்றிடைக் குறையினும், கந்துடை நிலையினும், மன்றப் பொதுவினும் அமர்த்தி வழிபட்ட முறையே கற்றளிகள் பின்னர்த் தோன்றுவதற்கு ஏதுவாயிற்று என்னலாம்.

உலகந் தோன்றிய காலத்திலிருந்தே கடவுள் உண்டு என்ற கருத்திலேயே பல மக்கள் வாழ்ந்து வந்தபோதினும், "கடவுள் இல்லை" என்ற அதீதமான கொள்கையுடையார் பல நாடுகளிலும் சிறு பான்மையாராக வழக்குரைத்து வாழ்ந்ததுண்டு. இங்கு அவ்வாதங்களின் பேதாபேதங்களை எடுத்துக்கொண்டு நியாயங்கள் கூறுவதில் நாம் தலைப்பட வேண்டியதில்லை.

**"ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு
உயர் செல்வமெல்லாம் அன்றென்றிரு"**

என்று அறிவுரை கூறிப் போந்த பட்டினத்தடிகளாரின் ஒழுகலாற்றினைக் கடைப் பிடித்துச் சென்ற நம் பாரதியாரின் கடவுள் கொள்கையைப் பற்றியேதான் நாம் ஆராய வேண்டியதாயிற்று.

கடவுள் அநாதியானவனென்றும், அன்பு வடிவினனென்றும், அறிவே உருவாகப் பெற்றவனென்றும், பற்றற்றவரைப் பற்றுபவ

னென்றும், பல்லுயிரும் படைத்துக் காத்து அழிக்கும் திற முடையவனென்றும் வேதங்களும் உபநிடதங்களும் கூறுகின்றன. திருமந்திரங்களை ஆன்மகோடிகள் உய்யும் பொருட்டுத் திரட்டித் தமிழில் கொடுத்துப் போந்த திருமூல மாமுனிவர் கருத்தும் இங்கு அறிந்து தெளிதற்குரியது.

**" அறிவும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அறிவே சிவமாவது யாரும் அறிந்திலார்**
**அறிவே சிவமாவது யாரும் அறிந்தபின்**
**அறிவே சிவமுமாய் அமர்ந்திருப்பாரே !"** (திருமந்திரம்)

நம் கவிஞர் பெருமான் கடவுளை அறிவுத் தெய்வமாகவும் அழகுத் தெய்வமாகவுமே கொண்டனர்.

**" சுத்த அறிவே சிவமென்று கூறுஞ்**
**சுருதிகள் கேளீரோ?—பல**
**பித்த மதங்களி லேதடு மாறிப்**
**பெருமை யழிவீரோ ?"**

**" மாடனைக் காடனை வேடனைப் போற்றி**
**மயங்கு மதியிலிகாள்—எத**
**னூடு நின்றோங்கு மறிவொன்றே தெய்வமென்**
**றோதி யறியீரோ ?"** (அறிவுத் தெய்வம்)

**" ஏகமோ பொருளன்றி**
**இரண்டாமோ என்றேன் ;**
**இரண்டுமாம் ஒன்றுமாம்**
**யாவுமாம் என்றாள்."** (அழகுத் தெய்வம்)

மேல் நாட்டு அறிஞர்களான வேட்ஸ்வொர்த், ஷெல்லி, கீட்ஸ் முதலானவர்களைப் போன்று நம் பாரதியாரும் இயற்கையின் இன் பத்திலே திளைத்தார். ஆண்டவன் அழகே உருவானவன், அறிவே உருவானவன் என்று சொல்லுவது வேதத்தின் முடிந்த கருத் தாகும். " நாலு வேதமும் ஒரு சமநிலை சொலும்" என்றதினால் ஞான சாகரமாகிய கடவுள் எல்லா வுயிர்களையும் அறிவின் சக்தியால் இயக்கும் இனிமையைக் காணுங்கால் " அவன் ", " இவன் ", " உவன் " என்று சொல்வதெல்லாம் அறிவேயானவன் என்பதாம். பரிபூரணத் தன்மையிலுள்ள முழு அறிவின் கூறுபாடுகளே மன் னுயிர்கள் என்று கூறுவது பொருத்தமேயாம். நீர்த்துளிகள் நீரோடு

சேர்வது போலவும், மண் மண்ணோடு மாய்வது போலவும் தன்னியல் பினதான அறிவுடை ஆன்மாக்கள் காலகதியில் பரிபூரண ஞானப் பிழம்பாயுள்ள இறைவன் பதத்தை எய்தும் என்பதே உபநிடதக் கொள்கையாகும். பாரதியார் வடமொழியின் பயிற்சியும் தென் மொழியின் பாண்டித்தியமும் நன்கு பெற்றிருந்தமையானும், தனது சுகானுபவத்தினல் உண்மை தெளியும் ஆத்ம ஞானியாக இருந்தமை யானும், வேதங்களின் சாராம்சமான "அறிவே கடவுள்", "அன்பே கடவுள்" என்ற மகா வாக்கியங்களைக் கைக்கொண்டு ஒழுகலாயினர்.

அறிவு பரந்துபட்டுச் செல்லும் பண்புடையதாகலின் தேசம், காலம், இடம், சமூகம், மொழி முதலான தடைகளை எல்லாம் தகர்த் தெறிந்து தன்னியல்பிலேயே நின்று மிளிர்கின்றது. "அறிவால் அறிந்து உன் இருதாள் இறைஞ்சும் அடியார் இடைஞ்சல் களை வோனே" என்று கூறிய அருணகிரியார் திருப்புகழ் வாக்கு இங்கு நினைந்து இன்புறத் தக்கது. பாரதியார் இயற்கை அன்னையினிடம் மோகங்கொண்டு திரிந்தார் என்ற செய்தி அவர் வரலாற்றுப் பகுதி யில் முன்னரே குறிப்பிடப்பட்டிருக்கின்றது. தமிழ் மக்கள் பண்டைக் காலந் தொட்டே இயற்கை அன்னையின் எழிலில் ஈடு பட்டு வந்தனரென்பதை, சங்க நூல்களில் பரக்கக் காணலாம். மக்கள் உயிர் வாழ்விற்கு இயற்கை இன்றியமையாதது என்று கண்டனர் தமிழ்ப் பெருமக்கள்.

> "மாஅ யோயே! மாஅ யோயே!
> மறுபிறப் பறுக்கும் மாசில் சேவடி !" (பரிபாடல்)

இங்கு திருமாலின் பேரழகுத் திறம் முல்லை நிலத்திற் காணப் படுமாகையால், முல்லை நிலக்கடவுளை வணங்குங் காலை "பச்சைமா மேனியன்" என்ற பொருள் விளங்கும்படி, "மாஅ யோயே" என்று விளித்தார். இயற்கையே கடவுள் என எடுத்துக் கூறும் அறிவுடைமை இங்கு வியக்கத்தக்கது.

> "செவ்வானன்ன மேனி யவ்வான்
> இலங்குபிறை யன்ன விலங்குவால் வையெயிற்று
> எரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை
> முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி." (அகநானூறு)

சிவபெருமானின் கடவுள் வாழ்த்தாக மேலே கூறிய அடிகளைப் பாடிப்போந்த பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்கைக் காட்சியி

லுள்ள செக்கர் வானத்தைச் சிவபெருமானின் மேனியாகவும், வானத்தில் விளங்கும் பிறைச்சந்திரனை அவரின் வெண்மையான பற்களாகவும், நெருப்பு கப்புவிட்டு எரிந்தாற்போன்றதை அவரது முறுக்குடைய சடையாகவும் சொல்லிப்போதல் தமிழ்மக்கள் இயற்கையில் ஈடுபட்டு வாழ்ந்து வந்தனர் என்பது வெளிப்படையாம். பிற்காலத்திய புலவர் பெருமக்களும் அங்ஙனமே தமிழ்ப்பாடல்களில் இயற்கை ஓவியத்தையே தீட்டி அழகுற அமைத்துள்ளார்கள்.

தமிழறிஞனாகிய பாரதியும் தன்னுடைய கவிதைகளில் இயற்கையை அன்னையெனக் கொண்டு வழிபட்ட வரலாறு பல இடங்களிலும் காணப்பெறுகின்றது. சில அடிகள் வருமாறு:—

“ நிலாவையும் வானத்து மீனையுங் காற்றையும்
நேர்பட வைத்தாங்கே
குலாவு மமுதக் குழம்பைக் குடித்தொரு
கோகுல வெறிபடைத்தோம் ;
உலாவு மனச்சிறு புள்ளினை யெங்கணும்
ஓட்டி மகிழ்ந்திடுவோம் ;
பலாவின் கனிச்சுளை வண்டியி லோர்வண்டு
பாடுவதும் வியப்போ ?
தாரகை யென்ற மணித்திரள் யாவையும்
சார்ந்திடப்போ மனமே !
ஈரச் சுவையதி லூறிவருமதில்
இன்புறுவாய் மனமே !
சீரவிருஞ்சுடர் மீநெடு வானத்துத்
திங்களையுஞ் சமைத்தே
ஓரழகாக விளங்கிடு முள்ளத்தை
யொப்பதோர் செல்வமுண்டோ ?”

“ பார்க்கு மரங்களெல்லாம் நந்தலாலா !—நின்றன்
பச்சை நிறம் தோன்றுதையே நந்தலாலா !”

## பாரதியார் சமயம்

ஐம்பெரும் பூதங்களையும் அசரசர பேதமான யாவையும் வகுத்து மறையாதி நூலையும் வகுத்த பரம்பொருள் சைவமுதலான அளவில் சமயங்களையும் வகுத்தனர். மோனஉருவாய் நின்று சமயங்களுக்கெல்லாம் மேற்பட்ட சமரச சமயத்தையும் வகுத்தான் என்

பது சான்றோர் கண்ட மெய்யுணர்வாகும். நம் கவிஞர்பெருமான் ஒருவாறு வேதமார்க்கத்தின்பாற்பட்டு அறநெறி தழைத்தோங்கும் உயிர்ப்பண்பு உடையவரெனத் தெரிய வருகின்றது. எனினும், அவரின் பாடல்களைத் துருவி ஆராயுமிடத்து அறச்சமயமே சமயம் மற்றெல்லாம் புறச்சமயங்களே என்று பறைசாற்றுகின்றவராகவும் தெரிகின்றது. தொல்காப்பியனார், வள்ளுவனார், இளங்கோவடிகள் போன்ற நல்லிசைப் புலவர்களின் சமயக் கொள்கைகள் இன்னதென்று அறுதியிட்டுக் கூறமுடியாத நிலைமையில் இன்னும் இருக்கின்றனவென்று கூறுவது மிகையாகாது. தமிழ்மறைதந்த தவஞானச் செல்வராகிய வள்ளுவனாரின் குறட்பாக்களில் சிற்சில இடங்களில், தாமரைக் கண்ணான் உலகு என்பதினால் திருமாலடியாரென்றும், மலர்மிசையேகினான் என்பதினால் அருகதேவனென்றும், அறவாழி அந்தணன் என்றமையால் பௌத்தரென்றும், தனக்குவமை இல்லாதான் என்றமையால் சிவனடியாரென்றும் மதப்பற்றுடைய மாந்தர்கள் நாயனாரைத் தங்கள் தங்கள் சார்பினராகப் பற்றிக்கொள்கின்றனர். ஆனால், வள்ளுவனார் பெருமை இத்துணை இழுக்குக்கு வழுக்கி விழும் இயல்புடையது அன்று என்பதே நடுவு நிலைமையாளர் கருத்தெனக்கொள்க.

கல்லாடம் பாடிய கல்லாட தேவர், முப்பால் மொழிந்த மூதறிவாளனை, "சமயக்கணக்கர் மதிவழி செல்லாது உலகியல் கூறிப் பொருள் இதுவென்ற வள்ளுவன்" என்று போற்றிப் புகழ்வது சால்புடைத் தன்றே! நதிகள் பலமுகமாகச் சென்று கடலில் கலப்பதேபோல், சமயங்களும் பல வழியாகத் தேடிச்சென்று ஈசனைக் காண்பதாகும். "தென்னாடுடைய சிவனேபோற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவாபோற்றி" என்று கூறிய மணிமொழிப் பெருமான் வாசகங்கள் மதிக்கத்தக்க மாணிக்கங்களாகும்!

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே." (சம்பந்தர் தேவாரம்)

இங்கு வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கக் காட்டிய ஞானக் குழந்தையாகிய திருஞான சம்பந்தர் சைவசமயத்தின் உண்மைத் தத்துவத்தை வையையாற்றில் வரைந்து விடுத்தார்.

இந்நிகழ்ச்சி புனல் வாதத்தின் சார்பில் ஏற்பட்டது. எழுதப்பட்ட ஏடு வெள்ளத்தில் மறையாமல் எதிர்த்துச் சென்றது. ஏனெனில், சைவசமயத்தின் உண்மை மற்ற சமயங்களுக்கு உண்மையானபடி யாலும், அரன் நாமம் வையகத்தில் பரவுதலும் ஆன்மாக்கள் துயர் நீங்குதலும் ஒருங்கே நிகழ்வனவாதலாலும், புனல் வாதம் வெற்றி யடைந்தது. அத்தன்மையே போல், பாரதியாரின் அறநெறி ஒழுக்கமார்க்கம் அவரது பாடல்களில் நன்கு வலியுறுத்தப்படுவதி னுல் அன்னுர் ஆத்ம ஜயம் அடைந்தவராய் இருந்திருக்கக்கூடும் என்பதில் ஐயம் யாதும் இல்லை. அக்குறிப்பைத் தெரிவிக்கும் பாடல்களில் சில அடிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

> "என்ன வரங்கள், பெருமைகள், வெற்றிகள்,
> எத்தனை மேன்மைகளோ—
> தன்னை வென்றாலவை யாவும் பெறுவது
> சத்திய மாகு மென்றே
> முன்னை முனிவர் உரைத்த மறைப்பொருள்
> முற்று முணர்ந்த பின்னும்
> தன்னை வென்றாளும் திறமை பெருதிங்கு
> தாழ்வுற்று நிற்போமோ ?"

இத்தன்மைய உணர்ச்சியுடையோர் எய்தப் பெருதபேறு இல்லை என்றே கூறலாம். இதை வலியுறுத்தவே பின்வரும் அடிகளை மேற் கோளாகக் கொள்ளுதல் நன்ரும்.

> "தன்னை அறியத் தனக்கொரு கேடில்லைத்
> தன்னை அறியாமற் தானே கெடுகின்ருன்
> தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
> தன்னையே அர்ச்சிக்கத் தான் இருந்தானே."

(திருமந்திரம்)

ஆன்ருேர்கள் நம் நாட்டிடையே அன்றிப் பிறநாடுகளிலும் கைக்கொண்ட சமயம் அறச்சமயமேயாம். மதங்களும் சமயங்களும் தங்களைப் பின்பற்றி வரும் குழுவினர் சிதைந்து அழியாவண்ணம் சில கோட்பாடுகளை நியமித்துத் தந்து ஆளுந்தன்மையன. வேறு பட்ட மதங்களின் உண்மைத் தன்மையான அறநெறி ஓர் தன்மை யளவாக இருத்தல்பற்றி ஆன்ம நேயம் உடைய பெரியோர்கள் தங்கள் வாழ்நாளில், மதக் கோட்பாடுகளையும் மூட வழக்கங்களையும்

உதறித்தள்ளி விடுதலை அடைந்தனர். பசுக்கள் பல்வேறு நிறத்தன வாயினும், அப்பசுக்களால் அளிக்கப்படும் இன்னமுதாகிய பால் பல நிறத்தை உடையன அல்லவாம். அத்தன்மைத்தேபோல் பல சமயங்கள் உலக மக்களிடையே தோன்றிப் பின்பற்றப்பட்ட போதிலும், அம்மதங்களினால் தெளியப்படும் அறிநெறி ஒன்றாகவே உள்ளது. அவ்வுண்மையையே தக்கோர் கையாளும் நெறியாகக் கொண்டனர். நம் பாரதியாரோ சின்னசாமி அய்யர்த் திருமகனாகப் பிறந்தும், சைவசமயமே மெய்ச்சமயம் மற்றவை பொய்ச் சமயம் என்று கொண்டாரில்லை. அது வருமாறு :—

“ சக்தியென் று புகழ்ந்திடுவோம், முருகனென்போம்,
சங்கரனென் றுரைத்திடுவோம், கண்ணனென்போம்.’

(நெஞ்சொடு சொல்லியது)

மற்றோர் இடத்தில் அல்லாவைப் புகழ்ந்து பாடுவது இக்கருத்தினை வலியுறுத்தும். அது வருமாறு:—

“ பல்லாயிரம் பல்லாயிரம் கோடிகோடி யண்டங்கள்
எல்லாத் திசையிலுமோ ரெல்லையில்லா வெளிவானிலே
நில்லாது சுழன்றோட நியமஞ்செய்தருள் நாயகன்
சொல்லாலும் மனத்தாலுந் தொடரொணாத பெருஞ்சோதி ;
அல்லா, அல்லா, அல்லா !

கல்லாதவ ராயினும் உண்மை சொல்லாதவ ராயினும்
பொல்லாதவ ராயினும் தவ மில்லாதவ ராயினும்
நல்லாருரை நீதியின்படி நில்லாதவ ராயினும்
எல்லாரும் வந்தேத்து மளவில் யமபயங் கெடச்செய்பவன்
அல்லா, அல்லா, அல்லா !”

இதுவுமன்னியில், ஏசுநாதர் வான்எழுந்தருளிய நற்காட்சியைக் கண்ட மேரி மக்தலேன் தனது உற்றாருக்குத் தெரிவித்ததாகக் கூறும் கிறிஸ்து புராணக் கதையை விரும்பிய பாரதியார், அவ்வரலாற்றைத் தமிழில் வாட்டமின்றி எழுதி வழங்குகின்றார். ஏசுநாதரிடம் பாரதியார் வைத்திருந்த பக்தியையும் பணிவையும் பின்வரும் அடிகள் அறிவுறுத்துகின்றன. அவை :—

“ உண்மை யென்ற சிலுவையிற் கட்டி
உணர்வை ஆணித் தவங்கொண் டடித்தால்,

**வண்மைப் பேருயிர் யேசு கிறிஸ்து**
**வான மேனியில் அங்கு விளங்கும்**
**பெண்மை காண் மரியா மக்தலேநா,**
**பேணும் நல்லறம் யேசு கிறிஸ்து.**
**நுண்மை கொண்ட பொருளிது கண்டீர்**
**நொடியி லிஃது பயின்றிடலாகும்."**

பரசிவ வெள்ளத்தில் மூழ்கித் திளைக்கும் பாரதியார் கண்ணனென்னும் கருந்தெய்வத்தைத் தன் நட்பாளனாகவும், தாயாகவும், தந்தையாகவும், குழவியாகவும், காதலியாகவும், காதலனாகவும் பாடிப்பரவுதலும், சக்தியின் கருணையை வியந்து போற்றுதலும், முருகன் திருவுருவ வழிபாட்டில் முனைந்து நிற்பதும், திருவைத் துதித்துத் தேடி நிற்பதும், வாணியின் காதலை வளர்த்து ஓம்புவதும், அல்லாவை ஆதரித்து அணைத்துப் போற்றுதலும், ஏசுநாதரைப் போற்றித் துதிப்பதும் கூர்ந்து நோக்குங்கால் இப்பெரியோர் சாதி சமயச் சழக்குகள் அற்று அருட்பிழம்பான ஆனந்தமயத்தை அள்ளி உண்பவரெனக் கொள்ளக் கிடக்கின்றது. சமரச சுத்த சன்மார்க்க நீதியிலே புகுந்து விளையாடும் தவஞானச் செல்வனென்றே அறிதல் வேண்டும். அறுசமயக் கோட்பாடுகளைப் படித்துத் தேர்ந்த சமய வாதிகளின் வித்தை சாதனமில்லையேல் முத்தி இன்பமில்லை. கல்லார்க்கும் கற்றவர்க்கும், காணார்க்கும் கண்டவர்க்கும், மதியார்க்கும் மதிப்பவர்க்கும், நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவாகி, எல்லாக்கும் பேரின்ப வாழ்வு அளிப்பான் வேண்டிப் பொதுமன்றில் நடமாடும் புண்ணியன் தாள்களைக் கண்டார்கள், சமயங்கடந்த சமரச உணர்ச்சியையே கொண்டாடுவர். "எம்மதமும் சம்மதமே" என்ற குறிக்கோளே அவர்களது உட்கோளாகும். கம்பனும் இராம இலக்குமணர்களை "அறந்தரு சிந்தையார்" என்று பலவிடங்களில் கூறி உணர்த்துவதும் இப்பண்பு பற்றியேயாம் என்று கொள்ளற்பாற்று.

## பாரதியார் பெண்மை

வரகவி பாரதியார் பெண்மை நலத்தைக் கூறுமிடத்து, தன் நுண்ணிய கருத்துக்களை நன்கு அமைத்துப் பாடுகின்ற பாடல்களின் இனிமை மிகவும் பாராட்டற்குரியது. "முன்னோர் நூலின் முடிபொருங்கொத்து, பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி" என்பது

இலக்கணமாதலின், இப்புலவர் பெருமான் தன் இயல்பின்கண் நின்று கூறும் எண்ணங்களைக் காணுமிடத்து, முன்னோர்கள் பெண்மையைக் கொண்டவாறு எவ்வாறு என்று சிறிது ஆராய்ந்து உணர்தல் பொருத்தமுடைத்தேயாம். சதுர்மறைகள் சாற்றும் பெண்மை சிவசக்தி சொரூபமேயாம். மேல் நாட்டு அறிஞரும், மற்றுமுள்ள கிறிஸ்துவ, முகம்மதிய, பௌத்த சமயங்களிலும், பெண்மை சிறப்பித்தே கூறப்பட்டுள்ளது. அம்முறையையே இக்காலத்து மக்களும் போற்றி வருதல் கண்கூடு.

நம் நாட்டில் வேதகாலந் தொடங்கி "பெண்மை" போற்றப் பட்டு வந்தது என்ற உண்மையை இங்கு விரித்தெழுவது மிகையாகும். தமிழில் புராதனமான இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் பெண்மை பெற்றிருக்கும் இடம் ஆண்மைக்கு ஒத்த நிலைமையிலே உள்ளது. களவின் வழித்தான கற்புடைய வாழ்க்கையில் ஒத்த தலைவனும் தலைவியும் அன்பு கெழுமிய உள்ளத்தாய் இல்வாழ்க்கை இன்பத்தை அறவழியில் நின்று திளைத்து, அன்பையும் அறத்தையும் அடைய வேண்டிய வழியைக் கூறுவான் எடுத்துக் கொண்ட தொல்காப்பியனார் அடியில் வருமாறு கூறினர்.

"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவ நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளர்ந்த ஒப்பினது வகையே."

(தொல்.—மெய்ப்பாட்டியல்)

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கையெனக்கொண்டு தலைவன் தலைவியர் அறம், பொருள், இன்பம் அடைந்த காலையில் நான்காவதான வீட்டின்பத்தைப் பெறுமாறு அனுசரிக்க வேண்டிய வாழ்க்கையின் பண்பை, தொல்காப்பியனார் தனது ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியத்தில் விதந்தோதி உள்ளார். அது வருமாறு:—

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே."

(தொல்.—கற்பியல்)

வாழ்விற்கு இன்றியமையாத துணைநலனாக உள்ள பெண்மையைத் தமிழ்ச் சான்றோர்கள் பெரிதும் போற்றி வந்ததோடு, தெய்வத் தன்மை வாய்ந்தவர்கள் பெண்மணிகள் என்றும் மதித்து வந்தனர். திருவள்ளுவனாரும் "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந் திண்மை யுண்டாகப் பெறின்" என்று கூறிப் போந்தது இக்கருத்தினை வலியுறுத்தும். சங்ககாலச் சான்றோர்களுக்குப் பின் வந்த சைவ சமய குரவர்களும் பெண்மையைப் பெரிதும் பாராட்டிச் சென்றனர். புகலிப் பெருமானாகிய திருஞான சம்பந்த நாயனார் தனது முதற் பாட்டிலேயே "தோடுடைய செவியன்" என்றார். "தோடுடைய செவியன்" என்ற சொற்றொடர் உமாமகேசுரனான சிவபெருமான் ஒருவனுக்கே உரித்தாதலின், இலக்கண வழுவுடைத்தன்று. "வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்" என்றும், "பண்ணி நேர்மொழியாளுமை பங்கரோ" என்றும் கூறிப் போதல் உலகத்தின் பொருள்கள் யாவும் சக்தியாகவும் சிவமாகவும் இருத்தலேதான். நாவுக்கரசரும், "காதன் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன், கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதனக் கண்டேன்" என்றார். மற்றோர் இடத்தில், "ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே" என்று திருத்தாண்டகத்திலும் பாடிச் சென்றார். இத்துடன் நில்லாது, திருவாசகம் என்னும் தேனைப் பருகக் கொடுத்த மணிவாசகப் பெருமானும் இறைவனை விளிக்குங் காலை, "அம்மையே அப்பா ஒப்பிலா மணியே!" என்றும், "சோதியே சுடரே சூழொளி விளக்கே!" என்றும் கூறிப் போதல் காண்க. திருவிளையாடற் புராணம் பாடிப் போந்த பரஞ்சோதியாரும் "சத்தியாய்ச் சிவமாகித் தனிப்பர முத்தியான முதலைத் துதி செய" என்று கூறிச் செல்வது இன்பம் பயப்பதாகும். சொல்லும் பொருளும் ஒன்றி நிற்பது போலவும், சொல்லின்றிப் பொருளில்லாமையும், பொருளின்றிச் சொல்லில்லாமையும், சக்தி இன்றிச் சிவமில்லை என்பதும், சிவமின்றிச் சக்தி இல்லையென்பதும் என்றும் உண்மையாம். ஆழ்வார் பெருமக்களும் இறைவனை வழிபடுங்கால் பெண்மை கலந்த ஆண்மையாகவே பாவித்துப் பாடியுள்ளார்கள்.

"நாமவனிவனுவன் அவளிவளுவளெவள்
தாமவரிவருவர் அதுவிதுவுதுவெது" (திருவாய் மொழி)

என்றார் வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன். பெரியாழ்வாரும், "வடிவாய் நின் வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு"

என்று அருளினர். தெய்வத் தன்மையே இங்ஙனம் ஆணும் பெண்ணுமாகத் திகழும் காலையில் பெண் பிறப்பைத் தாழ்த்திக் கூறும் அறியாமை மிகவும் விசனிக்கத் தக்கதன்றோ!

மணங்கமழும் சங்க இலக்கியங்களில் திளைத்து எழுந்த நம் கவிஞர் பெருமான் பெண்மையைப் பற்றிக் கூறும் செய்யுட்கள் இனிமை பெறுவதில் ஆச்சரியமென்ன?

**"நீலமேனி வாலிழைபாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ்,**
**மூவகை உலகும் முகிழ்த்தன்ருல் முறையே"**

என்ற காப்புச் செய்யுளை உடைய ஐங்குறு நூற்றையும்,

**"பெண்ணுரு ஒருதிற ஞகிநின்று அவ்வுருத்**
**தன்னுள் அடக்கிக் கரக்கினுங் கரக்கும்"**

என்ற பொருள் பொதிந்த அடிகளைப் பெற்ற கடவுள் வாழ்த்தைத் தன்னகத்தே கொண்ட புறநானூற்றையும் படித்தறிந்த நம் பாவலர் பெண்ணின் பெருமையைச் சித்திரித்துக் காட்டுதல் எழிலுடைத் தன்றோ!

பிற்காலத்தினர் பெண்களைப் போற்றுது இல்லில் இருத்திய வண்ணம் காத்து வந்தமையால் அப்பெண்மணிகளின் வாழ்வு தாழ்வுற்றது. கல்வி மேம்பாடும் கலைத்திறனும் கவித்திறனும் மங்கியது. சங்ககாலப் பெண்கள் நின்ற உயர்நிலைக்கும் பாரதியார் வாழ்ந்த காலத்துப் பெண்மகளிர் தாழ்மைக்கும் காரணங்கள் பலவாயின. பாரதியார் பொய்யான காரணங்கள் கற்பிக்கப்பட்டுப் பெண்மை நலம் குன்றியதைக் கண்டு மனங்கொதித்து எழுதுகிருர்.

**"ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்**
**றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்**
**வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டிவைப் போமென்ற**
**விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்.**
**மாட்டை யடித்து வசக்கித் தொழுவினில்**
**மாட்டும் வழக்கத்தைக் கொண்டு வந்தே**
**வீட்டினி லெம்மிடங் காட்ட வந்தாரதை**
**வெட்டி விட்டோ மென்று கும்மியடி."** (விடுதலைக் கும்மி)

இங்கு பெண்மணிகள் அடிமைகளாகக் கருதப்பட்டுவந்த காரணத்தால், கல்வியறிவு கொளுத்தப் பெருமல் மனிதப்பிறவியாக

நடத்தப்படாத செயல் வெகுதீவிரமாகக் கண்டிக்கப்படுகின்றது. மக்கட் பண்பிற்கே இது முற்றும் மாறுதலான செயலாகையால் நம் கவிஞர் பெருமான் கடிந்துரைத்தனர்.

> **“கற்புநிலை யென்று சொல்ல வந்தா ரிரு**
> **கக்ஷிக்கு மஃது பொதுவில் வைப்போம்**
> **வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக் கொடுக்கும்**
> **வழக்கத்தைத் தள்ளி மிதித் திடுவோம்.”** (விடுதலைக் கும்மி)

“காதலிருவர் கருத்தொருமித்து, ஆதரவு பட்டதே இன்பம்” என்ற ஔவையார் வாக்கு கவனிக்கத் தக்கது. பெண்களை மண வினையில் ஈடுபடுத்த வேண்டிய காலங்களில் அவர்கள் காதல் கொள் ளாத நிலைமையிலுள்ள எத்தன்மையான ஆடவரையும் அவர்கள் கொள்ளுமாறு தள்ளுதல் அன்பற்ற செயலேயாகும். “காதல், காதல் அன்றேல் சாதல், சாதல்” என பாரதியார் வேருேரிடத்தில் கூறு வது உண்மையேயாம். “இருதலைப்புட்போல் ஒருயிரம்மே” என்று தலைவி தன் பாங்கியினிடம் தானும் தலைவனும் இரண்டு தலைகளோடு விளங்கும் ஓர் பறவை போன்று உள்ளோம் என்று கூறும் அக நானூற்றடிகள் ஈண்டு நினைந்து இன்புறத் தக்கது. காதல் மணமே கவினுடைத்தாகும் என்ற அடிப்படையான கொள்கை பண்டைத் தமிழறிஞர்கள் மேற்கொண்ட தொன்ருேம். மேலும், மேலே பாரதி யார் சொல்லிய இரண்டடிகள் கற்பைப்பற்றியது. கற்பென்பது பல பொருள்படும். “கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை” என்றும், கணவன் கற்பித்த வழியிலே நிற்றலென்றும், மகளிர் நிறைகாத்தலே கற்பென்றும், இன்னும் பலவாருகக் கூறுப. உயிரைக் காட்டினும் சிறந்தது நாணம். நாணத்தைக் காட்டினும் சிறந்தது கற்புடைமை. அத்தன்மையான கற்புடைமையைக் காத்துக்கொள்ளுதலே சிறப் புடைத்தாம் என்பது சொல்லாமலே விளங்கும். பாரதியார் இங்கு பெண்களுக்குக் கற்புடைமை உண்டென்பதோடு ஆண்களுக்கும் அஃது இல்லாதுபோதல் இல்லையென்றும் கூறுகின்ருர். இறைய ஞர் அகப்பொருளுரையைக் கவனிக்குமிடத்து, ஆண்டு பெண் களுக்கு உளதாகிய நற்குணங்களான நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்றவைகூறப்படுவதுடன், ஆண்களுக்கான நாற்குணங் களும் கூறப்படுகின்றன. அவையாவன :—அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி. எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு என்றும், காப்பன காத்துக் கடிவன

கடிந்து ஒழுகும் ஒழுக்கம் நிறை என்றும், ஓர் பொருளை ஆராய்ந் துணர்தல் ஓர்ப்பென்றும், உணர்ந்துகொண்ட பொருளை மறவா மையே கடைப்பிடி என்றும் பொருள் கூறப்படுகிறது. இங்கு "நன்மை கடைப்பிடி" என்ற ஆன்றோர் வாக்கும் சிந்தித்தற்குரி யது. ஆண் மகற்குக் கூறிய நாற்குணங்களின் பொருட்பகுதியை நோக்குமிடத்து, சிறந்த ஒழுக்கத்தை ஆண்மகன் மேற்கொள்ள வேண்டுமென்பது வெள்ளிடை மலை. ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படு மாகையால் அவ்வொழுக்கத்தை விழுப்பமாகக்கொள்ளும் ஆடவன் பால் கற்புத்திறன் இருந்தே தீரவேண்டும் என்பதாம். எனவே, நம் கவிஞர் பெருமான் கூற்று இங்கு நூல்களால் ஒப்பமுடிந்த கூற்றாகவே கொள்ளற்பாற்று.

'புதுமைப் பெண்' என்ற பாடலில் மாதர்க்குச் சுதந்திரம் வழங்குதல் பாரதநாட்டின் கடமையாகுமென்றும், அவர்களின் மென்மையான இனிய சொல் கண்ணன் வேய்ங்குழல் இன்பத்தை யும் நாரதன் வீணை இன்பத்தினையும் ஒக்கும் என்றும் பாரதியார் கூறுகின்றார். மேன்மையான மக்கட் பிறவியினர் பெண்களை அடிமை களாக்கிச் செயலியற்றச் சொல்லுதற்குரிய முறிச்சீட்டைத் தீயிலிட் டுப் பொசுக்கிட வேண்டுமென்றார். ஆணும் பெண்ணும் சரிசமானமாக வாழ்வதே வாழ்வாகும். அதுவே அறிவின் ஒளி. அதுவே வையந் தழைக்கும் வழி. பெண்ணுரு தாய் சிவசக்தி எனக் கூறுவது பாரதி யாரின் பரந்த ஞானத்தையும், அருளொழுக்கத்தையும் நன்கு விளக்குகின்றது. பாடலடிகள் சிலவருமாறு:—

**"மாதர்க் குண்டு சுதந்திர மென்று நின்**
**வண்மலர்த்திரு வாயின் மொழிந்த சொல்**
**நாதந்தானது நாரதன் வீணையோ ?**
**நம்பிரான் கண்ணன் வேய்ங்குழ லின்பமோ ?"**

**(புதுமைப் பெண்)**

**"பூணு நல்லறத் தோடிங்கு பெண்ணுருப்**
**போந்து நிற்பது தாய்சிவ சக்தியாம்."** **(புதுமைப் பெண்)**

பெண்மை என்பதை அடியார்க்கு நல்லார், "கட்புலனாகியதோர் அமைதித் தன்மை" என்றார். அத்தகைய பெருமை பெற்ற பெண் மணிகளை, பெருமிதங் கொள்ளுமாறு நடத்தலே ஆண்கள் கடமை யாம். அவர்கள் தங்கள் பொறுமையினாலும் அமைதியுள்ளத்தி

னாலும் ஆற்றலாலும் அநேக அற்புதச் செயல்களைச் செய்து முடிப்பவராவர். எனவே, சுதந்திரத்தை அவர்களுக்கு அளித்தல் வேண்டுமென்பது பாரதியார் வேண்டுகோளாம். அது வருமாறு:—

"உலக வாழ்க்கையி னுட்பங்கள் தேரவும்
ஓது பற்பல நூல்வகை கற்கவும்
இலகு சீருடை நாற்றிசை நாடுகள்
யாவுஞ் சென்று புதுமை கொணர்ந்திங்கே
திலக வாணுத லார்நங்கள் பாரத
தேச மோங்க உழைத்திடல் வேண்டுமாம்."

(புதுமைப் பெண்)

"மூத்த பொய்மைகள் யாவு மழிப்பராம்
மூடக் கட்டுகள் யாவும் தகர்ப்பராம்." (புதுமைப்பெண்)

வாழ்க்கைச் சித்திரங்களாக விளங்கும் பெண் பாலார் நாற்றிசை நாடுகளினும் சென்று புதுமை கொணர்ந்து பாரத தேசமோங்க உழைத்திடல் வேண்டுமென்று கூறும் பாரதியார் விருப்பம் இங்கு கவனிக்கத்தக்கது. "முன்னீர் வழக்கம் மகடுவோடில்லை" என்ற தொல்காப்பிய விதிக்கு இது சற்று மாருக விருப்பினும், பன்னூருண்டுகட்கு முன் கூறிய விதியை விலக்கிக் கூறும் இவ்விகற்பத்தை நன்னூலார் கூறிய "பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல காலவகையினனே" என்ற சூத்திரத்திற் கிணங்கக் கொள்ளுதலே ஏற்புடைத்தாம். காலகதியால் அளவற்ற மாறுதலை அடையும் சமூதாய வாழ்விற்குத் தகுந்தாற்போல் தொழில்களையும் பழக்க வழக்கங்களையும் இயற்கைக்கு மாருத வண்ணம் அமைத்துக்கொள்ளுதலே பொருத்த முடைத்தாம். கல்வி கேள்விகளின் மேன்மையாலும் திண்ணிய கற்புத்திறமையாலும், திடமான தேச உணர்ச்சியாலும், முன்னணியில் வரத்தக்கப் பெண்பாலார், அரசியல் துறைகளினும், பொருளாதார நிலைமைகளினும், கலைவளர்க்கும் உணர்ச்சியினும், கவி பாடுந்திறமையினும், விஞ்ஞானக் கலைகளினும் நன்கு கலந்து பணியாற்றல் நாட்டின் செழுமைக்கு இன்றியமையாத தொன்ரும். எனவேதான் நம்பாரதியாரும், வருங்கால பாரதத்தின் வளர்ச்சி நோக்கி, இத்தன்மையான முறையில் பாடியுள்ளார். தற்காலப் பெரியோர்களும் இக்கருத்தையே அடிப்படையாகக் கொண்டு செயல் முறையில் காட்டிச் செல்வது பாரதியார்; தீர்க்கதரிசி என்பதை நன்கு நிலைநாட்டுகின்றது.

'பெண்மை' என்ற தலைப்பில் கவிஞர் பெருமான் பெண்மைத் தன்மையை வியந்து பாடியுள்ள அடிகளைச் சற்று கவனிப்போம்.

" துன்பந் தீர்வது பெண்மையி னாலடா
சூரப் பிள்ளைகள் தாயென்று போற்றுவோம்." (பெண்மை)

" வலிமை சேர்ப்பது தாய்முலைப் பாலடா
மானஞ் சேர்க்கு மனைவியின் வார்த்தைகள்
கலி யழிப்பது பெண்க ளறமடா
கைகள் கோத்துக் களித்து நின் றாடுவோம்." (பெண்மை)

இங்கு கொடுக்கப்பட்ட அடிகளைச் சிந்தனை செய்யுங்கால் இன்பம் ஏற்படுவதும் துன்பம் நீங்குவதும் பெண் பிறவியாலேதான் என்று எண்ணக் கிடக்கின்றது.

" கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள." (குறள்—களவியல்)

குறளாசிரியர் கூறிய அடிகளினின்றும் பெறப்படும் பெண்மையின்பம் இங்கு பாரதியார் கூறும் கருத்துகளுக்கு எத்துணை சான்று பகர்கின்றன என்பதை நுண்ணிய முறையில் உணர்தல் வேண்டும். "ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே" என்றும், "புலிசேர்ந்து போகிய கல்லளைபோல ஈன்ற வயிறோ இதுவே" என்றும் கூறிய தாய்மார்களின் வீர ஒழுக்கம் ஈண்டு நினைத்தற்குரியது.

" பெண்ணறத்தினை யாண்மக்கள் வீரந்தான்
பேணு மாயிற் பிறகொரு தாழ்வில்லை ;
கண்ணைக் காக்கு மிரண்டிமை போலவே
காத லின்பத்தைக் காத்திடு வோமடா." (பெண்மை)

" 'போற்றிதாய்' என்று தோள் கொட்டியாடுவீர்
புகழ்ச்சி கூறுவிர் காதற் கிளிகட்கே
நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணிடைப் பெண்ணொருத்தி பணியிலே." (பெண்மை)

கனிந்த பெண்ணறத்தினை மனங்கனிந்து பாடும் நம் கவிஞர் பெருமான் காவிய இன்பத்தைக் காண விரும்புவார்க்கு வாரி இறைக்கும் வண்ணமாகவே தோற்றுகிறது. பெண்மைப் பெருமையினைச் சிலப்பதிகார ஆசிரியரான இளங்கோவடிகள் கண்ணகியின் முகமாகப் பல இடங்களிலும் அழகு சொட்டச் சொட்ட எழுதிப்

போந்துள்ளார். மேலும், உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தி உரைக்கும் பெற்றியை, சைனத் துறவியான கௌந்தியடிகள் வாயிலாகப் புகழ்ந்துள்ளார். பத்தினிப் பெண்டிரின் பெண்மை நலம் பாராட்டப் பெற்ற முறை கீழ் வரும் அடிகளால் தெளிவாகும்.

> **“ தன் துயர் காணுத் தகைசால் பூங்கொடி**
> **யின் துணை மகளிர்க்கின்றி யமையாக்**
> **கற்புக் கடம்பூண்ட வித்தெய்வ மல்லது**
> **பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்.”**

(சிலப்பதிகாரம்—அடைக்கலக் காதை)

கம்பநாடனும், சீதாபிராட்டியாரைக் காண வந்த அநுமன் வாயிலாகப் பெண்மையைப் புகழ்ந்து போற்றும் பொன்னடிகள் இங்கு சிந்தித்தற்குரியன. அவை :

> **“ வெங்கனன் மூழ்கியும் புலன்கள் வீக்கியு**
> **நுங்குவ வருந்துவ நீக்கி நோற்றவ**
> **ரெங்குளர் குலனில்வந் தில்லின் மாண்புடை**
> **நங்கையர் மனத்தவ நவிலற் பாலதே.”** (காட்சிப் படலம்)

> **“ தனிமையும் பெண்மையுந் தவமு மின்னதே**
> **வனிதையர்க் காகநல் லறத்தின் மாண்பெலாம்.”**

(காட்சிப் படலம்)

கம்பன், காளிதாசன், இளங்கோவடிகள் உள்ளிட்ட கவிவாணர் காட்டிச்சென்ற “பெண்மை” நம் பாரதியாரின் மனக்கண்ணில் நின்று காட்சியளித்தமையால் அவ்வோவியங்களைப் புதுமைக்கேற்ற வாறு அழகு படுத்தித் தனது காவியத்தில் வரைந்திருப்பது அருமை யன்றோ? பழமைக்குப் பழமையாகவும், புதுமைக்குப் புதுமை யாகவும் நின்று துலங்கும்படிச் செய்த இப்பெரியாரது பெண்மைச் சித்திரம் படிப்போர் மனதைக் கவர்ந்து இன்பரசத்தில் அழுத்து கின்றது. இதுவன்றோ கவிதை ?

## பாரதியார் சமுதாயம்

தண்டமிழ்க் கவிஞனை பாரதியார் தமிழன்னையின் புதல்வர் களிடையே வாழ்ந்து வந்த போதினும் தனக்குரிய சமுதாயம் பாரத சமுதாயமே எனக் கொண்டார். அவர் அங்ஙனம் கொண்டது அவரது விசாலித்த உள்ளப் பாப்பினையும் கூரிய மதி நுட்பத்தையும்

காட்டுகின்றதென்னலாம். முப்பது கோடி மக்கட் தொகுதியில் இருந்த அவர் காலத்து சமுதாயம் பின்னர் பெருகிய போதினும், அக்காலத்திலிருந்த தேசாபிமானச் சுழற்காற்றால் நன்கு மோதப் பட்டு உணர்ச்சி பெற்று விளங்கியது. அடிமை வாழ்வில் வாழ்ந்தும், கவலையின்றி உடலை வளர்த்துவந்த மக்களைக் காணுங்கால், நம் கவிஞர் உள்ளம் பொறுக்க முடியாத நிலையில் இருந்ததென்றே கூறலாம். உண்ண உணவும், உடுக்க உடையும், தங்குவதற்கு உறையுளும் கிடைத்தாற் போதுமென்ற குறிக்கோளைக் கொண்ட மக்கள் பல்லாயிரவர். பிற நாடுகளிலும் சென்று தங்கள் வீரக் கொடியையும், வெற்றிக் கொடியையும் நாட்டி வாழ்ந்து வந்த இந்திய மக்கள் தற்காலம் நல்லியல்பிழந்து நாணமற்றவராகத் திரி கின்றனரே என்ற எண்ணம் தீர்க்க தரிசிகளான பாரதியாரைப் போன்ற சுதந்திர வீரர்களுக்கு ஓயாக் கவலையைக் கொடுத்து வந்த தென்னலாம்.

> **“ நெஞ்சு பொறுக்கு திலையே—இந்த**
> **நிலைகெட்ட மனிதரை நினைந்து விட்டால்**
> **அஞ்சி யஞ்சிச் சாவார்—இவர்**
> **அஞ்சாத பொருளில்லை அவனியிலே.”**

“அஞ்சுவது அஞ்சாமை பேதமை, அஞ்சுவது அஞ்சல் அறி வார் தொழில்” என்று கூறும் தமிழ் மறையடிகளைச் சிந்தித்துப் பார்ப்பின் தேசப்பணியே தெய்வப் பணியாகக் கொண்ட பாரதி யாரின் மன ஊக்கம், சிறப்புடைத்தன்றோ ! மூட நம்பிக்கைகளும், ஜாதி வேற்றுமைகளும், மக்களை ஏமாற்றுதற்காகவே கையாளப் பட்ட சில மந்திர தந்திரங்களும், சமய வாதங்களும் சச்சரவுகளும், நாட்டின் ஒற்றுமையைக் குலைத்து, ஒன்றுபட்ட உயரிய வாழ்வு ஏற் படாவண்ணம் தலைவிரித்து ஆடின. நாளை உணவிற்கு வழியில்லாத மனிதன் வாய்ப்பூசல் நிகழ்த்துவதும், சாத்திரங் கற்ற சில சழக் கர்கள் வீண்வாதம் புரிவதும், நன்னடத்தையினின்றும் விலகிச் சென்று கொண்டே சன்மார்க்க நெறியைப் படிப்பளவிலே பிறர்க்கு உபதேசம் செய்து வருவதுமான நிகழ்ச்சிகள் பாரதியார் உள்ளத் தைச் சிதைத்தன. அப்புலவர் பெருமகன் அக்காலத்துச் சமுதாய ஊழல்களைத் தீவிரமாகக் கண்டித்துப் பாடுதல் மேன்மையான சீர் திருத்த முறையிலேயே உள்ளது.

"சிப்பாயைக் கண்டஞ்சுவார்—ஊர்ச்
சேவகன் வருதல் கண்டு மனம்பதைப்பார்." (நெஞ்சு)

"கொஞ்சமோ பிரிவினைகள்—ஒரு
கோடியென்றால் அது பெரிதாமோ?" (நெஞ்சு)

"சாத்திரங்க ளொன்றுங் காணார்—பொய்ச்
சாத்திரப் பேய்கள் சொல்லும் வார்த்தை நம்பியே
கோத்திரம் ஒன்றாயிருந்தாலும்—ஒரு
கொள்கையிற் பிரிந்தவனைக் குலைத்திகழ்வார்." (நெஞ்சு)

"கஞ்சி குடிப்பதற் கிலார்—அதன்
காரணங்கள் இவையென்னும் அறிவுமிலார்." (நெஞ்சு)

"நண்ணிய பெருங்கலைகள்—பத்து
நாலாயிரங் கோடி நயந்து நின்ற
புண்ணிய நாட்டினிலே—இவர்
பொறியற்ற விலங்குகள் போலவாழ்வார்." (நெஞ்சு)

மனிதனைக் கண்டு மனிதன் பயப்படுதலும், மனிதர்கள் சேர்ந்து வாழ வேண்டிய மானிட சமுதாய வாழ்வில் அளவற்ற பிரிவினைகளைப் புகுத்தி வைத்துக் கொள்ளுதலும், கற்க வேண்டியவைகளைக் கசடறக் கற்றுத் தெளிந்துகொண்டு அதற்குத் தக நடவாமலிருத்தலும், தனது பொருளாதார நிலைமையையும் வாழ்க்கை இன்பத்தையும் பெருக்கித் தீட்டிக் கொள்ளாதவாறு முயற்சி குன்றி உயிர் வாழ்வதும், ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் வளர்ச்சியுருவண்ணம் அசட்டையாக இருப்பதும், விலங்குகளாகப் பிறந்த அஃறிணைப் பொருள்களின் செயலேயன்றி உயர்திணைப் பிறப்பாகிய மக்கட் செயலன்று.

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்." (குறள்)

"சென்ற விடத்துச் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு." (குறள்)

பாரத நாடு நிலவளம், நீர்வளம் ஆகிய அளவற்ற சக்தியைப் பெற்றும், மனித சமூகத்தின் பலம் பிறர் கண்டு அஞ்சும்படி இருந்தும், கற்ற மனப்பான்மையராய், ஜாதி மத வேற்றுமையை அகற்றி அனைத்துயிர் ஒன்றென்று கருதி, பசிப்பிணியைத் தவிர்த்து மனத்துளே பேதாபேதம் அறவே நீக்கி, சினத்தையும் தவிர்த்து வாழ்தலே

சிறந்த தவமாகும். இத்தன்மையான ஆன்மநேய ஒருமைப் பாட்டின் வாழ்வே நம் பாரதியார் நாடி நிற்பது. "ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு, நம்மில் ஒற்றுமை நீங்கின் அனைவர்க்கும் தாழ்வே" என்ற இவரது வாக்கியங்கள் இங்கு பொருந்துமாறு கொள்க.

"மனித ருணவை மனிதர் பறிக்கும்
வழக்க மினியுண்டோ?" (பாரத சமுதாயம்)

"தனியொருவனுக் குணவிலை யெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்—வாழ்க." (பாரத சமுதாயம்)

"'எல்லா உயிர்களிலும் நானே யிருக்கின்றேன்'
என்றுரைத்தான் கண்ணபெருமான்;
எல்லாரு மமரநிலை யெய்து நன்முறையை
இந்தியா உலகிற்களிக்கும்—ஆம்." (பாரத சமுதாயம்)

"எல்லாரு மோர்குலம் எல்லாரு மோரினம்
எல்லாரு மிந்தியா மக்கள்." (பாரத சமுதாயம்)

"பாரத சமுதாயம்" என்ற பாடலில் பாரதியார் கண்ணபிரான் பார்த்தனுக்குரைத்த கீத வாக்கியங்களை மனதிற்கொண்டு தத்துவ உணர்ச்சி ததும்பும் வண்ணம் மேலே காட்டிய அடிகளை வரைந்துள்ளார். ஓர் மனிதன் தன் இனத்தானாகிய மறு மனிதனின் வாழ்வைக் கெடாமல் தன்னாலியன்ற உதவியைச் செய்வதோடு அன்னோனுக்கு வரும் ஏதங்களை எற்றி வீழ்த்திக் காப்பாற்றும் கடப்பாடுடையன் என்பது உயர்ந்த தரும நெறியாகும்.

"மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே." (மணிமேகலை)

"உணவெனப்படுவது நிலத்தொடு நீரே
நிலநெளி மருங்கில் நீர்நிலை பெருக
தட்டோ ரம்ம இவண்தட்டோரே
தள்ளா தோரிவண் தள்ளாதோரே..." (புறநானூறு)

மக்கள் வாழ்விற்கு இன்றியமையாதனவாகிய பொருள்களில் உணவுப் பொருள் முதன்மையானது. பசிப்பிணியைப் போக்கும் மருத்துவரே தவசிகளிர் மேம்பட்டவர்.

"ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்." (குறள்)

இனி, தனி யொருவனுக்கு உணவில்லை யென்றால் ஜகத்தினை அழித்திடுவோம் என்று கூறும் கூற்று பாரதியார் பொதுவுடைமைக் கொள்கையின் உண்மையை உணர்ந்து கூறுவதாகத் தோற்றுகிறது. ஐம்பெரும் பூதங்களைப் படைத்து அதற்கேற்ற பல்லுயிர்த் தொகுதிகளையும் படைத்த ஆண்டவன் எல்லாப் பொருள்களையும் பொதுவாகவே எல்லோருடைய நன்மைக்காகவும் வழங்கியிருக்கின்றான் என்கின்ற கருத்தேதான் அது. முதியோன் இளையோனைத் தாக்கி அன்னோன் பொருளைத் தட்டிப் பறிப்பதும், வலிய நாட்டார் எளிய நாட்டாரை அல்லது சமூகத்தினரை வன்மையின் காரணமாகத் தங்கள் ஆதிக்கத்துள் அடக்கி வைத்துக்கொள்ளுதலுமான செயல் கீதை கருத்துக்கு மாறுபட்டதாகும். பாண்டவ குமாரர்கள் துரியோதனாதியரால் நாடிழந்து, துன்புறுத்தப்பட்டு இன்னலில் உழன்றது தரும விரோதமான காரியமென்றே முடிந்தது. அக்குறைப்பாட்டை நீக்கித் தருமத்தை நிலைநாட்டுவதற்கே கண்ணபிரான் தூது நடந்து பாரதத்தை நடத்திக் காட்டினார். ஒருவனுக்கு உணவில்லை என்று ஏற்படுவது ஜகத்தின் குற்றமில்லையாதலும் ஜகத்தினுள்ள மக்களே காரணமாதலும் அறிக.

> " இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
> நிலமென்னும் நல்லாள் நகும்." (குறள்)

உண்ண உணவும் உடுக்க உடையும் இல்லையே என்று ஏங்கி நிற்கும் ஒருவனைப் பார்த்து நிலமாமகள் எள்ளி நகைப்பாள் என்று கூறிய குறளாசிரியர் கருத்து இங்கு கவனிக்கத்தகுந்தது. தன் முயற்சியால் பொருள் தேடிக்கொள்ளும் வகையானே மக்கள் நிலத்தைச் சீர்படுத்திப் பண்படுத்தி, கிடைக்கக்கூடிய பொருளைப் பெற்றுய்ய வேண்டுமென்பதாம். அங்ஙனம் நிலப்பகுதியானது எல்லா மக்களுக்கும் பொதுமையின்றி ஓர் சிறிய குழுவினர்க்கே உரிமையாக்கப்பட்டு அதனால் ஏற்படும் செல்வவளம் பல்லோர்க்குப் பயன்படா நிலையில் இருக்குமேல் அறவே நன்கு கண்டிக்கப்பட வேண்டும் என்பதுதான் பாரதியாரின் கருத்தாகத் தோற்றுகிறது.

> " இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
> கெடுக வுலகியற்றி யான் " (குறள்)

என்று கூறியவிடத்து மக்களனைவரும் இரத்தலை ஒழித்து இனிமையான முறையிலே வாழக்கடவர் என்பதேயாம். அங்ஙனமின்றி,

கல்லாறெனினும் கொளல் தீது என்றமையான் பிறர் உதவியை நாடி ஏற்று உண்டு வாழ்தலையே உலகத்தைப் படைத்துள்ளவன் விதிப் பானாயின், அக்கொடியோனும் அவனைப்போன்று எங்கும் அலமந்து கெடுவானாக! என்றார் நாயனார். எனவே, மக்கள் முயற்சியோடு வாழவேண்டிய முறைகளைக் கெடுக்கும் சமுதாயமோ, அரசாங் கமோ, நாடோ, அழித்துத் தூற்றற்படற்குரியது என்பதுதான் கவி ஞர் பெருமானின் சித்தாந்தம் எனத் துணிந்து கூறலாம்.

பாரத சமுதாயத்தினர் இருந்த நிலைமையினைக் கண்ணுற்ற கவிஞன், இங்ஙனம் கடிந்து கூறத் துணிந்தார் எனக் கொள்வதே சால்புடைத்தாம்.

எல்லாரும் அமரநிலை எய்துவதற்கு நம் பாரதநாடு துணைசெய்யும் என்று கூறிய கருத்து போற்றுதற்குரியது. சுவாமி விவேகானந்தர் மேல்நாடுகளில் பலவிடங்களிலும் வழங்கிய சொற்பொழிவுகளில் இக்கருத்தை வலியுறுத்திப் பேசியுள்ளார். உடல் வளர்க்கும் உபா யங்கள் தெரிந்த மேல்நாட்டார்களில் பலர் கீழ்நாட்டினரின் உயிர் வளர்ச்சித் தன்மையைத் தெரியாதவராகவே இருந்தனர். சென்ற காலத்தும், நிகழ்காலத்தும், வருங்காலத்தும் இந்திய நாட்டின் பண்பாடும், ஆன்ம சக்தியுணர்வும், மாறுபட்ட சமுதாயத்தினரை நன்மதி காட்டி நன்மார்க்கத்தில் செலுத்தக்கூடியதாக உள்ளன. பல்லாயிரக்கணக்காக வளர்ச்சியுற்ற உயிர்ப்பண்பும், ஆன்மநேய ஒருமைப்பாடும், பாரதநாட்டின் அழியாத் தனிச் செல்வமன்றோ! இக்கருத்து பற்றியே இந்தியா உலக மக்களுக்கு அமரவாழ்வு காட்டும் ஆசிரியன் என்றார் பாரதியார்.

சுதந்திர சூரியன் உதயமாகப்போகும் காலம் நெருங்கியது என்று கண்ட கவிஞன், ஆனந்தப் பெருக்கினால் 'வருகின்ற பார தத்தை வாழ்த்தல்' என்று ஓர் பாடல் பாடினார். அது :—

> "மெய்மை கொண்ட நூலையே — அன்பொடு
> வேதமென்று போற்றுவாய் — வா வா வா."
>
> "இளைய பாரதத்தினாய் — வா வா வா,
> எதிரிலா வலத்தினாய் — வா வா வா."
>
> "விளையுமாண்பு யாவையும் — பார்த்தன்போல்
> விழியினால் விளக்குவாய் — வா வா வா."

**"ஒற்றுமைக்கு ளுய்யவே — நாடெல்லாம்**
**ஒருபெருஞ் செயல் செய்வாய் — வா வா வா."**

பாரதியார் கண்ட சமுதாயம் பண்டைப் பெருமையினுல் மிக்க மேன்மையுடைத்து என்பதற்கேற்ப தனது வீறுகுன்றுமல் உலகத்துக்கோர் புதுமையாய் நின்று ஒளிவீச வேண்டுமென்பதே.

## பாரதியார் தேசியம்

அரிது அரிது மானிடமரிது! என்றபடி மக்களாய்ப் பிறந்தார் இந்நிலவுலகின் கண்ணே பல்வேறு நாடுகளிலும் வாழ்ந்து வருகின் றனர். காலநிலைக் கேற்பவும் நில வளமைக் கேற்பவும் வாழ்க்கைத் திறம், தொழில் வேறுபாடுகள், பழக்க வழக்கங்கள் மாறுபட்டே வழங்குகின்றன. தங்கள் வாழ்க்கைக்குச் சாதனமான நிலப் பகுதியிலுள்ள மனிதர்கள் அந்நிலப்பகுதிகளில் வாழையடி வாழையாக இருக்க நேரிட்ட தன்மையால் அப்பகுதிகளைத் தங்கள் உரிமைப் பொருள்களாகக்கொண்டு அன்பு காட்டுகின்றனர். ஏற் பட்டுள்ள சூழ்நிலைகள் மக்களை மாத்திரமன்றி ஏனைய ஜீவராசிகளை யும் தன் வசமாக்கும் திறத்தனவாய் இருப்பதினுல், முதன்மை பெற்ற மனித ஜீவன் தன் இயற்கைக்குப் பொருந்திய பழக்கமான இடத்தையோ சிற்றூரையோ நகரத்தையோ நாட்டையோ நேசிக்கத் துணிகின்றது. தன்னை வளர்த்த தாய்முலைப்பால் தன்னியல்பை வளர்த்து வருவதுபோல், தான் பிறந்த தாயகமாகிய நாடும் தன்னை வளர்த்து வருகின்றது. தன்னைப் போன்ற தன் நிலப்பகுதியில் வாழும் மற்றய மனித சமூகத்தினரையும், கூட்டுறவின் பிணிப்பால் மனிதன் அதிகமாக நேசிக்கின்றுன். பறவைகளும் மிருகங்களும்கூட இவ்விதிக்கு விலக்கானதாகத் தோன்றவில்லை. எனவே, ஓர் நிலப் பகுதியில் அநேக நூற்றுண்டுகள் வாழ்ந்துவந்த மக்கட் தொகுதி யினர் ஒருவருக்கொருவர் அன்பு காட்டிச் செல்லும்பொழுது, அந் நாட்டு மக்களிடத்துத் தோன்றிய அன்பே அவர்கள் வாழும் நாட்டு அன்பாக மாறுதலுறும். நாட்டு மக்களிடையே நிலவிவரும் தேச பக்தியே அவர்களால் அறிந்து பயிலப்படும் மொழியின் கண் ஊடுரு விச் சென்று மொழியன்பாகத் திகழ்கின்றது. ஆகவே, தனது தாயினிடத்துப் பேசியதும், தன் உறவினரிடத்துப் பேசியதும் தன் தேயத்தாரிடத்துப் பேசியதுமாகிய மொழியே தனது சொந்த மொழியாக மாறி நிலக்கின்றது. நாட்டினிடத்து வைத்த அன்பும்,

தாய்மொழியினிடத்து வைத்த தன் அன்பும், தாயன்பும் கலந்து மனிதனை ஓர் அளவிற்குக் கட்டுப்படுத்தி விடுகின்றன என்னலாம். இங்ஙனமே தோன்றும் அன்பு நிலைகளே தேசப்பற்றும் மொழிப் பற்றுமாமென்க.

> " பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
> நற்றவ வானினும் நனிசிறந்தனவே "

என்று பாரதியார் கூறியிருப்பது அனுபவ சாத்தியமான உண்மையாகும்.

பாரதியார் தேசீயம் இன்னதென்பதைக் கூறிய வாக்கு முறையானே, வேறு நாட்டினர்களின் தேசிய உணர்ச்சிகள் எத்தன்மையன என்று சிறிது தெரிந்துகொள்ளுதல் வேண்டற் பாலதே ஆகும். நாகரிகத்தில் சிறப்புற்றோங்கிய கிரேக்கர்கள், ரோமர்கள் எத்துணைத் தேசாபிமானம் உடையவர்களாய் இருந்தார்கள் என்பதை அவர்களால் எழுதப்பட்டிருக்கும் நூல்கள் நன்கு தெரிவிக்கின்றன. விஷம் கலந்த பானத்தை அளித்த தனது ஏதென்ஸ் நகர வாசிகளை சாகிரடிஸ் என்ற ஞானியார் தனது தேசாபிமான உணர்ச்சியாலும், தனது நாட்டின் பண்பாட்டின் மேன்மையாலும், அந்நகரத்தைவிட்டு நீங்காமலே அப்பானத்தை வாங்கிப் பருகி உயிர்மாண்டனர். அப் பெரியாரின் செயல் வியப்பினும் வியப்பன்றோ! அவர் பெருமையைத் தெரியாத ஏதென்ஸ் நகரமக்கள் அங்ஙனம் செய்தது பொருந்தா ஒழுக்கமாயினும் சாகிரடிஸ் தன் நாட்டு மக்களைத்தூற்றாது கட்டுப்பட்டிருந்தார் என்பது அழியாப் புகழ்ச்சிச் செயலன்றோ!

சுதந்திரத்திற்கே தங்கள் புலமையையும் வாழ்நாளையும் செலவழித்து மக்களுக்கு உணர்ச்சியைத் தட்டி எழுப்பி விழிப்படையச் செய்த பிரான்சு தேசத்தலைவர்களான வால்டேர், ரூசோ முதலானவர்களின் தேசியத்தைப் புகழ்ந்து எழுதாதவர் இல்லை என்னலாம். பிரான்சு தேச விடுதலையின் பயனாக இங்கிலாந்து தேசமக்களினிடையே சிறப்புடன் விளங்கிய எட்மண்ட் பர்க் முதலானவர்களும் தேசியத்தின் பெருமையை அருமையான முறையில் எழுதி வெளியிட்டுள்ளார்கள். நீலக்கடல் மத்தியில் மாணிக்கக் குன்று நின்று மிளிர்வது போன்ற இங்கிலாந்து தேசத்திலே பிறந்த மகாகவிகளாகிய ஷேக்ஸ்பியர், மில்டன், டென்னிசன், பைரன் முதலியோர்

தங்கள் தாய் நாட்டுப் பற்றில் சிறிதேனும் குறைந்தவர்களாகக் கொள்ளுமாறில்லை. ஜெர்மனி தேசத்தை முன்னணிக்குக் கொண்டு வந்த பிஸ்மார்க்கும், இத்தாலி தேசத்தை நன்னிலைக்குக் கொண்டு வந்த கெரிபால்டியும் சிறந்த தேசாபிமானிகளே.

தேச சேவையே தெய்வ சேவையாகக் கொண்டு கர்மயோகத்தில் எழுந்தருளும் நம் பாரதியார் தன் பாரதநாட்டின் பெருமையை முற்றிலும் உணர்ந்திருந்தமையான் தன் வாழ்க்கையையே தேச விடுதலைக்காகத் தியாகம் செய்தார்.

"அன்பர் பணிசெய்ய எனை ஆளாக்கி விட்டுவைத்தால்
இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே."

(தாயுமானவர்)

நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் என்ற இரத்தினங்களைப் பெற்ற தீர்க்கதரிசிகள் மக்கள் நல்வாழ்வு பெறுவதற்கே உழைத்து வருபராவர். பிறர் இன்முகங் காண்டலே அவர்க்கு இனிமையாம். பாரதியார் பாரதத் தாயின் சேய்கள் பலங்குன்றிப் பதடிகள்போல் வாழ்வதைப் பார்த்து மனம் நொந்தார். நாடு சுயராஜ்ய உரிமை பெற்று எழுந்தாலல்லாமல் இந்திய ராணியின் ஆன்மா இன்பங் கொள்ளுமாறு இல்லை, வாழ்வு புதுப்பிக்கப்பட வேண்டும்; தளைகள் நீங்க வேண்டும்; அன்பு வளர வேண்டும்; மனிதர்கள் நிமிர்ந்து நடக்க வேண்டும்; பிறநாட்டார் அரசியல் நம்மைவிட்டு அகல வேண்டும் என்றெல்லாம் ஆலோசித்துத் தனது ரசங்கனிந்த பாடல்களில் தேச உணர்ச்சி வெள்ளம் பொங்குமாறு பாடிச்செல்கின்றார். சில அடிகள் வருமாறு :—

"ஜாதி மதங்களைப் பாரோம்—உயர்
ஜன்ம மித்தேசத்தி லெய்தின ராயின்
வேதிய ராயினு மொன்றே—அன்றி
வேறு குலத்தின ராயினு மொன்றே." (வந்தே)

"ஒன்று பட்டாலுண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கி லனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும்?" (வந்தே)

"முப்பது கோடியும் வாழ்வோம்—வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்" (வந்தே)

" ஆயிரமுண்டிங்கு ஜாதி—எனில்
அன்னியர் வந்து புகலென்ன நீதி?" (வந்தே)

"சாதி யிரண்டொழிய வேறில்லைச் சாற்றுங்கால்" என்றும் "இட்டார் பெரியோர் இடாதோர் இழிகுலத்தோர்" என்றும் கூறிய ஔவை முதுமொழி இங்கு விதந்தோதப்படுவது சால்புடைத்தாம். முப்பது கோடி மக்களும் ஓர் தாயின் மக்கள் என்றும், ஒன்றி வாழ்வதே தேச முன்னேற்றத்திற்கு முதன்மையானதென்றும், தேசம் பகைப் புலத்தாரால் நலியப்பெறுமாயின் முப்பது கோடி மக்களும் மனம் பொருந்திப் போராடிப் பாதுகாக்க வேண்டும் என்றும் நன்மதி கூறிச் செல்லுதல் மாண்புடைத்தன்றோ! பிளவுகள் ஏற்படின் தேசம் சிதறிப்போகும்; பெருமை குலையும் என்ற அடிப்படையான சரித்திர உண்மையைப் பாரதியார் வற்புறுத்திக் கூறுவது பொன்னே போல் போற்றற்குரியது.

நாட்டின் இலக்கணத்தைக் கூறவந்த குறளாசிரியர் "தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் சேர்வது நாடு" என்றும்,

" நாடென்ப நாடா வளத்தன நாடாகா
நாட வளந்தரு நாடு"

என்றும் கூறியதற்கிணங்க நம் பாரதியாரும் பாரதநாட்டின் பெருமையை நன்குணர்ந்த முறையிலே எழுதிப் போந்தார். அவ்வடிகள் வருமாறு:—

" ஞானத்திலே பரமோனத்திலே—உயர்
மானத்திலே அன்ன தானத்திலே
கவிதையிலே உயர் நாடு—இந்தப்
(பாருக்குள்ளே நல்ல நாடு)"

" ஆற்றினிலே சுனை யூற்றினிலே—தென்றற்
காற்றினிலே மலைப் பேற்றினிலே
ஏற்றினிலே பய னீந்திடுங்காலி
யினத்தினிலே யுயர் நாடு—இந்தப்
(பாருக்குள்ளே நல்ல நாடு)"

மேலும், நாட்டின் நல்லியல்பு குறையாதவாறு பசிப்பிணியும், உடற்பிணியும், செறுபகையும் இல்லாது இருத்தலே நாட்டிற்கு அழ

காம் என்று கூறிய குறள் வெண்பாவின் கருத்துக்கிசைய பாரதியாரும் பாடிச்செல்லுதல் காண்க.

"உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு."

(குறள்)

"நன்மையிலே யுடல் வன்மையிலே—செல்வப்
பன்மையிலே மறத் தன்மையிலே
பொன்மயி லொத்திடு மாதர்தங் கற்பின்
புகழினிலே யுயர் நாடு"

(பாருக்குள்ளே நல்ல நாடு)

பாரதமாதா திருப்பள்ளியெழுச்சி என்பது அடிமை வாழ்வில் உறங்குகின்ற மக்களைத் துயிலினின்றும் எழுப்புவதற்கேயாகும். திருப்பாவை பாடிய நாச்சியாரும், திருவெம்பாவை பாடிய மணிவாசகப் பெருமானும் மார்கழி நீராட்டுவதற்கு அடியார்களைக் கூவி அழைக்கின்றனர். இங்கு பாரதியார் பாரததேவிக்குரிய திருத் தசாங்கங்களைச் சாற்றி சுதந்திர வாழ்வைப் பெறுவதற்காக இந்தியத் தொண்டர்களை பதினெண்மொழிகளும் பாடிய முறையே சங்கு நாதத்தை முழக்குகின்றார். விடுதலை முரசத்தை அடித்துச் சங்கோசையை எழுப்புகின்ற திறம் படித்து இன்புறற் பாலதேயாம். 'தாயின் மணிக்கொடி பாரீர்' என்ற பாடலில் பாரதியார் தேசியம் கொடி கட்டிப் பறக்கிறது என்னலாம். அவரால் கட்டப்பட்ட கொடி இன்னும் பறந்துகொண்டே வருகிறது.

"இந்திரன் வச்சிர மோர் பால்—அதில்
எங்கள் துருக்க ரிளம்பிறை யோர்பால்"

(தாயின் மணிக்கொடி பாரீர்)

"செந்தமிழ் நாட்டுப் பொருநர்,—கொடுந்
தீக்கண் மறவர்கள், சேரன்றன் வீரர்,
சிந்தை துணிந்த தெலுங்கர்,—தாயின்
சேவடிக் கேபணி செய்திடு துளுவர்,

துஞ்சும் பொழுதினுந் தாயின்—பதத்
தொண்டு நினைந்திடும் வங்கத்தினோரும்
சேர்ந்ததைக் காப்பது காணீர்!—அவர்
சிந்தையின் வீரம் நிரந்தரம் வாழ்க!"

(தாயின் மணிக்கொடி பாரீர்)

இப்பாடலில் பதினெண் பாஷை இனத்தார்களும் பலவகையான மதங்களைக் கைக்கொண்டவர்களுமான பாரத நாட்டு மக்கள் ஒன்று சேர்ந்து பாரத ராணியின் கொடியை வீரம் நிறைந்த உள்ளத்தாராய்க் காத்து வரவேண்டுமென்று வேண்டுகிறார் நம் கவிஞர் பெருமான். இவரது தேசியம் களங்கமற்றதாயும் மாசற்றதாயும் நின்று நிலவும் விழுமிய பொருள் எனக் கொள்க.

பாரதியார் தேசியம் மிதவாதத்தையே கொண்ட கோகலே மேதா முதலானவர்களைப் போன்றதல்லாது "சுயராஜ்யம்" எனது பிறப்புரிமை என்று கர்ஜித்துச் சொல்லிய திலகர் பெருமானது தீவிர வாதமேயாகும். லோகமான்ய கங்காதரத் திலகரையே தனது சிறந்த தலைவனாகக் கொண்டொழுகிய குழுவினைச் சேர்ந்தவர் நம் பாரதியார் என்பது அவரது வாய் மொழியினின்றும் புலனாகிறது.

**" வாழ்க திலகர் நாமம்! வாழ்க! வாழ்கவே**
**வீழ்க கொடுங் கோன்மை! வீழ்க! வீழ்கவே (வாழ்க)**
**துன்ப மென்னும் கடலைக் கடக்குந் தோணி யவன்பெயர்**
**சோர் வென்னும் பேயை யோட்டுஞ் சூழ்ச்சி யவன்பெயர் "**
**(வாழ்க)**

**" ஐய னல்லிசைப் பால கங்காதரன்**
**சேரலர்க்கு நினைக்கவுந் தீயென**
**நின்ற வெங்கள் திலக முனிவர்கோன்**
**சீரடிக்கம லத்தினை வாழ்த்துவேன்**
**சிந்தை தூய்மை பெறுகெனச் சிந்தித்தே."**

தீவிரவாதக்கனல் மூண்டெழுந்த காலத்தில் திலகர் பெருமான் ஆற்றிய செயல்கள் சரித்திரத்தில் தகுந்த இடம் பெற்றுள்ளன. அன்னார் மறைந்தபின் காந்தியடிகளார் தோன்றியது நம் பாரதியாருக்கு ஆறுதலளித்தது. "ஒத்துழையாமை" இயக்கம் நாட்டைக் கலக்க ஆரம்பித்தது. தீவிர உணர்ச்சியாளர்களுக்கு அதிக ஊக்கத்தைக் கொடுத்ததென்றே சொல்லலாம். அதன் பெருமையைக் கீழ் வரும் அடிகளில் குறிப்பிடுகின்றார்.

**" பெருங்கொலை வழியாம் போர்வழி யிகழ்ந்தாய்;**
**நெருங்கிய பயன்சேர் 'ஒத்துழையாமை'**
**நெறியினால் இந்தியா விற்கு**
**வருங்கதி கண்டு பகைத்தொழில் மறந்து**
**வையகம் வாழ்க நல்லறத்தே." (காந்தி பஞ்சகம்)**

பாரதி தமிழன்னையின் தவப் புதல்வன். பாரத ராணியின் தளகர்த்தன். தமிழ்நாட்டு மக்கள் பண்டைக் காலத்திலிருந்து வீரம், சுதந்திரம், தேச சேவை முதலான அரிய பண்புகளில் ஈடு பாடு பெற்றிருந்ததை நூல்களின் மூலம் நன்கு அறிந்தமையால் 'சுதந்திரத்தின் பெருமை' என்ற பாடலில் கண்ணியமான கருத் துக்களை அவர் தீட்டியுள்ளார்.

**"கல்வி தறுகண் இசைமை கொடைமையெனச்**
**சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே."** (தொல்காப்பியம்)

நாட்டின் சேவைக்காகச் சென்று அஞ்சா நெஞ்சத்துடன் போர் புரிந்து பகைப்புலத்தை அழித்து வாகை சூடி வருதல் வீரர் களான தறுகணாளர்க்கு ஓர் சிறந்த அணிகலனும். செயற்கரிய செயல் செய்தொழுகல் தறுகண்மையுடையார்க்கே அன்றி ஏனை யோர்க்கு இயலாததாகலின், நாட்டைக் காத்தலே வீரமுடைச் செய லாகையானும் கல்விக்குப்பின் தறுகண்மையைத் தொல்காப்பியனார் வைத்தார் என்பது. இல்லறங் காக்கும் இயல்புடையோர்களும் அரசனையும் தங்கள் தாய் நாட்டையும் பகைவர்கள் கையினின்றும் காப்பதற்காகத் தங்கள் அருமைத் தலைவியரை விட்டுப் பிரிதலாகிய பாலை ஒழுக்கத்தையும் மேற்கொள்வர் என்பதைத் தொல்காப்பியனார் தனது இலக்கண நூலில் கூறிச் சென்றார். அது வருமாறு:—

**"ஓதல் பகையே தூதிவை பிரிவே."** (தொல்.—அகத்திணையியல்)

பண்டைக் காலத்துப் பெண்டிரும் இவ்வீர உணர்ச்சி மிக்க உடையவராய் இருந்தனர் என்பதற்குரிய தக்கசான்றுகள் சங்க நூல்களில் வெகுவாகக்கிடைக்கின்றன. தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனும், இமயம் சென்று கண்ணகி தேவிக் கெனக் கற்கொண்டு வந்த சேரன் செங்குட்டுவனும், புலிக்கொடியை வடவிமயத்தில் பொறித்துப் புகழ்கொண்ட கரிகாற் பெருவளவனும், இன்னோரன்ன பிறரும் தேசியம் கனிந்த மேன்மக்கள் என்று கூறுவது இழுக்குடைத்தன்று. தமிழ்மக்கள் வீரமும் தேசபக்தியும் ஆண் மக்களோடு வாழ்ந்த பெண்மக்களோடும் நின்று நிலவியது. கிரேக்க நாட்டு ஸ்பார்ட்டா பெண்களின் உணர்ச்சிக்குக் குறையாத உணர்ச்சியுடையவர்களாகப் பண்டைச் சங்ககாலப் பெண்மணிகள் இருந்ததாக நூல்கள் முறையிடுகின்றன. எனவே, "மூதின் முல்லை" என்ற துறை ஏற்படலாயிற்று. உத்தம புத்திரனாகிய இராம

பிரானின் சரித காவியத்தைத் தமிழில் வழங்கிய கல்வியிற் பெரியோனுகிய கம்பநாடனும் தனது தேசாபிமானத்தைத் தனது காவியத்தில் புலப்படுத்தாமல் சென்றுனில்லே. இங்கு ஓர் உதாரணம் தருவோமாக.

"பூவிரி பொலன் கழற் பொருவிற் ருனேயான்
காவிரி நாடன்ன கழனி நாடொரீஇத்
தாவர சங்கமம் என்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை யெய்தினுன்." (குகப்படலம்)

இராமனைக் கொணர்வான் வேண்டிய பரதன் காட்டிற்குச் செல்லுங்காலையில் மருதத்தண்பணை செழித்த கோசல நாட்டை நீங்கும்பொழுது காவிரி நாட்டிற்குச் சமானமான கோசல நாட்டை விட்டு நீங்கினுன் என்ருர் கம்பர். இங்கு கம்பனின் நாட்டுப்பற்று சொல்லாமலே விளங்குமென்க. பாரத ராணியின் தளகர்த்தனுன பாரதியார் சுதந்திரப் பெருமை என்ற பாடலில் சொல்லும் சொல் பின்வருமாறு :—

"வீர சுதந்திரம் வேண்டி நின்ருர் பின்னர்
வேறென்று கொள்வாரோ ?—என்றும்
ஆரமு துண்ணுதற் காசை கொண்டார் கள்ளில்
அறிவைச் செலுத்து வாரோ ?
பிறந்தவர் யாவரு மிறப்ப துறுதி யெனும்
பெற்றியை யறிந்தாரேல்—மானம்
துறந்தறம் மறந்தும்பின் னுயிர்கொண்டு வாழ்வது
சுகமென்று மதிப்பாரோ ?" (சுதந்திரப் பெருமை)

"மான மிழந்தபின் வாழாமை முன்னினிதே" என்றும்

"மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னர்
உயிர் நீப்பர் மானம் வரின்" (குறள்)

என்றும் கூறிச் சென்ற தமிழர்களின் வாக்கியங்களின் பண்பாட்டை இங்கு கவனித்தறிதல் சாலச்சிறந்தது. பாரதியாரின் தேசியம் பண்டைத் தமிழர் குறிக்கோள்களைக் கொண்ட "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற பண்பாட்டோடு கலந்து பாரதநாடு முழுமையும் பாய்ந்து தேசியப் பயிரைச் செழிக்கச் செய்தது என்னலாம். பாரதியார், இந்திய தேசியத்தைத் தமிழில் விளக்கிப்போந்த இந்தியக் கவிஞன் என்று சொல்வது மிகையாகாது !

## பாரதியார் தமிழ்ப்பற்று

பாரதியார் தமிழ்மொழிப் பற்றென்பது தமிழ் மக்களாகப் பிறந்தவர்களுக்கேயன்றி மற்றுமுள்ள இந்திய நாட்டு மக்களுக்கும், அன்னிய நாட்டினர்க்கும் நன்கு தெரிந்ததேயாம். வங்காள நாட்டிற் பிறந்து உலகப் புகழ்கொண்ட ரவீந்திரநாத் தாகூர் போன்ற பெரியார்கள் தாங்கள் இயற்றிய அரிய பெரிய நூல்களையும் காவியங்களையும் தங்கள் தங்கள் தாய்மொழியில் முதன் முறையாக இயற்றித் தந்து பின்னர் பிறமொழிகளில் பெயர்த்தெடுத்து எழுதினர். அங்ஙனமே செந்தமிழ்ச் செல்வராகிய நம் பாரதியாரும் தன் அரிய தேசியக்கனல் வழியும் இனிய பாக்களையும், உலகியலுக்கேற்ற உயர்ந்த கருத்துரைகளையும் தனது தாய்மொழியான தமிழ் மொழியிலேயே யாத்துத் தந்துள்ளது அன்னாரின் மொழிப்பற்றை நன்கு வலியுறுத்துகின்றது. இங்கு நிலைத்த புகழ்பெற்ற ஹோமர் என்ற பெரியார் தனது 'ஆடிஸி', 'இலியட்' முதலான மகாகாவியங்களைத் தன் தாய்மொழியான கிரேக்க மொழியில் எழுதியதும், டாண்டே என்பவர் தனது உயரிய காவியமான 'டிவைனு காமடீயா' என்றதைத் தன் தாய்மொழியான இத்தாலி பாஷையில் வரைந்ததும், கதே என்றவர் 'பாஸ்டு' என்ற பரிசுத்தமான காவியத்தைத் தன் தாய்மொழியாகிய ஜெர்மனியில் எழுதிப் போந்ததும், வர்ஜில் என்பவர் 'ஈனிட்' என்ற காவியத்தையும் லியோ டால்ஸ்டாய் என்பவர் தனது அரிய நூல்களையும் தங்கள் தங்கள் மொழியில் எழுதிப் போந்ததும் இங்கு அறிதற் பாலன செய்திகளாகும். இயற்கையிலேயே ஒவ்வொரு மனிதனும் தன் தாய்மொழியினிடத்துப் பற்றுக் கொண்டு இருப்பதும் போற்றி எழுதுவதும் பேசுவதும் இயல்புடைத்தாம். ஆயினும், நம் பாரதியார் அநேக மொழிகளில் கற்றுத் தெளிந்த பின்னரே, தமிழ் மொழியின் நற்பண்புகள் இனிக்கத் தகுந்த முறையில் அமைந்திருந்தலைத் தன் அறிவால் அறிந்து அதன் வாயிலாகவே தமிழ் மக்களுக்கும், தமிழ் நாட்டிற்கும், தமிழ்த் தாய்க்கும் சிறந்த சேவை செய்துள்ளார் என்பதுதான் சிந்தித்து இன்புறத் தக்கது.

இந்தி, ஆங்கிலம், வடமொழி, பிரஞ்சு, வங்காளம் முதலிய இனிய மொழிகளை நன்கு கற்று, அவ்வம் மொழிகளிலுள்ள பெருங் காவியங்களையும், இலக்கியப் பகுதிகளையும் கற்று இன்பப் பகுதிகளை

ஆராய்ந்து அனுபவித்த பின்னரே தமிழ் மொழியின் இனிமையைக் கண்டார். தமிழின் திறத்தைப் புலமைக் கண்கொண்டு கண்ட பின்னரேதான் "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்குங் காணோம்" என்று பாடியருளியது. புதுவையில் பாரதியார் வாழ்ந்த காலத்தில் அவருடைய நூல்கள் அங்குள்ள மொழியாளர்களால் போற்றப்பட்டதுமன்றி, பிரான்சு தேசத்திற்கும் மொழி பெயர்த்து அனுப்பப்பட்டது என்றும், அத்தேயத்தினரும், பாரதியாரின் புலமையை மெச்சிப் புகழ்ந்தனரென்றும் தெரிய வருகிறது. இவ்வரிய செய்தி அவரது சீட்டுக் கவிகளினின்றும் புலனுகின்றது.

தமிழ்த் தாயை வாழ்த்துவதும், தமிழ் மொழியைப் புகழ்ந்து போற்றுவதும், தமிழ் நாட்டைத் தட்டியெழுப்புவதும், பாரதியாரின் நடு நிலைமையைச் சுட்டுகின்றதே அன்றி வேருென்றில்லை. 'தமிழ்த் தாய்' என்ற பாடலில் தமிழ் மொழி சிவபெருமானுல் பெற்றெடுக்கப் பட்டதும், அகத்திய முனிவர் இலக்கணம் செய்து கொடுத்ததும், முடியுடை மூவேந்தர்களால் நன்கு வளர்க்கப்பட்டதும், ஆரிய மொழிக்குச் சமமான முறையில் அம்மொழியன்னை நின்று நிலவு வதும், மிக்க அழகாகக் கூறப்படுகின்றன.

**" ஆன்ற மொழிகளினுள்ளே—உயர்**
**ஆரியத்திற்கு நிகரென வாழ்ந்தேன்."** (தமிழ்த் தாய்)

இங்கு இக்கருத்துக்களுக்கு இணையாக உள்ள கீழ் வரும் பழைய செய்யுளொன்றையும் உற்று நோக்குக.

**" வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத்**
**தொடர்புடைய தென்மொழியை உலகமெலாந் தொழுதேத்தக்**
**குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனில்**
**கடல் வரைப்பில் இதன்பெருமை யாவரே கணித்தறிவார்."**

நன்முறையிலே தமிழ்ப் புலவர்களால் தீஞ்சுவை யமுதம் சிந்தும் வண்ணம் காவிய அழகோடு வளர்ந்து வந்த தமிழின் பன் னூல்கள் காலத்தின் கொடுமையால் தோன்றிய கொடுங்கடல் கோள் களால் அழிந்து போயின. கன்னிப் பருவத்தின் கட்டிளமை சிதையாமல் விளங்கும் காலத்து, திசைச் சொற்கள் பலவாக வந்து சேர்ந்து தமிழில் கலந்தபோதினும், அத்திசைச் சொற்கள்

தமிழிலக்கண அளவிற்கு நின்று நிலவாதபடி அழிவுற்றிறந்தன என்று கூறும் பாரதியார் ஆராய்ச்சித் திறம் வியக்கத் தக்கதே.

> "'புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
> பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;
> மெத்த வளருது மேற்கே—அந்த
> மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை.
> சொல்லவுங் கூடுவதில்லை—அவை
> சொல்லுந் திறமை தமிழ்மொழிக் கில்லை;
> மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
> மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்'
> என்றந்தப் பேதை உரைத்தான்—ஆ!
> இந்த வசையெனக் கெய்திடலாமோ?
> சென்றிடுவீ ரெட்டுத் திக்கும்—கலைச்
> செல்வங்கள் யாவுங் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்."

(தமிழ்த் தாய்)

தமிழ் மொழியின் தளரா இளமையும், திட்பநுட்பமும், பண்பாடுகளும் கலை உயர்ச்சியும் நன்கு தெரிந்த பாரதியார், தன் அருமைத் தமிழ்த் தாய்க்கு புதிய அணிகலன்களைப் பூட்டுதற்கே முந்துகின்றார் என்பது புலனாகின்றது. தமிழ் மொழி வானளாவிய பொருள்களையும் அளக்கவல்ல சக்தியைப் பெறுதலே பிற்கால வாழ்விற்குச் சிறப்புடைத்து என்ற எண்ணங் கொண்டவராவர் பாரதியார் எனத் தெரிகிறது. மேல்நாட்டு அறிஞர்கள் தளரா முயற்சியினால் தங்கள் தங்கள் உணர்வுக் கலைகளையும் அறிவியற் கலைகளையும் (Arts & Sciences) வளர்த்து வருவதைக் கண்ட தமிழர்கள் வாளாவிராமல் பலதிக்குகளுக்கும் சென்று அக்கலை ஞானத்தைப் பறித்துவந்து தமிழ்நாட்டிலும், தமிழ் மொழியிலும் பயிரிட வேண்டுமென்று விரும்புகிறார் பாரதியார். தமிழர்கள் பிற நாடுகளுக்குச் சென்று தங்கள் வாணிபத்தை வளர்த்ததோடு தமிழ்நாட்டின் நாகரிகத்தையும், பண்பாட்டினையும் அம்மக்களுக்குப் போதித்துள்ளனர். இவ்வுண்மைகள் சங்க நூல்களில் வெகுவாகக் கூறப்படுகின்றன. எனவே, தமிழர்கள் வருங்கால இந்தியாவில் தலைநிமிர்ந்து நடக்க வேண்டுமானால், தமிழ்மொழி தன் பழைய பெருமையை அடைய வேண்டுமானால் பிறர் குறைகூறாதபடி காத்துக்கொள்ளுங்கள் என்ற எச்சரிக்கையைப் பாரதியார் செய்துள்ளார் என்று கொள்வதே ஏற்புடைத்தாம்.

'தமிழ்' என்ற தலைப்பின்கீழ், பாரதியார் பாடும் பாடல் அவர் தமிழன்னையின் தவப்புதல்வனென்றே சாற்றுகின்றது.

> **"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்**
> **இனிதாவ தெங்கும் காணோம்.**
> **தேமதுரத் தமிழோசை உலகமெலாம்**
> **பரவும் வகை செய்தல் வேண்டும்."** (தமிழ்)

குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி நீங்கிய சொல் அழியாது நிலைத்து நிற்கும் தரத்ததன்றோ! "தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்' என்று கூறிய அச்செந்நாப் புலவரின் சீரிய வாக்கு செல்வாக்காகவே இருப்பதை நாம் இன்றும் பி. பி. ஸி. நிலயத்தினின்றும் கிளம்புகின்ற தமிழோசையின் அலைகள் பல நாடுகளிலும் அடித்து வருகின்றதைக் கண்டு களிக்கின்றோம் அல்லவா? பொதிய மலையினின்றும் பிறக்கும் தென்றற் காற்று போன்று நம் தமிழ்த்தென்றல் மேன்மையாகச் சென்று கிழக்கிந்திய நாடுகளிலும் தீவுகளிலும் உள்ள மக்கள் மனங்குளிரச் சென்று வருதல் ஒப்பற்ற மகிழ்ச்சியுடைத்தன்றோ? "சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்" என்ற இடத்தில் கம்பன் "சொல்" என்ற சொல்லை எத்துணை வேகமுடையதாகக் கருதி எழுதினான் என்பது இங்கு யூகிக்கத் தகுந்தது.

> **"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்**
> **வள்ளுவர் போல் இளங்கோவைப் போல்,**
> **பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை, உண்மை**
> **வெறும் புகழ்ச்சி யில்லை."** (தமிழ்)

தமிழுக்குக் கதியாகவுள்ளது இரண்டென்பர் மேலோர். அவை யாவன: "கதி" என்ற சொல்லினுள்ள "க" என்ற எழுத்து கம்பநாடனையும், "தி" என்ற எழுத்து திருவள்ளுவரையும் என்பதாம். இவ்விரு தமிழ்வாணர்களும் தமிழ்மொழி உள்ளளவும் இறவாது நின்று தொண்டாற்றும் திறத்தினராவர். பாரதியார் சங்கநூல்களான தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியங்கள், ஐந்து சிறு காப்பியங்கள் முதலாக உள்ள கருவூலங்களை எல்லாம் முறைமுறையாகத் திறந்து பார்த்துத் தெளிந்தவர். காளிதாசன், பவபூதி, பர்த்ருஹரி முதலான வடமொழி வல்லார்களின் நவரசப் பகுதிகளையும் நன்கு சுவைத்

தவர். ஆங்கில மணிகளாகிய மில்டன், ஷேக்ஸ்பியர், ஷெல்லி, கீட்ஸ் முதலானவர்களின் கவிதை வெள்ளத்தில் மூழ்கி ஆழங்கண்டவர். இந்தி மொழியிலும் அவர் காணுத நூலில்லை. அத்துணை நுண்மாண் நுழைபுலமுடைய நம் இலக்கியச் செம்மல் உலகத்தின் கண்ணே பிறந்த புலவர் பெருமக்களில், கம்பனைப்போல், இளங் கோவைப்போல், வள்ளுவர்போல் பூமிதனில் யாரும் பிறந்ததில்லை என்று கூறுவதோடு நில்லாமல், "உண்மை" வெறும் புகழ்ச்சி யில்லை என்கின்ருர்.

இங்கு பாரதியார் இவ்வடிகளைத் தாய்மொழியினிடத்துக் கொண்ட பற்றின் காரணமாகக் கூறிய வார்த்தைகளா? அற்றேல் தமிழ்மொழியின் மாண்பை அறிந்து சொல்லிய வார்த்தைகளா? என்று கவனிப்போம். "உண்மை வெறும் புகழ்ச்சியில்லை" என்று கூறும் அவரது வாக்கு உண்மையே அன்றிப் பிறிதில்லை. தமிழர்கள் சத்தியத்தை உண்மையென்றும், வாய்மை என்றும், மெய்ம்மை என்றும் கூறிப் போந்தனர். உண்மை என்பது உள்ளத்தின் தன்மை. மெய்ம்மை என்பது காயத்தின் தன்மை. வாய்மை என்பது வாயின் தன்மை. இம் மூன்றினுலும் ஒரே முகமாகச் சொல்லப்படுவது உண்மை, மெய்ம்மை, வாய்மை என்ருயிற்று. அதைத்தான் திரிகாண சுத்தியாய்ச் சொல்லப்படுவ தென்றும் மனேவாக்குக் காயங்களுக்கு விரோதமின்றிச் சொல்லப்படுவ தென்றும் உலக நடையில் வழங்கிவருகின்றனர். ஆதலால், உண்மை, மெய்ம்மை, வாய்மை என்ற சொற்களே சத்தியம் என்ற பொருளை உணர்த்தியவாறு காண்க.

> **"மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்**
> **சொல்வதிலோர் மகிமை யில்லை;**
> **திறமான புலமையெனில் வெளிநாட்டோர்**
> **அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்."** (தமிழ்)

தமிழின் பெருமையைத் தமிழர்களாகப் பிறந்தவர் சொல்லிக் கொள்வதினும் பிற நாட்டிலுள்ள கல்விமான்கள் தமிழின் பெருமையை அறிந்து இன்புறுமாறு செய்தலே முதன்மையான கடமை என்று ஆசிரியர் இங்குக் கூறுவது முற்றிலும் பொருத்தமேயாம். திருக்குறளைப் படித்து உளங் குளிர்ந்த டாக்டர் போப்பையரும், தமிழ் மொழியின் தனித்தன்மையை அறிந்து எழுதி வெளியிட்ட கால்டு

வெல் பாதிரியாரும், தேம்பாவணி இயற்றித்தந்த வீரமாமுனிவரும், பிறரும் தமிழ் மொழியை அதிகப் பிரயாசையுடன் கற்றுத் தெளிந்த பின்பே அதன் பெருமையை அறிந்தனர். அங்ஙனம் முயற்சியுடையார் சிறிய தொகையினராகவே இருத்தல் கூடுமாயின் பெரும் பகுதியினரான நல்லிசை மக்கள் நம் மொழியாகிய ஒண்டீந் தமிழை அவரவர்கள் மொழிவாயிலாகக் கற்றுத் தேரும் வண்ணம் பல அறிய நூல்களை மொழி பெயர்த்தல் வேண்டுமென்பதே கவிஞர் கருத்தாம். பிற நாட்டின் கண்ணே தோன்றிய பல பெரிய நூல்களை ஆங்கில மக்கள் மொழிபெயர்த்தெழுதிய காரணத்தால் அம்மொழி தற்காலம் அடைந்துள்ள உன்னத நிலையை உணராதார் இல்லையென்றே சொல்லலாம். எனவே, பாரதியாரின் அறிவுறை நம்மனோரால் போற்றப்படுவதன்றி, செயலாற்றும் செம்மையுடையதாகும்.

**"தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார்**
**இங்கமரர் சிறப்புக் கண்டார்."** (தமிழ்)

**"நல்லோ ரிணக்கமும் நின்பூசை நேசமும் நாளுமுமே**
**அல்லாமல் வேறு நிலையுளதோ ?"**

என்றார் பட்டினத்தடிகள்.

'தமிழ் விடுதூது' என்ற பிரபந்தத்தைப் பாடிய நூலாசிரியர் தமிழின் பெருமையை அழகு சொட்டப் பாடியுள்ளார். சோமசுந்தரக் கடவுள்மேல் காதல் கொண்ட தலைவி ஒருத்தி, தான் அவரைக் காண வேண்டுமென்று கருதிய காலத்துப் பல பொருள்களையும் தூது விடுத்தாள். பதில் ஒன்றும் கிடைத்திலது. கடைசியில் பாட்டுக்கு உருகும் சொக்கநாதரிடத்து, தமிழையே தூதாகவிடத் துணிந்தாள் என்பது இங்கு அறிய வேண்டிய பகுதியாகும். தமிழின் தொன்மையையும் மேன்மையையும் விளக்கிக்கொண்டே செல்லும் தலைவி தமிழைப் பார்த்து விளித்துக் கூறினாள். அது வருமாறு :

**"இருந்தமிழே யுன்னா லிருந்தே னிமையோர்**
**விருந்தமிழ்த மென்றாலும் வேண்டேன்."**

**(தமிழ் விடுதூது 101)**

நல்லோரிணக்கத்தினால் வரும் இன்பங்கள் எண்ணிறந்தன; அவையே மறுமைப் பயனையும் கொடுக்குமாதலின் அவ்விணக்கமே மேன்மையுடைத் தென்றார் பட்டினத்தடிகள். பாரதியார் தெளிந்த

தமிழமுதத்தைத் துய்த்தவர்கள் இம்மையிலேயே அமர வாழ்வின் இன்பங்களை அடைந்தவர்கள் ஆவார்கள் என்றார்.

தமிழ் விடுதூதில் தலைவி தனது காதலனைக் காணாது வருந்திய காலத்தும், தமிழ் மொழியின் இனிமையைக் கண்டதாலே உயிரானது பிரியாது நிற்கிறதென்றும், வானோர் விரும்பும் அமிழ்தம் தமிழமுதத்திற்குச் சமமானதன்று என்றும் கூறும் கருத்துக்கள் படிப்போர்க்கு மிக்கஇன்பம் விளைவிப்பனவாகும்.

சங்கச் சான்றோர்கள் கவிகளில் தமிழ் தழீஇய சாயலவர் என்றும், தண்டமிழ், வண்டமிழென்றும், சங்கத் தமிழென்றும் பயின்று வருதல் காண்க. நாயன்மார்களில் ஞானசம்பந்தர் முதலானவர்கள் தமிழ் மொழியைப் போற்றிப் பாடிய பாடல்கள் பலவாயின. மறை ஞான சம்பந்தன், தமிழ் ஞான சம்பந்தன் என்று காழிப் பெருமானார் தன் காப்புச் செய்யுளில் பாடிப் போதலும், திவ்யப் பிரபந்தங்கள் பாடிய ஆழ்வார்களும், தமிழின்பந்தெளிந்த வண்ணப் பாட்டுக்களைப் பாடியிருப்பதும் ஈண்டு நோக்கற்பாலதாம். உதாரணமாக, பட்டர்பிரான் கோதையான நாச்சியார் (ஸ்ரீ ஆண்டாள்),

> **" சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே**
> **இங்கு இப்பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள்**
> **செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்**
> **எங்குந் திருவருள் பெற்று இன்புறுவ ரெம்பாவாய்."**
>
> **(திருப்பாவை)**

> **" தூய தமிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்**
> **வாய நன்மக்களைப் பெற்று மகிழ்வரே "** **(வாரணமாயிரம்)**

என்று பாடுவதிலிருந்து தமிழ் மொழி தெய்வ மொழி என்ற உண்மை நன்கு வலியுறுத்தப்படுதல் காண்க.

தமிழன்னையையும் தமிழையும் பாடிக் களித்த பாரதியார் தமிழ் நாட்டைப் பற்றிப் பாடாது விடுவாரோ? தமிழின் பெருமையறிந்த தமிழ் மக்கள் செய்த சீரிய செயல்கள் அந்நாட்டிற்கு உரித்தானவை அன்றோ? அம்முறைமை பற்றியே தமிழ் நாட்டின் சிறப்பியல்புகளையும் பாடிப் போந்தார். அவை,

> **" செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்**
> **தேன் வந்து பாயுது காதினிலே** **(செந்தமிழ்)**

**வேதம் நிறைந்த தமிழ்நாடு—உயர்**
**வீரம் செறிந்த தமிழ்நாடு (செந்தமிழ்)**

**கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்**
**கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல**
**பல்வித மாயின சாத்திரத்தின் மணம்**
**பாரெங்கும் வீசும் தமிழ்நாடு." (செந்தமிழ்)**

திருமால், நின்ற கோலத்திற் றிகழும் திருவேங்கட மலையை வடக்கெல்லையாகவும், நீலத்திரைகள் கடலோரத்திலே நின்று நிகரற்ற அழகை வடித்துக் காட்டும் குமரி முனையைத் தெற்கெல்லை யாகவும் பெற்ற தமிழ் நாட்டின் முடியுடை மூவேந்தர்கள் தொன்று தொட்டு இந்நாட்டிடையே அரசியல் ஆண்மை பெற்று விளங்கியது சரித்திர உண்மையாகும். வீரமே தங்களது உயிர் வாழ்க்கை யாகக் கொண்ட தென்னாட்டுத் தமிழர்கள் செய்த அரிய பழைய செயல்கள் மறக்கற்பாலதன்றாம். இராமாயண காலத்திருந்த இடைச் சங்கத்தின் தலைநகரமாகிய கபாடபுரம் ஆதி காவிய மான வால்மீகி இராமாயணத்தில் புகழப்பட்டுள்ளது. கிஷ்கிந்தா காண்டத்தில் 47-ஆவது சருக்கம் 19-ஆவது சுலோகத்தில் இக் குறிப்பு காணப்படுகிறது. மேலும், சீதையைத் தேடுவதற்கெனச் செல்லும் வானர வீரர்களிடம் வழி கூறுவதற்கு வந்த சுக்கிரீவன் சொல்வதுபோல் கம்பன் பாடியிருப்பது இங்கு அறிதற்பாலது.

**" தென்றமிழ்நாட் டகன்பொதியில் திருமுனிவன்**
**[தமிழ்ச் சங்கம் சேர்கிற்பீரேல்**
**என்றுமவ னுறைவிடமாம்......" (நாடவிட்டபடலம்)**

இரண்டாவதாக, பாரத யுத்தத்தில் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்போன் சென்று இருபாற் சேனைகளுக்கும் வேண் டிய அளவு பெருஞ்சோற்றுத் திரளை அளித்து உதவினன் என்ற செய்தி புறநானூற்றில் காணப்படுகிறது.

**" அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ**
**நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை**
**ஈரைம்பதின்மரும் பொருதுகளத் தொழிய**
**பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்."**

**(புறநானூறு)**

முரஞ்சியூர் முடிநாகராயர் என்ற புலவர் திலகரால் இச்சேரலாதன் பெருமை பாடப் பெற்றது. இவ்வரிய செயலால் அச்சேரமானுக்குப் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்று பெயர் வந்தமை அறிக.

கண்ணகி தேவிக்குக் கற்றளி எடுக்கும் காரணமாகச் சேரன் செங்குட்டுவன் இமயம் சென்று தன் பகைவர்களான கனக விசயரென்ற ஆரிய நாட்டரசர்களை வென்று அவர்கள் தங்கள் தலைமீது அக்கல்லை ஏற்றி வரும்படி செய்தானென்ற வரலாறு சிலப்பதிகாரத்தினின்றும் அறியக் கிடக்கின்றது. சோழவரசனான கரிகாற் பெருவளத்தானின் பெருமையைக் கூற வந்த பட்டினப் பாலை ஆசிரியர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் தமிழ் நாட்டின் சிறப்பையும், சோழ நாட்டின் தலைநகரான காவிரிப்பூம்பட்டினத்தையும், கரிகாற் பெருவளவன் இமயம் சென்று தன் புலிக் கொடியைப் பொறித்து வந்ததுமாகிய பல அரிய செய்திகளையும் அழகாகக் கூறுகின்றார். தமிழர்கள் ஈழம், கடாரம், சாவகம், யவனம், புட்பகம் முதலான நாடுகளுக்குச் செலுத்திய வாணிபம் மிக்க வளமுடையதாக இருந்ததன்றோ? சோழர் பெருமையை இங்குக் குறித்திருக்கும் சிலப்பதிகார அடிகளும் இதனை நன்கு தெரிவிக்கின்றன.

> **“இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலைக்**
> **கொடிவரி ஒற்றிக் கொள்கையிற் பெயர் வோற்கு**
> **மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்**
> **கோன்இறை கொடுத்த கொற்றப்பந்தரும்**
> **மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன்**
> **பகைப் புறத்துக் கொடுத்த பட்டிமண்டபமும்**
> **அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்தோன்**
> **நிவந் தோங்கு மரபின் தோரணவாயிலும்...”**

இங்ஙனம் வரும் அடிகள் இளங்கோவடிகளால் எழுதப்பட்டமையான் உண்மையென்றே கொள்ளற்பாற்று. விசயதானென்ற கலிங்க தேசத்து அரசன் சோழ மன்னனால் ஆட்படுத்தப்பட்ட செய்திகள், செயங்கொண்டார் கலிங்கத்துப் பரணியில் செம்மையாக எழுதப்பட்டுள்ளன. எனவே, மேற் கூறிய சில காரணங்களால் செந்தமிழ் நாடு எத்துணைப் பெருமை வாய்ந்தது என்பது போதரும். கவிஞர் பெருமான் இச்சரித்திர உண்மைகளைக் கண்டு மகிழ்ந்தவ

ரானதால், "செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே" என்றார். "வேதம் நிறைந்த தமிழ் நாடு உயர் வீரம் செறிந்த தமிழ் நாடு" என்று கூறியதும், பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி ஆகிய தமிழ் வேந்தர்கள் வேத வழியிலேயே அரசு செலுத்தி வந்த வித்தகர் என்பதாலேயாம்.

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
யாரம் படைத்த தமிழ்நாடு." (செந்தமிழ்)

வீரம், வாணிபம், அரசியல் ஆகிய துறைகளில் தமிழர்கள் சிறப்படைந்து விளங்கியதுமன்றி, கல்வி மேம்பாட்டிலும், வாழ்க்கைத் திறமையிலும், ஓங்கி விளங்கினர் என்பது மறக்கற் பாலதன்றாம். "அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் நூற்பயனே" என்ற இலக்கணத்திற் கிணங்க நான்கு குறிக்கோள்களையும் குறித்துப் போகும் நூல்களே அழியாத் தன்மை எய்தப்பெறும் சில நூல்கள் இந்நான்கினுள் ஒன்றைப்பற்றியேனும் இரண்டைப் பற்றியேனும் கூறிச்செல்லும். தமிழ் மறையாகிய திருக்குறள் சுருங்கிய முறையில் 1330 அருங்குறளில் நான்கு புருஷார்த்தங்களையும் நாடு, சமூகம், காலம், நிறம் ஆகிய வேற்றுமையின்றி உலகியல் தன்மைகளை மக்களுக்குக் கூறிப்போகும் மாண்பு ஒப்பற்றதாகும். இச்சீரிய நூலின் பெருமையைப் பார்த்த பிற மொழியாளர்கள் இதைத் தங்கள் தங்கள் மொழிகளில் மொழிபெயர்த்துள்ளார்கள். சமீபகாலத்தில் இந்தி மொழியிலும், மராட்டிய மொழியிலும் இது மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இவ்வகையான காரணங்களால் தமிழ்நாடு வான்புகழ்கொண்டது.

சிலப்பதிகாரம் உள்ளோன் தலைவனாக உள்ளது கூறலால் உண்மைக் காவியமாயிற்று. வடமொழி வாணர்கள் கூறும் நான்கு வகையான காவியங்களில் சிலப்பதிகார காவியம் தலைசிறந்து விளங்குவது என்னலாம். அக்காவியத்தின் குறிக்கோள்களான மூன்றும் முக்காலத்திற்கும் முடிந்தவையாம். மூன்றுதிறத்ததாக விளங்கும் இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ் முறைக்கு ஏற்ற காவியம் சிலப்பதிகாரம் ஒன்றேயாம். இக்காவியத்தில் பெண் மக்களின் சீரிய கற்புடைமை உயர்ந்தோர் ஏத்திப் புகழுமாறு தவமுடையோ

ரால் விதந்தோதப் பட்டமையான், கற்பு தவமாயிற்று. எனவே, "நெஞ்சையள்ளும் சிலப்பதிகார மென்றோர் மணியாரத்தைத்" தமிழ்நாடு படைத்திருப்பது மேன்மையிலும் மேன்மையன்றோ !

தமிழ் வாழ்த்தில், "வானம் அறிந்ததனைத்தும் அறிந்து வளர்மொழி வாழியவே" என்றார் பாரதியார். தமிழ் வளர்ச்சியுற வேண்டுமாயின் புத்தம் புதிய கலைகள் தமிழில் தோன்றவேண்டு மென்பதுதான் அன்னார் கருத்து. கன்னித் தமிழின் சீரிளமைத் திறம் சிதையாது காப்பாற்றுதல் தமிழன்னையின் அரும்புதல்வர் களின் கடமையாம். "சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே" என்ற பாரதியார் உணர்ச்சி ததும்பும் சொற்களே அன்னார் தமிழ்மொழி யினிடம் கொண்ட மதிப்பிற்கும், பற்றிற்கும் தகுந்த சான்று களாம்.

## பாரதியார் உயிர்நேயம்

மக்கட் பிறப்பு விலங்குப் பிறவியினும் மேலானதாம். ஆறறிவு பெற்ற மக்கட் பகுதியினர் விதிவிலக்கு அறிந்து ஒழுகும் கடப்பாடுடையர். சங்ககாலச் சான்றோர் மக்கட் பண்பு கள் நிறையப் பெற்றவராக இருந்ததுமன்றி, பிறமக்களும் அங்ஙனம் ஒழுகவேண்டுமென முயற்சி உடையராகவும் விளங் கினரென்பது நூல்களினின்றும் அறியக்கிடக்கின்றது. அவர் கள் சிறந்த குறிக்கோள்களைக் கடைப்பிடித்ததுமன்றி வாழ்க்கை யிலேயும் அக் கோட்பாடுகளைக் கையாண்டு வருவாராயினர். மனித உணர்ச்சியுடன் வாழ்ந்து வரும் இயல்பினர்கள் தங்களை யொத்த மனிதப் பிறவியாளர்கள்பால் விழுமிய அன்பும் அருளும் கொண்ட வராகவே இருத்தல் கடனும். சிறப்பாகக் கூறுமிடத்து, இவ்வருள் நிலைக்கப் பெற்ற உள்ளத்தினராய் வாழ்ந்துவந்த கவிவாணர்களே நல்லிசைக் கவிகளாகக் கொள்ளப்பட்டுள்ளனர். சாதி மத தேச எண்ணங்கள் பாந்துபட்ட நிலையிற் செல்லாமல் குறுகிய மனப் பான்மையுடையதாக ஏற்பட்ட கவியுள்ளங்கள் நின்று நிலைக்காது அழிந்தொழிந்தன என்னலாம். இக்கட்டுப் பாடுகளைத் தகர்த் தெறிந்து மனித சமூகத்தையே சிறந்த பொருளாகக் கொண்டு பாடிய கவியுள்ளங்களே பன்னூறாண்டுகள் கழிந்தபின்னும் புது மையுடன் நின்று திகழ்கின்றன. புறநானூற்றில் பாடிய புலவர்

பெருமக்களில் பலர் ஆழ்ந்த உயிர் நேயம் உடையவர்களாகவே காணப்படுகின்றனர்.

> **"யாதும் ஊரே யாவரும் கேளிர் ;**
> **தீதும் நன்றும் பிறர்தர வாரா..."** (புறம் **192**)

கணியன் பூங்குன்றன் என்ற தமிழறிஞர் இங்குக் கூறும் உயரிய கருத்துக்கள் அன்னார் பெற்றிருந்த உயிர் நேயத்தையும், உலக மக்களெல்லாம் ஓர் குலத்தினராக வாழக்கூடிய ஓர் குடியினர் என்பதையும் தெள்ளிதிற் காட்டும். சுமார் 1800 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த தமிழ்மக்கள் மனித வாழ்வினராகிய பல் தேயத்து மக்களையும், அன்னோர் வாழ்ந்த நாடுகளையும் எத்துணை விசாலித்த மனங்கொண்டு போற்றிவந்தனர் என்பது வெளிப்படை. "செல்வத்துப் பயனே ஈதல்" என்ற கருத்தும், "துய்ப்பேமெனினே தப்புநபலவே" என்ற கருத்தும், இத்தமிழர்கள் கொண்டிருந்த உயிர் நேயத்தை நன்கு வலியுறுத்தும். செல்வம் பலதிறத்தது. கல்விச் செல்வம், புவிச்செல்வம், அறிவுச் செல்வம், ஆன்மச் செல்வம், பொருட் செல்வம், புகழ்ச் செல்வம் என்றவாறெல்லாம் ஆன்றோர் கூறும். தன்னுடைய செல்வத்தைப் பிறருக்கு வழங்கி வாழ்தலே வழக்காகக் கொண்டனர் பெரியோர். கவிதா மணியாகிய நம் பாரதியாரும் தன் அரிய கவிதா செல்வத்தை மக்கள் துய்க்கும் வண்ணம் பல பாடல்களாகப் பகிர்ந்து கொடுத்துள்ளார். அன்னாரின் பாடல்களில் இன்பம் பொங்கி வழிகின்றது. மன்னுயிரையும் தன்னுயிராகக் கருதி ஆன்ம நேய உணர்ச்சியோடு அவர் ஒழுகி வந்தமையான் அவர் பாடல்கள் உயிர் ஓவியங்களாக நின்று நடம்புரிகின்றன் என்பது மிகையாகாது. தன் சொந்தநாட்டுப் பணியில் ஈடுபட்டிருந்த அப்பெரியார் தன்னையொத்த மக்கள் விடுதலையின்றி அடிமையில் வாழ்ந்து வந்த நிலைமையைப் பார்க்குந்தோறும் மனம் உருக ஆரம்பித்தார். பீஜித்தீவிலே இந்துப் பெண்கள் தோட்டங்களில் வேலைசெய்து வயிறு வளர்க்கும் கொடுமை அன்னார்க்கு ஆற்றொணாக் கொடுமையாகக் காணப்பட்டது. அதன் திறத்தை விளக்குவதற்கே 'கரும்புத் தோட்டத்திலே' என்ற பாடலைப் பாடியுள்ளார். அது வருமாறு :—

> **"கரும்புத் தோட்டத்திலே—ஆ !**
> **கரும்புத் தோட்டத்திலே.**

**கரும்புத் தோட்டத்திலே—அவர்**
**கால்களும் கைகளும் சோர்ந்துவிழும்படி**
**வருந்துகின்றனரே......**
**துன்பத்தை நீக்க வழியில்லையோ ? வொரு**
**மருந்ததிற் கில்லையோ ?—செக்கு**
**மாடுகள் போலுழைத் தேங்குகின்றாரந்தக்—**
**(கரும்புத் தோட்டத்திலே)**

**பெண்ணென்று சொல்லிடிலோ—ஒரு**
**பேயுமிரங்கு மென்பார் ! தெய்வமே !—நின**
**தெண்ண மிரங்காதோ ?—அந்த**
**ஏழைக ளங்கு சொரியுங் கண்ணீர் வெறும்**
**மண்ணிற் கலந்திடுமோ ?—" (கரும்புத் தோட்டத்திலே)**

அருள் பழுத்த மனத்தினர் தன் தொடர்புடையாரிடத்தன்றி, தனக்குத் தொடர்பிலார் மாட்டும் அன்புகாட்டும் பண்பு பெற்றவர்களாவர். பீஜித் தீவில் இந்திய மக்களின் துன்பகரமான நிலையை நினைந்து மனமுருகிப் பாடும் பாரதியாரின் உள்ளத்தை எத்தன்மையாகப் புகழ்ந்தெழுதுவது ! தெய்வத்தை விளித்து அம்மக்களைக் காப்பாற்றும்படி வேண்டிக் கொள்வது, அவரது உயிர் நேயத்தை ஒளிக்காது காண்பிக்கின்றதன்றோ ? அல்லற்பட்டு ஆற்றாது ஏழைகள் விட்ட கண்ணீரானது செல்வத்தைத் தேய்க்கும் கூரிய படைக்கலமாகும். எனவே, அக்கதியற்ற மக்களைத் துன்புறுத்தி வாழும் பிற நாட்டார்களிடம் உயிர்ப்பண்பு இன்மையான் தெய்வ சாபத்திற் காளாகுவர் என்ற திண்ணமான கருத்தைப் பாரதியார் இப்பாடலில் நுட்பமாகக் கூறியுள்ளார். உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம் திடம்பட ஈசனைத் தேடுவதே என்ற ஆன்றோர் வாக்கிற் கிணங்க ஆன்மஜயம் பெற்ற மதிவாணர்கள் பிறவிக் கடலாகிய பெருங்கடலை நீந்தி வாழ்வதற்கே இச்சை கொள்வர். அவ்விச்சையே மனிதன் சுதந்திரத்தைப் பெற்றாலன்றி இகபர சாதனங்களை அடைய முடியாதவாறு நின்று திகைப்பான் என்றதை எடுத்துக்காட்டுவதோடு அவன் அச் சுதந்திரத்தைப் பெறுமாறும் தூண்டுகின்றது. நித்யானந்த வாழ்வை நாடிநிற்கும் ஆன்மா அடிமையை அறவே ஒழிப்பதற்கு முயல்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை ! ஆத்மஜயம் பெற்ற பாரதியார் தன் பாரதநாட்டின் வீழ்ச்சியை நினைந்து வருந்துங்கால், பெல்ஜிய நாட்

டின் வீழ்ச்சியை நினைந்தும் வாடுகின்றார். இதுவன்றோ உயிர் நேயம்! சில அடிகள் வருமாறு:—

**"அறத்தினால் வீழ்ந்து விட்டாய்; அன்னியன் வலியனாகி**
**மறத்தினால் வந்து செய்த வன்மையைப்**
**பொறுத்தல் செய்யாய்......"** **(பெல்ஜியம்)**

**"ஒண்மைசேர் புகழே மேலென் றுளத்திலே**
**உறுதி கொண்டாய்,**
**உண்மைதேர் கோல நாட்டார்**
**உரிமையைக் காத்து நின்றாய்......"** **(பெல்ஜியம்)**

**"வேள்வியில் வீழ்வதெல்லாம் வீரமும்**
**புகழு மிக்கு**
**மீள்வதுண் டுலகிற் கென்றே வேதங்கள்**
**விதிக்கு மென்பர்......"** **(பெல்ஜியம்)**

'பெல்ஜிய நாட்டிற்கு வாழ்த்து' என்ற பாடலில் அந்நாட்டு மக்கள் பகைப்புலத்தார்க்குச் சற்றுந் தாழாது மானமே அருங்கலமாகக் கொண்டு போராடி வீழ்ந்தனர். மானம், வீரம், புகழ் முதலான நற்பண்புகள் வாய்க்கப்பெற்ற அந்நாட்டு மக்களின் பெருமை நம் பாரதியார் தேசியத்திற்கும் உயிர் நேயத்திற்கும் ஊக்கமளித்தன போலும்! அறத்தைக் காப்பாற்றப் போர்புரியும் மக்கள் அழிந்த போதினும், தங்கள் தியாகத்தின் பயனால் புகழுடம்பு பெறுதலல்லாமல் மீண்டும் உலகத்தின்கண்ணே மேன்மையோடு பிறப்பர் என்று வேதங்கள் கூறுவதாகக் கூறும் இவரது உள்ளத் தெளிவும் ஊக்கமும் சிறப்புடைத்தாகும். நன்மைக்காகப் பாடுபடும் நாடுகளும் மக்களும் நம் பாரதியாரின் அருமைத் தோழர்கள். அவர்கள் செய்யும் வீரச் செயல்கள் நம் கவிஞர் உள்ளத்திற்குத் தேன் சொரிந்தாற் போல்வன. தான் இன்புறுவதை உலகத்தினரும் இன்புற வேண்டும் என்ற குறிக்கோள்களைக் கொண்டவர்கள்தான் பிறவுயிர்களின் வருத்தந் தணிக்க முயல்வர். தனக்கென வாழாப் பிறர்க்கென முயலும் சான்றோர்கள், இம் மண்ணிடையே பிறந்திருத்தலால்தான் இந்நிலவுலகம் உயிர்வாழ்கின்றது.

**"உண்டால் அம்ம இவ்வுலகம்; இந்திரர்**
**அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்**
**தமியர் உண்டலு மிலரே"** **(புறம் 182)**

என்று கூறப்படும் அடிகளுக்கு நம் பாரதியார் மிகவும் பொருத்த மானவரே. சிறிது காலத்திற்குமுன் ருஷியா தேசம் ஜார் என்ற மன்னனின் கொடுங்கோன்மையை அழித்துப் புதிய அரசியலை நிறு வியது. சுதந்திரப் பெருமை கொண்ட வீரர்கள் அந்நாட்டைப் பண்படுத்தி அமைத்தனர். பிறகு ஏற்பட்டது குடியாட்சி. அவ் வரிய நிகழ்ச்சி நம் பாரதியாருக்கு மலடி வயிற்று மகன் போலவும், ஒரு புதையலெடுத்த தனம் போலவும் இருந்தது. கண்ணொளி இழந்தானொருவன் தனது அழகிய முகத்தில் ஒளிபெற்ற நிலைமை யில் அடைந்த பேருவகை போலக் கவிதாமணியின் மனம் குடி யாட்சியைப் பார்த்து மட்டற்ற மகிழ்ச்சியடைந்தது. அதியமானி டம் கருநெல்லிக்கனி பெற்று உண்டு மகிழ்ந்த ஔவை மூதாட்டி யார் அவ்வதியமானின் தண்ணளியையும், உயிர்ப் பண்பையும் மெச்சி வாழ்த்தியதுபோல் புதிய ருஷியா என்ற அவரது பாடல் விளங்குகின்றதென்னலாம். அவை :—

“ **மாகாளி பராசக்தி உருசிய நாட்டினிற்**
**கடைக்கண் வைத்தா ளங்கே**
**ஆகாவென் றெழுந்தது பார் யுகப்புரட்சி**
**கொடுங்காலன் அலறி வீழ்ந்தான்.”** (புதிய ருஷ்யா)

“ **இரணியன்போ லரசாண்டான் கொடுங்கோலன்**
**ஜாரெனும்பே ரிசைந்த பாவி.”** (புதிய ருஷ்யா)

“ **அறங்கொன்று சதிகள் செய்த**
**சுமடர் சடசடவென்று சரிந்திட்டார்**
**புயற்காற்றுச் சூறை தன்னில்**
**திமுதிமென மரம் விழுந்து காடெல்லாம்**
**விறகான செய்தி போலே.”** (புதிய ருஷ்யா)

“ **அடிமைக்குத் தளையில்லை யாருமிப்போ**
**த்டிமையில்லை அறிக! என்றார்;**
**இடிபட்ட சுவர்போலே கலி விழுந்தான்**
**கிருத யுகம் எழுக மாதோ!”** (புதிய ருஷ்யா)

“நற்றாமரைக் கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல் கற்றா ரைக் கற்றாரே காமுறுவர்” என்ற போலவும், பாம்பறியும் பாம்பின் கால் என்ற போலவும், வீர சுதந்திரத்தின் அமிழ்தத்தைப் பருகு வதாலுண்டான மகிழ்ச்சி அதை நன்கு அறிந்தவர்களுக்கல்லவோ

விளங்குந் தரத்தது! பாரத நாட்டின் கலியை ஒழிக்கவே தனது வாழ்நாளைக் கழித்து வந்த ஞானச் செல்வனாகிய பாரதிக்கு ருஷியா தேசம் அடைந்த சுயராஜ்யவெற்றி தனது வெற்றியாகவே இருந்தது. அளவில் பெரிய நாடாகவிருந்தும் அநீதியான அரசாட்சியால் சீர்குலைந்த மக்கள் புரட்சி செய்து மன்னரை வீழ்த்தி, "குடியரசு" என்ற புதிய சகாப்தத்தை உண்டு பண்ணியது வியப்பினும் வியப்பன்றோ? இவ்வுணர்ச்சிச் செயலே பிறநாடுகளுக்கும் வருங்காலத்தில் வழிகாட்டியாக விளங்கப் போவதைக் கண்ட தீர்க்கதரிசியான பாரதியார் அந்நாட்டைப் புகழ்ந்து பாடினார் போலும்! இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும், இனிதெனத் தமிழர் உண்ணாது உயிர்நேயத்தின் பண்புடைமையால் தகுதிவாய்ந்த பிறருக்கு வழங்குவர் என்பதற்கிணங்க, அதியமான்நெடுமானஞ்சி தனக்கென்று அரிதிற்கிடைத்த கருநெல்லிக் கனியை உண்டுவிட்டால் நெடுங்காலம் தான் வாழ நேரிடுமாகையால் தன்னைக் காட்டிலும் மேம்பட்ட ஒளவையார் உண்டு நீண்ட காலம் வாழ்வது உலக மேன்மைக்குக் காரணமாகுமென்று கருதி அப்பழத்தை ஒளவையாரிடம் கொடுத்து உண்ணும்படிச் செய்த மாண்புறு செயல் ஒப்பற்ற உயிர்நேயமன்றோ? ஒளவையாரும் அவன் செயலை மறுத்து விலக்க முயன்றும் முடியாத நிலைமையில் அவன் வேண்டுகோளின் படி உண்டு விட்ட பின் பாடிய அடிகள் மிக்க இன்பமுடையன.

> "போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி
> பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
> நீலமணி மிடற் றொருவன் போல
> மன்னுக பெரும நீயே!" (புறம்—91)

நீலமணி மிடற்று ஒருவன் போல மன்னுக நீயே பெரும! என்ற ஒளவையார் வாழ்த்து மிக்க இன்பத்தை விளைப்பதாம். மரணத்திற்குக் காரணமான நஞ்சை சிவபிரான் உண்ட பின்னும் நிலைத்திருப்பதைப் போல் அதியமானாகிய நீயும் சாவாதிருத்தல் வேண்டுமென்பதே அவ்வடியின் பொருள். இந்நீலகண்டமே பதினெண் கணங்களாலும் ஏத்தி வழிபடுதல் காண்க. பிறர் வாழ்க்கையே தன் வாழ்க்கையெனக் கொண்ட தமிழ் மன்னன் அதியமானைப் போன்று கவிதாமணியான நம் பாரதியாரும் பிற நாடுகளாகிய ருஷியா, பெல்ஜியம், பீஜி, இத்தாலி முதலான நாட்டு மக்களின் வாழ்க்கை நலனைத் தன் வாழ்க்கை நலனாகவே கொண்டது ஒப்பற்ற உயிர்நேயமன்றோ!

## பாரதியார் பெரியார் வழிபாடு

" அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்." (குறள்)

கல்வி கேள்விகளில் மிக்கவரும் மேன்மையடைந்து விளங்கு வதற்கு உற்ற சாதனமானவருமான பெரியார் தொடர்பு மிக விழைந்து கொள்ளத் தக்கதன்றோ? மனநலம் நன்குடையராயினும், தன் இன நலத்தை ஓர்ந்து தெளிந்து இணங்குகின்றவர்களே ஏதமின்றி வாழக் கூடியவர்களாவார்கள். இங்கு, குறளாசிரியர் சான்றோர்களிடையே ஒருவன் ஒழுகி வரும் திறத்தினுல் அடையும் நன்மைகள் அளவற்றன என்று கூறுவதால், அரிய பெரிய பேறுகளுள்ளும், பெரியாரைப் பேணிக் கொள்ளும் குணமே சிறந்த குணமாம் என்பது. நம் பாரதியார் தனது இளம்பிராயம் முதற்கொண்டே தன்னிலும் கல்வி வலிமையும் அறிவு வலிமையும் பெற்ற பெரியோர்களிடமே அதிகமாகப் பழகி வந்தவர். தக்க பருவம் வந்த காலத்தில் தேசசேவையில் ஈடுபட்ட வண்ணம், பல அரிய சான்றோர்கள் குழுவிலே நன்கு கலக்க வாய்ப்பு ஏற்பட்டது. அரசியற்றுறையில் அக்காலத்து உழைத்து வந்த மக்களுள் சிறப்பு வாய்ந்தவர்கள் அநேகர் கல்வி அறிவு மிக்க பெருந்தகையாளர்களாக இருந்தனர். தென்னுட்டுத் திலகங்களாகிய சிதம்பரம் பிள்ளை, வ. வெ. சு. ஐயர், ஜி. சுப்பிரமணிய ஐயர் இவர்களின் கூட்டுறவே அன்றி, இந்திய நாட்டுத் திலகர்களாகிய லோகமான்ய கங்காதாரும், லாலா லஜபத் ராயும், அரவிந்தரும், காந்தியடிகளும் பாரதியாரின் நல்லொழுக்கை நன்முறையிலே செலுத்திப் பயன் கொள்ளுமாறு செய்த பெரியோராவர். இதுவுமன்னியில் குவளைக் கண்ணன் நட்பும், குள்ளச் சாமியார் ஞானேபதேசமும், சித்தாந்த சாமியார் சித்தாந்தமும், கோவிந்தசாமியின் அறவுரைகளும், பாரதியாரின் பண்புடைமையை நன்கு பரிமளிக்கச் செய்தன. லாலா லஜபத் ராய், தாதாபாய் நௌரோஜி, காந்தி அடிகள் உள்ளிட்ட பெரியோர்களைப் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ள பாரதியார் பாடல்கள் நம் கவிதா மணியின் பண்புடைமையையும், எளிமையையும் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. அரசியல் போராட்டத்தைத் தீவிரமாக நடத்திய லாலா லஜபத் ராயும் திலகர் பெருமானும் பாரதியாருக்கு உற்ற மாபெருந் தலைவர்கள். தனது அன்புடைத் தலைவர் லஜபத் ராய்

அன்னிய நாடு கடத்தப்பட்டதைப் பொறுக்க இயலாத நிலைமையில் பாரதியார் அவர்மீது பாடிய துதி இங்கு கவனிக்கத் தகுந்ததேயாம்.

“ஒரு மனிதன் றனைப்பற்றிப் பல நாடு
கடத்தியவற் கூறு செய்தல்
அருமையிலை ; எளிதினவர் புரிந்திட்டா
ரென்றிடினும் அந்த மேலோன்
பெருமையைநன் கறிந்தவனைத் தெய்வமென
நெஞ்சினுளே பெட்பிற் பேணி
வருமனித ரெண்ணற்றார் இவரையெலாம்
ஓட்டி யெவர் வாழ்வ திங்கே?” (லஜபத்ராய் துதி)

லஜபத்ராய் தன் பிரிவாற்றாமையை மனங்கொள்ள முடியாமல் பாடுவதுபோல் பாரதியார் பாடியுள்ள கண்ணிகள் அவரது பெரியார் வழிபாட்டு முறையைத் தெரிவிக்கின்றன. பாடியுள்ள அடிகளோ படிப்போர் உள்ளத்தை நெகிழச் செய்கின்றன. அவை சில வருமாறு :—

“ஆசைக் குமர னருச்சுனனைப் போல்வான்றன்
மாசற்ற சோதி வதனமினிக் காண்பேனோ?
வீடுமுறவும் வெறுத்தாலு மென்னருமை
நாடுபிரிந்த நலிவினுக்கென் செய்கேனே?
வீமன் வளர்ந்த விறனாடு வில்லசுவத்
தாம னிருந்து சமர்புரிந்த வீரநிலம்.
எத்தனை ஜன்மங்கள் இருட்சிறையி லிட்டாலும்
தத்து புனற் பாஞ்சாலந் தனில் வைத்தால் வாடுகிலேன்.”
(லஜபத்ராய் பிரலாபம்)

தேச உத்தாரணத்தை விதைத்த பெருமைபெற்ற தாதாபாய் நௌரோஜியைப் போற்றி வணங்கும் எளிமை இன்பம் கீழே வருஞ் சில வடிகளால் காட்டப்படுகின்றது.

“கல்வியைப் போலறிவு மறி வினைப்போலக்
கருணையு மக் கருணைபோலப்
பல்விதவூக் கங்கள் செயுந் திறனுமொரு
நிகரின்றிப் படைத்த வீரன்,
வில் விறலாற் போர் செய்தல் பயனிலதா
மெனவதனை வெறுத்தே யுண்மைச்

**சொல் விறலாற் போர் செய்வோன் பிறர்க்கன்றித்**
**தனக் குழையாத் துறவி யாவோன்."**

(தாதாபாய் நௌரோஜி)

திலகரையே தனது அரசியல்ஞானத் தலைவராகக் கொண்ட பாரதியார் அவரது குணஞ் செயல்களைப் போற்றுவது இயல்பே யன்றோ!

**"கல்வி யென்னும் வலிமை கொண்ட கோட்டை கட்டினன்**
**கருத்தினு லதனைச் சூழ்ந்தொ ரகழி வெட்டினன் - நல்ல**
**சொல் விளக்க மென்றதை னிடைக் கோயிலாக்கினன்**
**ஸ்வாதந் தர்யமென்றதன்மேற் கொடியைத் தூக்கினன்."**

(திலகன் நாமம்)

திலகர் பொருமானுக்கு வாழ்த்துக் கூறிய பாரதியார் அப்பெரியாரிடம் வைத்த பேரன்பினுல் அவரது கல்விச் சிறப்பை விதந்தோதுவாராயினர். அது வருமாறு:—

**"நாமகட்குப் பெருந்தொண் டியற்றிப்பன்**
**னுட்டி னேர்தங் கலையிலு மவ்வவர்**
**தாமகத்து வியப்பப் பயின்றொரு**
**சாத்திரக் கடலென்ன விளங்குவோன்;...**
**நெஞ்ச கத்தோர் கணத்திலும் நீங்கிலான்**
**நீத மேயோ ருருவெனத் தோன்றினேன்;**
**வஞ்சகத்தைப் பகையெனக் கொண்டதை**
**மாய்க்குமாறு மனதிற் கொதிக்கின்றேன்."** (திலகர்)

காந்தியடிகள் தென்னாப்ரிக்காவில் செய்த அரிய தொண்டுகள், இந்திய நாட்டினர் அறிந்த பின்னரே அவரது புகழ் ஓங்கலாயிற்று. அவர் புதிய திட்டமாகிய 'ஒத்துழையாமை' என்றதை அமுலுக்குக் கொண்டு வருங்காலம் பாரதியார் உள்ளம் உவகை பூத்தது. பஞ்சகம் பாடினர். சிலவடிகள் வருமாறு:—

**"வாழ்க நீ! எம்மான், இந்த**
**வையத்து நாட்டி லெல்லாம்**
**தாழ்வுற்று வறுமை மிஞ்சி**
**விடுதலை தவறிக் கெட்டுப்**
**பாழ்பட்டு நின்ற தாமோர்**
**பாரத தேசந் தன்னை**

**வாழ்விக்க வந்த காந்தி**
**மஹாத்மா! நீ வாழ்க! வாழ்க!...”** (காந்தி பஞ்சகம்)

**“கொடிய வெந் நாக பாசத்தை மாற்ற**
**மூலிகை கொணர்ந்தவ னென்கோ?**
**இடிமின்னல் தாங்கும் குடைசெய்தா னென்கோ?**
**என் சொலிப் புகழ்வதிங் குனையே?”** (காந்தி பஞ்சகம்)

அபேதாநந்த சுவாமிகளின் ஞான வீரத்தைப் புகழ்ந்து பாடிய பாடல் சுத்த ஞான தீரனாகிய நம் பாரதியாருக்கே தகும் என்க. அது வருமாறு :—

**“தூய அபே தாநந்த னெனும் பெயர் கொண்**
**டொளிர்தருமிச் சுத்த ஞானி,**
**நேயமுட னிந்நகரிற் றிருப்பாதஞ்**
**சாத்தியரு ணெஞ்சிற் கொண்டு,**
**மாயமெலா நீங்கியினி தெம்மவர் நன்**
**னெறிசாரும் வண்ணம் ஞானம்**
**தோயநனி பொழிந்திடுமோர் முகில் போன்றான்**
**இவன் பதங்கள் துதிக்கின்றோமே.”** (அபேதாநந்தா)

“குருவாய் வருவாய் அருள்வாய் குகனே” என்று பாடிய அருணகிரியாரும், குருந்த மரத்தடியில் தன்னை ஆட்கொள்ள வந்த இறைவனைக் குருவாகக் கொண்டு சிஷ்ய முறையில் வழிபட்டு முத்தி யடைந்த மணிமொழிப் பெருமானும், ஞான தேசிகனாக வந்தருளிய மூர்த்தியைத் தங்கள் தங்கள் பாடல்களில் மனங்கனிந்து உருகா நின்றனர். நம் கவிஞர் பெருமானும், பரஞான முத்தியை உப தேசித்த பெரியோர்களான குள்ளச்சாமியையும் கோவிந்தசாமியை யும் மனமுருகிப்பாடி வழிபாடியற்றுகின்றார்.

**“தேசத்தா ரிவன் பெயரைக் குள்ளச்சாமி**
**தேவர் பிரானென் றுரைப்பார்; தெளிந்த ஞானி**
**பாசத்தை யறுத்து விட்டான், பயத்தைச் சுட்டான்;**
**பாவனையாற் பரவெளிக்கு மேலே தொட்டான்.”**
(குருக்கள் ஸ்துதி)

**“அக்கணமே கிணற்றுளதன் விம்பங் காட்டி, [றேன்;**
**‘அறிதிகொலோ?’ எனக்கேட்டான் ‘அறிந்தேன்’ என்**
**மிக்க மகிழ் கொண்டவனுஞ் சென்றான்; யானும்**
**வேதாந்த மரத்திலொரு வேரைக் கண்டேன்.”**
(குருக்கள் ஸ்துதி)

"'பேசுவதிற் பயனில்லை, அனுபவத்தாற்
பேரின்ப மெய்துவதே ஞான' மென்றான்."

(குருக்கள் ஸ்துதி)

" மாங்கொட்டைச் சாமிபுகழ் சிறிது சொன்னோம் ;
வண்மை திகழ் கோவிந்தஞானி, பார்மேல்
யாங்கற்ற கல்வி யெலாம் பலிக்கச் செய்தான்..."

(கோவிந்தசாமி புகழ்)

"போந்தானிம் முனியொருநாள் ; இறந்தவெந்தை
தன்னுருவங் காட்டினான் ; பின்ன ரென்னைத்
தரணி மிசைப் பெற்றவளின் வடிவ முற்றான் ;
அன்னவன் மா யோகியென்றும் பரமஞானத்
தனுபூதி யுடையனென்று மறிந்து கொண்டேன்..."

(கோவிந்தசாமி புகழ்)

பாரதியார் தவச் செம்மல் என்று தயங்காமல் கூறுவதற்கு அன்னார் ஞானோபதேசத்தினாலும், பெரியோர்கள் வழிபாட்டு நன் மையாலும் அடைந்த அனுபவங்கள் சீவன் முக்த நிலையடைந்தார்க் கேயன்றி மற்றவர்க்கு எண்ணவும் கூடாததாயுள்ளன. ஞானச் செல்வத்தை அடைந்தபின் ஓர் ஆன்மா அடைய வேண்டிய பொரு ளும் உண்டோ? பொன்னம்பலக் கிருபை பெற்றவர்களே பெரி யோர்! அருள் பெற்றோரே அரியோர்! அங்ஙனம் அருட்சக்தி விளை யாடல்களைக் கண்டு மகிழும்படி செய்த பெற்றியோர்களை நமது அண் ணல் நாடியதால் பரமன் பல உருவத்தில் வந்து ஆட்கொள்வான் என்றதைத் தனது அருள் வாக்கால் தெரிவிக்கின்றார்.

யாழ்ப்பாணத்துச் சுவாமியும், குவளையூர்க் கண்ணனும் பாரதி யாரிடத்தில் அளவற்ற அன்பு கொண்டவர்கள். குவளைக் கண்ணர் பாரதியாரையே ஞானத் தோழனாகக் கொண்டு நட்பாற்றியவர். அவர்களையும் நமது கவிஞர் புகழாது வைத்துப் போகவில்லை. தோன்றிற் புகழொடு அன்றோ தோன்றல் வேண்டும்! பெரியோரைப் போற்றும் புகழ்மாலைகள் சில வருமாறு :—

"பாவியரைக் கரை யேற்று ஞானத்தோணி,
பரமபத வாயிலெனும் பார்வை யாளன் ;
காவிவளர் தடங்களிலே மீன்கள் பாயுங்
கழனிகள் சூழ் புதுவையிலே யவனைக் கண்டேன்."

(யாழ்ப்பாணத்துச் சுவாமிகள்)

**"கனத்த புகழ்க் குவளையூர்க் கண்ண னென்பான்;**
**பார்ப்பாரக் குலத்தினிலே பிறந்தான் கண்ணன்;**
**பறையரையும் மறவரையு நிகராக் கொண்டான்;**
**தீர்ப்பான சுருதிவழி தன்னிற் சேர்ந்தான்.**
**சிவனடியார் இவன்மீது கருணை கொண்டார்."**

(குவளைக் கண்ணன்)

**"ஜகத்தினி லோருவமை யிலா யாழ்ப்பாணத்து**
**ஸாமிதனை யிவனென்றன் மனைக் கொணர்ந்தான்.:**
**அகத்தினிலே யவன் பாத மலரைப் பூண்டேன்;**
**அன்றேயப் போதேவீ டதுவே வீடு."** (குவளைக் கண்ணன்)

பாரதியார் பெரியார் வழிபாடியற்றிப் பெற்ற பேறுகளை மற்றையோர்களும் பெற்று உய்யுமாறு எண்ணியே தம் பாடல்களில் அவற்றைக் குறித்திடுகின்றார். அவ்வனுபவ வுணர்ச்சிகள் "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்று கொண்ட சித்தாந்தப் பிரியர்களுக்கே ஏற்குமாதலின் அதனை விரித்துக் கூறுது தாயுமான அடிகள் கூறிச் சென்ற ஓர் சிறிய பாடலை இங்கு தருகின்றோம். அன்பர்கள் உணர்ந்து தெளிக:—

**"பெற்றவட்கே தெரியமந்த வருத்தம் பிள்ளை**
**பெருப் பேதை யறிவளோ பேரா னந்தம்**
**உற்றவர்க்கே கண்ணீர்கம் பலை யுண்டாகும்**
**உருதவரே கல்நெஞ்ச முடைய ராவர்."**

## பாரதியார் தத்துவநிலை

தத்துவமென்ற சொல் பல பொருளில் விளங்குகின்றது என்னலாம். வாழ்க்கைத் தத்துவம், மனோதத்துவம், சமய தத்துவம், கடவுள் தத்துவம், பொருளாதாரதத்துவம், விஞ்ஞான தத்துவம், அரசியற் தத்துவம் என்றெல்லாம் அறிஞர் கூறுப. சமய தத்துவங்களாகிய தொண்ணூற்றாறையும் பற்றிக் கூறுவதற்காக எடுத்துக் கொண்ட கட்டுரை இதுவன்று. கவிஞர் பெருமானாகிய பாரதியார் தம் வாழ்நாளில் இகபர இன்பங்களைப் பற்றிய கருத்துக்களைத் தன்னளவிலேயே எத்தன்மையான மனோபாவங்கொண்டு வாழ்ந்து வந்தாரென்பதே இங்கு அறியற்பாலதொன்றும். உயிர் தன்னியல்பில் உடலோடு கலந்து வாழ்க்கையை நடத்தவேண்டி யிருப்பதன்

காரணமாக, அவ்வுயிர் எங்ஙனம் ஒழுகுதல் வேண்டுமென்பதும், அங்ஙனம் ஏற்பட்ட ஒழுக்கத்தினுல் அடையும் நற்பயன்களும், பேறுகளும் எத்தன்மையனவென்பதும், பொதுவில் அறியக் கிடக்கின்றன. அவ்வாராய்ச்சியிலே பாரதியார் கொண்டிருந்த தத்துவங்கள் என்ன என்பதைச் சிறிது ஆராய்வதே இங்கு நோக்கமாகக் கொள்ளப்பட்டது.

வேதங்கள், இதிகாசங்கள், நீதிநூல்கள், சமயநூல்கள் முதலானவை மன்னுயிரானது வினையின் பாசங்களைக் கட்டறுத்துத் தள்ளி, சாந்த நிலையாகிய சச்சிதானந்தத்தை அடையவேண்டுமென்பதையே வற்புறுத்தி உபதேசிக்கின்றன. அதுவே உடம்பினைப் பெற்ற பயனுவது என்பதாம். மனக்கவலையை மாற்றிப் பிறவாழியைக் கடந்து இறைவன் பொற்ருளைக் கண்டு களித்து, அக்களிப்பிலேயே என்றும் இருத்தலாகிய பேரின்ப வாழ்க்கையையே ஆன்ஞேர் நாடி முயன்றனர். அங்ஙனம் முக்தியின்பத்தை அடைவதற்குப் போதித்துள்ள பெரிய நெறிகள் இரண்டு. அவையாவன : இல்லறமும் துறவறமும். துறவற ஒழுக்கம் வித்தகர்க்கேயன்றி மற்றவர்க்கு நிலைத்தவொழுக்கமாகக் கொள்ளப்படுதல் சாத்தியமின்மையான், அறிஞர்களாகிய வள்ளுவனுர், பட்டினத்தடிகள் போன்றவர்கள், மக்களுக்குப் போதித்துப் போன ஒழுக்கநெறி இல்லறமேயாகும். "அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை" என்றும், 'இல்லற மல்லது நல்லற மன்று" என்றும் கூறிய வாக்குக்களால் பண்டைத் தமிழர்கள் இல்வாழ்க்கையினையே சிறந்த நெறியாகக்கொண்டனர் என்பது போதரும்.

**"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்**
**தெய்வத்துள் வைக்கப் படும்." (குறள்)**

**"காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தை சுற்றி**
**ஓடே யெடுத்தென்ன வுள்ளன்பிலாத வரோங்கு விண்ணேர்**
**நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்**
**வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே."**
**(பட்டினத்தடிகள்)**

முற்றத் துறந்த முனிவராகிய பட்டினத்தடிகள் இல்லற வாழ்க்கையின் இன்பங்களைக் கண்ட பின்னரே துறக்க மெய்தினர் என்பது யாரும் அறிந்ததே. வாழ்க்கையில் எவ்வொழுக்கத்துநின்று செய

லாற்றினும், மேன்மை தாழ்மை என்பதில்லை என்றும், ஒழுக்க நெறி தவறாதிருத்தலே மேன்மையுடைத் தென்றும் தெரிவித்தல் கூர்ந்து நோக்கத்தக்கது. நம் பாரதியார், வள்ளுவரும் பட்டினத் தடிகளும் வகுத்த வாய்க்கால் வழியே செல்லும் மனோ நிலைமை யுடையார் என்பது நன்கு விளங்குகின்றது. பல பாடல்களில் அக் கவிஞர் பெருமானின் இல்லற நெறியின் இலட்சியமே வலியுறுத்தப் படுகின்றது. சில அடிகள் வருமாறு :—

**“ காவித் துணி வேண்டா,**
**கற்றைச் சடைவேண்டா,**
**பாவித்தல் போதும்**
**பரமநிலை யெய்துதற்கே.**
**சாத்திரங்கள் வேண்டா**
**சதுமறைக ளேதுமில்லை ;**
**தோத்திரங்களில்லையுளந்**
**தொட்டு நின்றாற் போதுமடா !”** ((பரசிவ வெள்ளம்)

**“ இன்று புதிதாய்ப் பிறந்தோம் என்று நீவிர்**
**எண்ண மதைத் திண்ணமுற இசைத்துக்கொண்டு**
**தின்று விளையாடி யின்புற் றிருந்து வாழ்வீர் ;**
**தீமையெலாம் அழிந்துபோம், திரும்பிவாரா.”**
(மனத்திற்கு)

அறத்தான் வருவதே இன்பம் என்பதற்கிணங்க நன்மார்க்கத் தில் தனது வாழ்க்கையை ஒருவன் செலுத்துவதே உயர்ந்த நிலை யாம். தங்கள் தங்கள் வாழ்க்கைநிலைக்கு ஏற்றவாறு அமைந்துள்ள தொழில்களையும் கடமைகளையும் நன்குணர்ந்து ஆற்றுவதே சால் புடைத்து என்பதும், அதுவே இன்பந் தரத்தக்கது என்பதும் பாரதியார் கொண்ட தத்துவ நிலையாகும்.

**“ தவம் செய்வார் தங்கருமம் செய்வார் மற்றல்லார்**
**அவம் செய்வார் ஆசையுட் பட்டு.”** (குறள்)

ஒருவன் தனது கருமங்களைச் செவ்வனே செய்து வருங்காலை அச்செயல்களால் ஏற்படத் தக்க நற்பயன் விளையாது, இன்னல்கள் வந்து அவனைத் துன்புறுத்துதலும் கூடும். அங்ஙனம் ஏற்படினும் தன் கடமையை ஆற்றுங் காலத்து அத்துன்பங்களைப் பொருட்படுத் தாது பிறர் நன்மை ஒன்றையே நாடித் தெரிந்து உரிய செயலை ஆற்ற வேண்டுமென்பதே நம் பாரதியார் விதிக்கும் விதியாகும்.

**"துன்பம் நெருங்கி வந்தபோதும்—நாம்**
**சோர்ந்து விடலாகாது பாப்பா !**
**அன்பு மிகுந்த தெய்வமுண்டு—துன்பம்**
**அத்தனையும் போக்கிவிடும் பாப்பா !"** (பாப்பாப் பாட்டு)

இங்குக் கூறிய கருத்துக்கள் உயர்ந்த கருத்துக்களானமையின் மேற்கோள் காட்டித் தெளிதல் ஏற்புடைத்தாம்.

**"இடுக்கண் வருங்கா னகுக வதனை**
**யடுத்தூர்வ தஃதொப்ப தில்."** (குறள்)

**"குடி செய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந் துறும்."** (குறள்)

இங்கு மானிடன் அடைவதற்கெனக் கொண்ட பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்காம். முதன் மூன்றாகிய பொருள்கள் அறநெறியின் வாயிலாகக் கொள்ளப்படுமாயின் வீடு பேற்றின்பம் தானே வந்தடையும் என்பதே நூன் முடிபு. கருமமே கண்ணயினர் தங்களது கருமத்தைச் செய்து முடிக்குங் காலை அதன் செயலாற்றலையே சிறந்த நோக்கமாகக்கொள்ள வேண்டுமேயன்றி நற்பலனை நோக்கிய வண்ணமே செய்தல் கூடாது என்பதாம். இக் கருத்தே கண்ணன் பார்த்திபனுக்குக் காட்டிய கீதையில் விதந்து ஓதப்பட்டுள்ளது. எனவே, கர்மயோகத்தின் சிறப்பையும் மேன்மையையும் கண்ணன் சொல்லிய ஞான்று கருமத்தின் நன்மைகளும் தீமைகளும் இறைவன் விதித்த பயனின் அளவிலே நிற்குந் தரத்ததன்றி அக்கருமத்தினை இயற்றும் கருத்தா எண்ணத்தின் அளவாகவிரா என்று தெளிவிக்கப்பட்டது. இத்துணை நுட்பமான உண்மையைக் கண்ணபிரான் காட்டிப் போந்தது மறக்கற்பாலதன்றாம். நம் பாரதியார் கர்மயோகியர் கூட்டத்தைச் சேர்ந்தவர். ஞானயோகம், ராஜயோகம், பக்தியோகம், கர்மயோகம் முதலான யோகங்களின் மேம்பாடுகள் கீதையில் நன்கு கூறப்படுகின்றன. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு திறத்தனவாகிய படிகளும் ஒன்றற்கொன்று தொடர்புடையனவாகவே அமைந்துள்ளன. ஞானயோகம் முதலான பலவகை யோகங்கள் தங்களுக்குள் தோற்றப் பொலிவில் வேறு வேறாகத் தோன்றினும், உண்மைத் தத்துவ நிலையில் ஒன்றற்கொன்று தொடர்புடையனவாகவே காணப்படுகின்றன. ஞானயோகி கர்மயோகியாக இல்லா

மாறு இல்லை. அத்தன்மையேபோல் கர்மயோகி ஞானயோகியல்லாதவனாக இருத்தலும் இல்லை. இம்முறையிலேயே மற்ற யோகங்களையும் அமைத்துக் கொள்க.

பாரதியார் கர்மயோகியாராகவே இருந்து வந்ததோடு அத்வைதம், துவைதம், விசிட்டாத்வைதம் என்ற மூன்று கூறுபாடுகளுடைய தத்துவங்களில் முதன்மையாகக் கூறப்பட்ட அத்வைத நிலையைச் சேர்ந்தவராகவே தெரிய வருகின்றது. இதற்கு ஆதாரம் அவரது பாடல்களே. சில அடிகள் வருமாறு:—

**" அறிவிலே தெளிவு, நெஞ்சிலே யுறுதி,**
**அகத்திலே யன்பினோர் வெள்ளம்,**
**பொறிகளின்மீது தனியர சாணை,**
**பொழுதெலா நினது பேரருளின்**
**நெறியிலே நாட்டம், கரும யோகத்தி**
**னிலைத்திட வென்றிவை யருளாய்,**
**குறிகுண மேதுமில்லதா யனைத்தாய்க்**
**குலவிடு தனிப்பரம் பொருளே !"** **(சுய சரிதை)**

**" முன்னோர்க ளெவ்வுயிருங் கடவுளென்றார்,**
**முடிவாக அவ்வுரையே நான்மேற் கொண்டேன் ;**
**அன்னோர்க ளுரைத்த தன்றிச் செய்கையில்லை**
**அத்வைத நிலைகண்டால் மரணமுண்டோ ?"**
**(பாரதி—அறுபத்தாறு)**

இக்கருத்து பற்றியே பாரதியார் 'நான்' என்ற தலைப்பின்கீழ் ஓர் பாடல் எழுதியுள்ளார் போலும். சில அடிகள் :—

**" வானிற் பறக்கின்ற புள்ளெலா நான்**
**மண்ணிற் றிரியும் விலங்கெலா நான்."** **(நான்)**

அத்வைத நிலை கண்டு தெளிந்தபின் மரணமென்னும் கடலைக் கடக்கத்தக்க வழி இன்னதென்றும் ஆராய்ந்து கூறியுள்ளார். ஜீவன் முக்தர்கள் ஜனகனைப் போன்று வாழும் இயல்பினர். பாரதியார் இறைவன் பொன்னடிகளைச் சேர்ந்து வாழ்வதற்கு வேண்டிய நல்லுபதேசத்தைக் கீழ் வருமாறு கூறுகின்றார்.

**" சக்தி பதமே சரணென்று நாம் புகுந்து**
**பக்தியினாற் பாடிப் பலகாலும்—முக்திநிலை**

**காண்போ மதனுற் கவலைப்பிணி தீர்ந்து**
**பூண்போம் அமரப் பொறி.''** (விடுதலை வெண்பா)

**" சக்தி யென்று நேரமெல்லாந்**
**தமிழ்க் கவிதை பாடி,**
**பக்தியுடன் போற்றி நின்ருல்**
**பய மனைத்துந் தீரும்.''** (தேச முத்து மாரி)

"பக்தி பண்ணிக் கொண்டிருந்தால் முக்தி பெறலாமே" என்ற ஆன்றோர் வாக்கியம் இங்கு ஒருங்கு வைத்துப் போற்றற் குரியது. வேதம் பாடிய கர்மயோகத்தின் நெறியிலே ஈடுபட்டு வந்த பாரதியார் தம் இம்மை வாழ்க்கையின்பத்தை அடைந்து வாழ்தலே மெய்யெனக் கொண்டார் என்பது முன்னரே சுட்டப் பட்டது. பொருளால் அடையப்படுவது அறனும் இன்பமும் என்றதனல் பொருட் செல்வத்தைத் தருமாறு இலக்குமி தேவியின் மீது புகழ்ப் பாக்கள் பாடியுள்ளார். வேண்டிய வேண்டியாங்கு அளிக்கும் இறைவனிடத்து அன்பு கொண்ட ஜீவன் முக்தராகிய நம் கவிஞர் கேட்கும் வரங்கள் ஒன்றல்ல. 'காணி நிலம் வேண்டு' மென்ற பாடலில், அவர் விரும்பி நிற்கும் இன்ப வாழ்வு தெளி வாகக் கூறப்படுகின்றது. அன்ஞர் இம்மை இன்பத்திற்கு வேண்டும் பொருள்களைக் காளிகாதேவியிடம் பணிவுடன் கேட்டுத் துதிக் கின்றனர். அது வருமாறு :—

**" வேளை யொத்த விறலும்—பாரில்**
**வேந்த ரேத்து புகழும்**
**யாளி யொத்த வலியும்—என்றும்**
**இன்ப திற்கு மனமும்**
**வாழி யீதல் வேண்டும்—அன்னய் !**
**வாழ்க நின்றன் அருளே.''** (காளி தோத்திரம்)

இங்ஙனம் கிடைக்கும் வரங்களால் ஏற்படும் நற்பயன்கள் நம் பாரதியாரின் சொந்த நன்மைக்கல்ல. மன்னுயிர் வாழ்வின் மகிழ்ச் சியைப் பெருக்குவதற்கேயாம். இவ்வுண்மையை அடுத்த பாடலில் அன்ஞர் விளக்கிப் போதல் காண்க. அது :—

**" மண்ணிலார்க்குந் துயரின்றிச் செய்வேன்,**
**வறுமை யென்பதை மண்மிசை மாய்ப்பேன்.**
**தானம் வேள்வி தவங் கல்வி யாவும்**

***தரணி மீதி னிலைபெறச் செய்வேன்,***
***வான மூன்று மழைதரச் செய்வேன்,***
***மாறிலாத வளங்கள் கொடுப்பேன்.”*** **(ஹே காளி)**

இதுவன்றோ கர்மயோகத்தின் சிறப்பு ! அன்பும் அறனும் இல் வாழ்க்கையின் பண்பும் பயனுமன்றோ ? மன்னுயிர்கள் வாழ்வதற்கே இறைவனிடமிருந்து அருட்சக்தியை விரும்பும் பெற்றியோர் தத்துவ நிலை பெரிதும் மாண்புடைத்தன்றோ ? மேலும், வேண்டிய முறையில் பலன் பெறுது விடினும் ஞான நிலையடைந்த ஜீவன்முக்தர்கள் இறைவன் திருவருளை வியந்து போற்றுவரேயன்றி மனவாட்டமுறுர். அவர்கள் தங்கள் வாழ்க்கையில் பறந்து செல்லும் சிட்டுக்குருவி யைப் போன்றும், மதுவை உண்டு களித்து விளையாடும் வண்டினங் களைப் போன்றும் தன்னளவில் வருந்தாது பிறர் அளவிலேயே வருந் துவர். நம் பாரதியார், உயர்ந்த கர்மயோகியானதின் காரணத்தாலும், தெளிந்த மெய்யுணர்வின் பயனுலும் வாழ்க்கைப் போராட்டத் தில் சிறிதும் கவலை கொண்டாரில்லை. கற்ற வளவிலே நின்ருர். மிடியால் மிக்க துன்பமுற்றும், அரசியல் கொடுமையால் நலமிழந்து வாடினும் அசைவற்ற மனம் பற்றற்ற நிலையில் இருந்து பணியாற்றிய தத்துவநிலை நம்மனோரால் பின்பற்றற்குரியது.

***“ திருவைப் பணிந்து நித்தம்***
***செம்மைத் தொழில் புரிந்து,***
***வருக வருவ தென்றே—கிளியே !***
***மகிழ் வுற் றிருப்போ மடி !”***

***“ வெற்றி செயலுக் குண்டு***
***விதியின் நியம மென்று,***
***கற்றுத் தெளிந்த பின்னும்—கிளியே !***
***கவலைப் படலாகு மோ ?”*** **(கிளிப் பாட்டு)**

இவ்வடிகளே வேதாந்த வாழ்க்கையின் நிலையைக் காட்டுகின்றன. இதுவே கர்மயோகத்தின் தத்துவநிலை என்று உணர்க.

## பாரதியார் நூன்மரபு

நல்லிசைப் புலமைத் தொல்லாசிரியர்களின் நூல்கள் எழுதப் பட்டு வந்தமுறையில் புலனெறி வழக்கமாகக் கையாளப்படும் சில நூன் மரபுகள் உண்டென்பது தெரிந்ததொரு பொருளாம். மரபுகள் காலத்திற்கும், தேசத்திற்கும், மொழிகளுக்கும் சிற்சில சமயங்களில் வேறுபட்டு நிற்றலுமுண்டு. வினையினீங்கி விளங்கிய அறிவன் கண்ட நூலே முதலாகக்கொண்டு எழுதப்படும் வழிநூல்களும், சார்புநூல்களும், தங்களுக்கு உரித்தான விகற்பங்களைக் கூறிச் செல் லுங்காலே, முன்னோர்களின் நூன்மரபுகளை அடியோடு புறக்கணிக் காது, அதன் திறங்களைக் கையாளுவது பழக்கமாக ஏற்பட்டுள்ளது. இதைக் குறித்தே தொல்காப்பியனாரும் தனது மரபியல் அதிகாரத் தில் இக்குறிப்பைத் தெரிவித்துப் போந்தார். சில சூத்திரங்கள் வருமாறு :—

"**மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை**
**மரபுவழிப் பட்ட சொல்லினான...**" (தொல்.-மரபியல்)

"**மரபுநிலை திரிவிற் பிறிதுபிறி தாகும்...**" (தொல்.-மரபியல்)

பாரதியார் தன்னியல்புக் கேற்றவாறு பாடல்களை அமைத்துப் பாடிய போதினும், சில நூன் மரபுகளை மறந்தாரில்லை. யாப்பிலக் கண முறைப்படிப் பாடல்கள் எழுதப்பட வேண்டுமாயினும் இலக்கிய மரபிற்கேற்ற இலக்கண முறைகளைச் சிறிது மாற்றி அமைத்துக் கொள்ளுதலே இலக்கிய வளர்ச்சிக்குத் தகுந்தது என்ற கருத்து பற்றி, பாரதியாரின் பாடல்களின் யாப்புத் திறத்தைப் புறனடையாகக் கொண்டு பொருத்தமுடைத்தெனக் கொள்ளுதலே சால்புடைத் தாம். சங்கத் தமிழ்ச்சான்றோர் கூறிப்போந்த யாப்பியல்புகளுக்குத் தக, பாடல்கள் ஒருபுடை ஒவ்வாது நிற்பினும், புறனடைச் சூத்திரத் தினால் கொள்ளுங்காலை அப்பெரியார்கள் இயற்றிய பாடற் பகுதி களில் எத்துணை ஒப்புமை உள்ளது என்பதைக் காண்டலும் பொருத்தமேயாம். கவிஞர் பாரதியார் தனது நூற்பாக்களில் எடுத் தாண்டுள்ள சில நூன்மரபுகளைப் பற்றி இங்குக் கூறிப் போதலே நோக்கமாயுள்ளது. நூலைத் தொடங்குமுன் தாங்கள் எடுத்த நூல் இனிது முடியுமாறு மங்கல வாழ்த்துக் கூறியோ, அல்லது தமது வழிபடு கடவுள் திருவருளைப் போற்றியோ, நல்லாசிரியர்கள் துவங்

குவது மரபாக உள்ளது. உதாரணமாகச் சிலப்பதிகார ஆசிரியரான இளங்கோவடிகள் :

> **"திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங்**
> **கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்**
> **வங்க ணுலகளித்த லான்."**

> **"ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதுங்**
> **காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு**
> **மேரு வலந்திரித லான்..."** (மங்கள வாழ்த்துப் பாடல்)

எனக்கூறிப் போந்தார். பாரதியாரும் தனது நூன்முகத்தில் கூறிய பாடலில் "வந்தே மாதர மென்போம்" என்றார். இம்முறையிலே பல நூலாசிரியர்கள் தங்கள் நூல்களில் கணபதியையும், முருகனையும், திருமாலையும், சக்தியையும் வணங்கிக் கூறிச் செல்லுதல் காண்க. வெண்ணிலாவின் தண்ணளியும், ஞாயிற்றின் வெப்பமும் உலகப் பொருள்களுக்கு இன்றியமையாதனவாகலின், இவ்விரு சுடர்களையும் இளங்கோவடிகள் போற்றிக் கூறினர். மங்கலத்தின் அறிகுறியாகத் தண்சுடர் மதியம் கூறப்பட்டது ஏற்புடைத்தே! வெண்ணிலாவை முன்னிலைப் படுத்திக் கூறக்கூடிய மரபுகள் தமிழ் இலக்கியங்களில் நன்கு காணப்படுகின்றன. வெண்ணிலாக் கண்ணிகள் வடலூர் அருட்பிரகாச வள்ளலாராகிய இராமலிங்க சுவாமிகள் திருமுறைகளிலும் காணப்படுகின்றன. அது வருமாறு :—

> **"தன்னை யறிந் தின்பமுற வெண்ணிலாவே—ஒரு**
> **தந்திர நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே."**
> (திருவருட்பா)

பாரதியாரும் இம்மரபு பற்றித் தம் நூலிலும் வெண்ணிலாவை முன்னிலைப்படுத்திப் பாடிய அடிகள் சில வருமாறு :—

> **"எல்லை யில்லாததோர் வானக் கடலிடை**
> **வெண்ணிலாவே!—விழிக்**
> **கின்ப மளிப்பதோர் தீவென்றி லகுவை**
> **வெண்ணிலாவே!**
> **நின்னொளி யாகிய பாற்கடல் மீதிங்கு**
> **வெண்ணிலாவே!—நன்கு**
> **நீயு மமுது மெழுந்திடல் கண்டனன்**
> **வெண்ணிலாவே!"** (வெண்ணிலாவே)

ஞாயிறு புகழப்படுதல் தமிழ் இலக்கியங்களிலும், வடமொழி இலக்கியங்களிலும், வேத நூல்களிலும் நன்கு அறியப்படும். அம் மரபு பற்றியே பாரதியாரும் 'சூரிய தரிசனம்' என்ற பாடலைப் பாடியுள்ளார். சில அடிகள் வருமாறு :—

**"வேதம் பாடிய சோதியைக் கண்டு**
**வேள்விப் பாடல்கள் பாடுதற்குற்றேன் ;**
**நாத வார்கட லின்னொலி யோடு**
**நற்றமிழ்ச்சொல் விசையையுஞ் சேர்ப்பேன்..."**

**(சூரிய தரிசனம்)**

சோமதேவன் புகழைப் பாடிய வேதங்களின் முறைமையைப் பின்பற்றி நம் தமிழ்ப் புலவராகிய பாரதியாரும் 'சோமதேவன் புகழ்' என்றும் 'வேள்விப் பாட்டு' என்றும் பாடிப் போந்தார். வேள்வியின் பயன் தனக்கென்ற சத்துருக்களை அழித்து வெற்றி கொள்வதற்கேயாம். அச்சம், துயர் முதலான அசுரர்களை அழித்து இன்பந் தாவேண்டுவதே வேள்வியின் நோக்கமாகும். அத்தன்மையான வேள்விகளே மறைகளில் புகழப்படுகின்றன என்பது இங்கு அறியற்பாலதொன்றும்.

'பள்ளு' என்ற பிரபந்தம் தமிழ் மொழியில் பாடப் பெற்றுள்ளது. மிக்க மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்ளும் முகத்தானே ஆன்றோர் அமைந்த தன்மையராய் அனுபவிக்க, பள்ளியர் என்ற குலத்தினர் தங்கள் ஆனந்தத்தை ஆடிக் களித்துத் தெரிவிப்பர். இக்கருத்தைப் பின்பற்றியே 'பள்ளு' என்ற பிரபந்தம் பாடப் பெறுகின்றது. தமிழில் சிறப்புாக விளங்கக் கூடிய பள்ளு என்ற நூல் வகையில் 'முக்கூடற் பள்ளு' என்பதே சிறப்புடைத்தாம். இம்மரபினை உணர்ந்த நம் பாரதியாரும் தனது நூலில் 'சுதந்திரப் பள்ளு' என்ற பாடலைப் பாடி, படிக்கின்றோர் மனதை ஆனந்திக்குமாறு செய்துள்ளார். வருங்கால சுதந்திரத்தை நச்சிப் பாடிய பாடல் சுதந்திரம் கிடைத்த பின் பாடுவதற்கும் பொருந்திபதாக அமைந்தது எத்துணைச் சிறந்ததாகும்! இப்பாடலைப் பாடிக் களிக்காத தமிழ் மக்கள் இக்காலத்தில் இல்லையென்றே சொல்லலாம்.

'போற்றித் திரு அகவல்' என்ற பாடல் வகையை ஔவையாரும், திருவாதவூரடிகளும், பட்டினத்தடிகளும் இன்னும் பல

அறிஞர்களும் ஆண்டுள்ளார்கள். நம் கவிஞர் பெருமானும் 'போற்றி அகவல்' என்ற பாடலைப் பாடிப் போந்தார்.

**"போற்றி உலகொரு மூன்றையும் புணர்ப்பாய்!**
**மாற்றுவாய், துடைப்பாய், வளர்ப்பாய், காப்பாய்!**
**கனியிலே சுவையும், காற்றிலே யியக்கமும்**
**கலந்தாற் போலநீ அனைத்திலும் கலந்தாய்."**

**(போற்றியகவல்)**

**"தில்லை மூதூ ராடிய திருவடி**
**பல்லுயி ரெல்லாம் பயின்றன ளாகி**
**எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி."**

**(திருவாசகம் கீர்த்தித் திருவகவல்)**

ஐம்புலக் கட்டைச் சுட்டறுத்துத் தள்ளி ஆன்ம நேயத்தின் உணர்வால் ஞானனுபவத்தைத் துய்க்கும் பெரியோர்கள் தங்களது பாடல்களில் மனதைப் பார்த்துக் கூறுவது போன்று கூறிப் போந்துள்ளனர். இதை 'நெஞ்சொடு கிளத்தல்' என்று கூறுப. திருமூல நாயனர், பட்டினத்தடிகள், இராமலிங்கர் உள்ளிட்ட சைவ சமயப் பெரியார்களும், திருமங்கையாழ்வார், திருமழிசை ஆழ்வார், நம்மாழ்வார் முதலான வைணவ பக்தர்களும், மனதை முன்னிலைப்படுத்தி அறிவுரை கூறிப் போந்துள்ளார்கள். அன்னோர் மனதிற்கு உரைப்பதே மக்களுக்கு உரைத்தல் போன்றது என்று கொள்ளுதலே ஏற்புடைத்து. நம் பாரதியாரும் இம்மாபை விடுத்தாரில்லை. சில அடிகள் வருமாறு :—

**"கண்ணன் திருவடி**
**எண்ணுக மனமே**
**திண்ணம் அழியா**
**வண்ணந் தருமே."** **(மனமே)**

**"தருமே நிதியும்**
**பெருமை புகழும்**
**கருமா மேனிப்**
**பெருமா னிங்கே."** **(மனமே)**

'மனத்திற்கு' என்ற பாடலும், 'நெஞ்சிற்குச் சொல்லியது' என்ற பாடலும் கூறப்படுகின்றன. 'மனத்திற்குக் கட்டளை' யென்ற பாடலில் சில அடிகள் வருமாறு :—

**" பேயா யுழலுஞ் சிறுமனமே !**
**பேணு யென்சொல் இன்றுமுதல்**
**நீயா யொன்றும் நாடாதே**
**நினது தலைவன் யானே காண்."**

**(மனத்திற்குக் கட்டளை)**

இங்கு மனதிற்கு உபதேசித்த முழுத்துறவியான பட்டினத்தடிகள் பாடல் தெளிந்து போற்றற்குரியது.

**" ஆயாய் பல்கலை யாய்ந்திருந்தூய வருந்தவர்பால்**
**போயாகிலு முண்மையைத் தெரிந்தாயில்லை :**
**வேயாய்ந்த தோளியர் காமவிகாரத்தில் வீழ்ந்தழுந்திப்**
**பூதலத்திலே**
**பேயாய் விழிக்கின்றனை மனமே யென்ன பித்துனக்கே."**

**(பட்டினத்தடிகள்)**

மற்றொரு வகையான நூன்மரபு அந்திவானத்தைப் புகழ்தல். சிலப்பதிகாரத்தில் இயற்கையன்னையின் எழிலுருவத்தைக்கண்ட காட்சியின் பயனாக, 'அந்திமாலைச் சிறப்பு செய்காதை' பாடப் பெற்றது. அஃதேபோல் பாரதிக் கவிஞனும், தன் செய்யுள்களி னிடையில் 'அந்திப் பொழுது' என்ற பாடல் பாடியுள்ளார். இதுவுமன்னியில், 'நவராத்திரிப் பாட்டு' என்றதும் பழைய நூன் மரபேயாகும். மேகத்தையும், பறவைகளையும், கடலையும் விளித்துப் பாடற்கேற்ற இலக்கணம் தலைவிக்கே "கழிபடர் கிளவி" யின் பால் ஏற்பட்டிருப்பினும், ஒருவாறு தலைவனும் தனது காதல் தணியாத நிலைமையில் மலையையும், மண்ணையும், விண்ணையும் கண்ணுற்றுச் சொல்லும் மரபு உண்டென்பதும் தெரிகின்றது. கந்த புராணத்துள் ஆறுமுக வேலன் வள்ளியின்பால் வைத்த காதலால் பல பொருள்களையும் விளித்துக் கூறுதல்போல் ஆசிரியர் பாடிச் செல்வது புலனெறி வழக்கமாகும். அம்முறையே பாரதி யார் கிளியை முன்னிலைப்படுத்திப் பாடுதலினும், கண்ணம்மாளை முன்னிலைப்படுத்திப் பாடுதலினும் அறியக் கிடக்கின்றது. இத்துடன் பெரியோர்களால் கையாளப்பட்ட ஆத்திசூடி, நான்மணிமாலை, குயில், திருத்தசாங்கம், திருப்பள்ளியெழுச்சி முதலிய நூன் மரபு கள் நம் கவிஞர் பெருமானால் எடுத்தாளப்பட்டிருப்பது உணர்தற் குரியது. நாயகி நாயக மரபும், குரு சிஷ்ய மரபும், தோழன் மரபும்,

ஆண்டான் அடிமை மரபுமாகிய பாவங்கள் பண்டைச் சமயாச்சாரியர் களால் எடுத்தாளப்பட்டு வந்த முறையில் நமது பாரதியாரும் தனது நூல்களில் "கண்ணன் என் எஜமான்", "கண்ணன் என் காதலன்", "கண்ணன் என் தோழன்", "கண்ணன் என் அடிமை", "கண்ணன் என் காதலி", "கண்ணம்மா என் காதலி" என்றெல்லாம் வைத்துப் பாடிப் போதல் முன்னோர் கொண்ட நூன்மரபுகளே அன்றி வேறல்ல.

## பாரதியார் பிரபந்தங்கள்

தமிழ் மொழியில் 96 வகைப் பிரபந்தங்கள் உண்டு என்ப. வெண்பா, கலிப்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா என்ற நால்வகைப் பாக்களோடு துறை, தாழிசை, விருத்தம் என்ற மூவகைப் பாவினங் களையும் கொண்டு தமிழ்ப் புலவோர் பிரபந்தங்கள் செய்தல் மர பாகும். ஆசுகவி, விஸ்தாரகவி, சித்திரகவி, மதுரகவி என்ற வகை களில் மேம்பட்ட புலவோர்கள் நாற்கவியும் பொழிந்து போயுள் ளார்கள் என்பது யாரும் அறிந்ததே. திருமங்கை மன்னன் என்ற திருமங்கை ஆழ்வாருக்கு நாற்கவிப் பெருமாள் என்ற ஓர் பெயரும் உண்டு. 'நம்பி அகப்பொருள்' என்ற நூலைப்பாடிய நாற்கவிராய நம்பி என்பார் இருந்திருப்பதும் அக்காலத்துப் புலவர் மேம்பாட்டை நன்கு தெளிவுறுத்தும். எனவே, பாக்களையும் பாவினங்களையும் வைத்துப் பாடுவது பிரபந்த கர்த்தாக்கள் செயலாகும் என்பது அறியக்கிடக்கின்றது. நம் பாரதியார் தேனொழுகும் தேசியப் பாடல்களையும், வேதாந்தப் பாடல்களையும், தோத்திரப் பாடல்களை யும் பொழிந்து போனதுமன்றி சில பிரபந்தங்களையும், தமிழ் மொழியின் எளிமையும் மேன்மையுந் தோன்றும் வண்ணம் இயற் றிப்போந்துள்ளார். அன்னார் பிரபந்தங்களெல்லாம் தமிழன்னைக் குச் சூட்டும் சிறந்த அணிகலன்களாகும் என்று சொல்வது ஏற் புடைத்தாம். பாரதியார் இயற்றியுள்ள பிரபந்தங்களாகிய 'விநாயகர் நான்மணி மாலை,' 'பாரதி அறுபத்தாறு,' 'புதிய ஆத்திசூடி,' 'குயில்,' 'பாஞ்சாலி சபதம்' முதலியன முக்கியமானவைகள். இவைகளைச் சிறிது ஆராய்வோம்.

1. **விநாயகர் நான்மணி மாலை** :—இது நான்கு மணிகளால் இயற்றப்பட்ட பாமாலையை விநாயகக் கடவுளுக்கு அணிவிப்ப தென்பதாம். பதினெண்கணக்கு நூல்களில் ஒன்றாகிய நான்

மணிக்கடிகை என்ற நூலின் முறையைப் பின்பற்றிய தமிழ்ச் சான்ழேர் தங்கள் பிரபந்தங்களில் நான்மணி மாலையைத் தொடுக்க வாரம்பித்தனர். பட்டினத்தடிகளாரும் 'கோயில் நான்மணிமாலை' என்று இயற்றியுள்ளது இவ்விடம் நினைவு கூர்தற்குரியது. நான்கு மணிகளாக எடுத்துக் கொள்ளப்பட்டவை வெண்பா, கலித்துறை, விருத்தம், ஆசிரியம் என்பன. நம் பாரதியாரும் பெரியோரைப் பின்பற்றும் முறையானே முதலாவது மணி வெண்பாவாகவும், இரண்டாவது மணி கலித்துறை யாகவும், மூன்ருவது மணி விருத்த மாகவும், நான்காவது மணி அகவலாகவும் கொண்டது அறிதற் பால தொன்ரும். நான்கு மணிகள் தொகுத்த மாலையாகக் கொண்ட விநாயகர் நான்மணிமாலையில் பாடப்பெற்றுள்ள பாடல்கள் 40 ஆகும். பட்டினத்தடிகளார் பாடிய 'கோயில் நான்மணிமாலை'யில் 40 பாடல்களே காணப்பெறுகின்றன.

பாரதியார் தனது முதற்பாடலாகிய வெண்பா மணியில் பின்னர்க் கொடுத்துள்ள இரண்டடிகள் அழகாக அமைந்துள்ளன. அவை:—

> "(நின்)றனக்குக் காப்புரைப்பார் நின்மீது செய்யுநூல்
> இன்றிதற்குங்காப்பு நீயே." (விநாயகர் நான்மணிமாலை)

மக்கள் வாழ்வை விக்கினமில்லாது செய்தலும், விக்கினமடையச் செய்தலுமாகிய வன்மைபெற்ற சக்தித்திருமகனுர் ஓங்கார வடிவத்தைப் பலபடப் புகழ்ந்து பாடுங்காலை, மௌனநிலை வந்திடத் தனக்குச் செய்தலோடு, அளப்பருஞ் செல்வத்தையும் நூறுண்டு இருக்கும் வயதும் அளிக்கவேண்டுமென்று வேண்டுகின்ருர். அன்னுர் அங்ஙனம் வேண்டுவதற்குரிய காரணங்கள் கீழே வரும் அகவலில் காணப்படுகின்றன. சில அடிகள் வருமாறு:

> "கடமை யாவன: தன்னைக் கட்டுதல்,
> பிறர் துயர் தீர்த்தல், பிறர் நலம் வேண்டுதல்,
> விநாயக தேவனுய், வேலுடைக் குமரனுய்,
> நாராயணனுய், நதிச்சடை முடியனுய்,
> பிறநாட்டிருப் போர் பெயர் பல கூறி,
> அல்லா யெஹோவா எனத் தொழுதன்புறும்
> தேவருந் தானுய், திருமகள், பாரதி,
> உமையெனுந் தேவிய ருகந்தவான் பொருளாய்..."
>
> (விநாயகர் நான்மணிமாலை அகவல்)

இங்கு, சக்திக் கணபதியைப் பாரதியார் தனிப்பொருளாக எடுத்துக் கூறி, எல்லா மதத்தினருக்கும் பொதுவுடைமைப் பொருளாக வரைந்து காட்டியது "ஓம்" எனும் பொருள் எல்லோர்க்கும் ஒப்ப முடிந்ததாகையினால் பொருந்துமாறு கொள்க. வேறோரிடத்தில் பாரதியார் தனது வாழ்க்கையின் கடமைகள் மூன்றென்றார். அவை:—

"நமக்குத் தொழில் கவிதை, நாட்டிற் குழைத்தல்,
இமைப் பொழுதுஞ் சோரா திருத்தல்—உமைக்கினிய
மைந்தன் கணநாதன் நம் குடியை வாழ்விப்பான்
சிந்தையே! இம்மூன் றுஞ் செய்." (நான்மணி மாலை)

தனது 30-வது பாடலில் 'கலித்துறை' என்ற மணியில் மூன்றாம் அடியிலும் நான்காம் அடியிலும், தமக்குள்ள தமிழ் விருப்பத்தையும், தமிழிலேயே கவிதையை நாட்டிக் களிக்க விரும்புவதையும் இனிமை பெறக் கூறியுள்ளார்.

"பண்டைச் சிறுமைகள் போக்கி யென்னுவிற் பழுத்த [சுவைத்
தெண்டமிழ்ப் பாடலொருகோடி மேவிடச் செய்குவையே."

பின்னர் 32-வது பாடலில், எல்லா உயிர்களும் இன்புற்றிருக்க வேண்டுமென்ற அவா நிரம்பப் பெற்ற எழுச்சியால் பாடும் அடிகள் பின் வருமாறு:—

"பேசாப் பொருளைப் பேச நான் துணிந்தேன்,
கேட்கா வரத்தைக் கேட்க நான் துணிந்தேன்,
மண்மீதுள்ள மக்கள், பறவைகள்,
விலங்குகள், பூச்சிகள், புற்பூண்டு, மரங்கள்:
யாவுமென் வினையா விடும்பை தீர்ந்தே,
இன்பமுற் றன்புட னிணங்கி வாழ்ந்திடவே
செய்தல் வேண்டும், தேவ தேவா!" (நான்மணி மாலை)

இங்கு பாரதியார் அருளொழுக்கம் நிறைந்த பெரியாரென்பது சொல்லாமலே விளங்குகின்றது. இத்தன்மைய ஒழுக்கம் கொண்ட தாயுமான அடிகள் கூறிப்போந்த சில அடிகள் இங்கு நினைந்து போற்றற்குரியன.

"எவ்வுயிரும் என்னுயிர் போல் எண்ணியிரங்கவும் நின்
தெய்வ அருட் கருணை செய்யாய் பராபரமே."
(பராபரக்கண்ணி)

**"தம்முயிர்போல் எவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்**
**செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே."**

**(பராபரக்கண்ணி)**

கலியை அழித்துக் கிருதயுகத்தைக் கேடின்றி நிறுத்த விரதங் கொண்ட பாரதியார் இப்பிரபந்தத்தைப் புதுவையில் வாழ்ந்த காலத்தில் அவ்வூர் மணக்குளத்து விநாயகரைப் பணிந்து பாடியிருக்கக் கூடுமென்று தெரிகிறது.

**"வாழ்க புதுவை மணக்குளத்து**
**வள்ளல் பாத மணிமலரே!"**

**(நான்மணி மாலை 35-வது பாடல்)**

என்ற அடிகள் இக்கருத்தை வலியுறுத்துமாறு அறிக.

2. புதிய ஆத்தி சூடி:—'ஆத்திசூடி' என்ற நீதி நூல் தமிழ் கனிந்த பிராட்டியாரான ஔவையார் அருளிச் செய்ததாகும். பாரதிப் பெருமானும் தனது நீதி மார்க்கங்களைத் தொகுத்து எழுத விரும்பியவர், 'புதிய ஆத்தி சூடி' என்ற பெயர் கொடுத்து எழுதலானார் என்பதே. "ஆத்தி சூடி அமர்ந்த தேவனை" என்ற ஔவை வாக்கிற் கிணங்க இப்பெருமகனாரும், "ஆத்தி சூடி யிளம்பிறை யணிந்து" என்று காப்புச் செய்யுளில் முதலடியாகத் தொடங்கினார்.

**"மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்**
**ஏசுவின் தந்தை எனப்பல மதத்தினர்**
**உருவகத்தாலே உணர்ந்துண ராது**
**பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்**
**ஒன்றே: அதனியல் ஒளியுறு மறிவாம்."**

இவ்வடிகள் 'புதிய ஆத்திசூடி' என்ற பெயர்க் காரணத்தை நன்கு நிரூபித்துக் காட்டுதல் காண்க.

இந்நூலின்கண்ணே சிறிய சிறிய நீதி வாக்கியங்கள் கூறப்படுகின்றன. சில நீதிகள் அறத்தைப் பற்றியன. இன்னும் சில, பொருள், இன்பம், வீட்டைப் பற்றியன. தமிழ் உயிர் வருக்கமாகிய "அ" என்றதிலிருந்து பன்னிரண்டு உயிரெழுத்துக்களையும் முதன்மைப் படுத்தி நீதி வாக்கியங்கள் செய்திருத்தலோடு "க" என்ற உயிர் மெய் வருக்கத்திலிருந்து "வௌ" என்ற உயிர்மெய் எழுத்து வரையிலும் 110 நீதிகளைப் பாரதியார் எழுதிப் போந்தது மிகவும்

வியப்புடைத்தேயாம். சிற்சில இடங்களில் "ங" என்ற எழுத்தும் அதன் வருக்கங்களும், "ஞ" என்றதில் சில வருக்கங்களும், "த" என்றதில் சில வருக்க எழுத்துக்களும், இன்னும் பிற வருக்க எழுத்துக்களும் விடுபட்டிருக்கின்றன என்பது அறியற்பாலது. அங்ஙனம் விடப்பட்ட எழுத்துக்கள் தமிழ் மொழியில் உள்ள சொற்களாக வழங்கப்படாமையானும், தமிழ் இலக்கண அமைப்பிற்கு இடமாகாமையானும் விடப்பட்டன என்று உணர்க. 'அஷ்டப்பிரபந்தம்' பாடிய பிள்ளைப் பெருமாளையங்கார் உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டையும் வைத்துப் பாடிய பாடல் ஒன்று இங்கு ஆழ்ந்து கவனிக்கத்தக்கது. அது வருமாறு:—

**" அரங்க மாளிகைக் கருங்கடல் வண்ணனை**
**ஆலிமா முகிலை வாலி காலனை...**

* * * *

**ஔவிய பிறப்பில் அழுந்தி வாடுவதே,"**

பாரதியார் கூறியுள்ள நீதிகளிற் சில சிந்தித்தற்குரியன. அவை:—

**8—ஏறுபோல் நட.**
**12—ஔடதங் குறை.**
**26—சாவதற் கஞ்சேல்.**
**44—திருவினை வென்று வாழ்.**
**48—தெய்வம் நீயென்றுணர்.**
**99—லீலை இவ்வுலகு.**
**103—வருவதை மகிழ்ந்துண்.**
**108—வேதம் புதுமை செய்.** **(புதிய ஆத்திசூடி)**

3. **பாரதி அறுபத்தாறு:**—கலம்பக உறுப்புக்களான 18 உறுப்புக்களில் சித்து, களி, மறம், தூது முதலியன வருவதுண்டு. 'சித்து' என்ற தலைப்பில் அட்டமாசித்தி அடைந்த தன்மையில் ஒருவன் தனது சித்தியை வியந்து கூறும் மரபில் கலம்பக ஆசிரியர்கள் பாடியுள்ளார்கள். இங்கு, பாரதியாரும் தன்னை ஒரு சித்தாகவே பாவித்து 66 பாடல்கள் பாடியுள்ளார்.

**" எனக்கு முன்னே சித்தர் பல ரிருந்தா ரப்பா,**
**யானும் வந்தே னொரு சித்த னிந்த நாட்டில்;**
**மனத் தினிலே நின்றிதனை எழுது கின்றாள்**
**மனோன்மணி என் மாசக்தி வையத்தேவி..."**

**(பாரதி அறுபத்தாறு)**

தமிழ் நாட்டின் சித்தர் கணம் 18 என்பர். சுப்பிரமணியர் ஞானம் 200, செந்தூரம் 300 என்று கூறுவதுபோல் 'பாரதி அறுபத்தாறு' எழுதப்பட்டுள்ளது. இப்பிரபந்தப் பகுதியில் பாரதியார் தனது ஞானனுபவங்களையும், மரணத்தை வெல்லும் மார்க்கங்களையும், சித்தினுல் ஏற்படும் இடையூறுகளையும், பொறுமையின் அழியாத் தன்மையினையும், ஆண்டவன் எத்தன்மையானவன்? எங்குளான்? என்பதையும் கூறிச் செல்கின்ருர். மேலும், தனக்கு ஞானசிரியர்களாய் விளங்கிய மாங்கொட்டைச் சாமியின் (குள்ளச் சாமியின்) தவ மேம்பாட்டையும், கோவிந்தசாமி என்பார் ஜீவன் முக்த நிலையையும், அவர்களின் உபதேச மொழிகளையும் கூறிச் செல்வதோடு, குவளைக்கண்ணன் நட்பின் திறத்தையும், பெண்மை, தாய்மை, காதன்மை, சர்வமத சமாசம் என்ற பொருள்களைப் பற்றியும் இனிய முறையில் விவரித்துச் செல்கின்ருர். இப்பகுதியிலிருந்து பாரதியாரின் ஆன்ம பக்குவமும், சுகானுபவமும், ஞானத் தெளிவும் எத்துணைச் சிறப்புடையன என்பதை நன்கு படிப்போர் தாமாகவே உணர்ந்து கொள்ளலாம். உண்மைப் பாரதியாரைக் கண்டு கொள்ளத்தக்க பல இடங்களில் இது ஒன்ருகும்.

'மரணத்தை வெல்லும் வழி' யென்ற தலைப்பில் "அத்வைத நிலை கண்டால் மரணமுண்டோ?" என்று கூறியது பொன்னேபோல் போற்றத் தகுந்தது. "புத்தன், சங்கராசார்யன், இராமாநுஜன், யேசுநாதன், கண்ணன், இராமன் முதலானவர்கள் அழிந்தொழிந்தார்கள். பார்மீது நான் சாகாதிருப்பேன் காண்பீர்" என்ற சித்தன் வாக்கு கவனிக்கத்தக்கதாகும். மரணம் என்ற அச்சத்தையும், வேட்கையென்னும் ஆசையையும் அறுத்து விடுவதே மரணத்தை அறுக்கும் கருவிகள். "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்றும் நிலையாமை காணப்படும்" என்ற தமிழ்மறைவாசகமும், "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்ற திருவாய்மொழி மந்திரமும் இங்கு ஒப்பிட்டு நோக்கத்தக்கதாகும்.

பொறுமையின் பெருமையைத் திருத்தணிகையில் கண்டு கொள்க என்றும், தருமபுத்திரன் பொறுமையின் காரணமாக நெடுநாள் அரசு புரிந்தானென்றும், கடைசியாக நெறிதவறி விட்டமையின் இளையரோடு போர் செய்தானென்றும், பாரதநாட்டின் பெருமை குருக்ஷேத்திரத்தில் தாழ்த்தப்பட்டது என்றும் சித்தர் கூறுகிருர்.

"நாடியிலே அதிர்ச்சியினால் மரண" மென்றான் ஜகதீச சந்திர வஸு என்றும், இவ்வுண்மை ஞானானுபவத்தில் முடிவாகக் காணப் பட்டதென்றும், கவலையினால் நாடியெலாம் தழலாய்ப் போகுமென் றும், கோபத்தை அடக்கி வென்றிடில் நாடியைக் காக்கலாமென் றும், அப்பாதுகாப்பே துன்பங்களைக்கொன்று அமரவாழ்வு அடைவ தற்குச் சாதகமாவது என்றும் அழுத்தமாகக் கூறப்படுகின்றது. "கடவுள் எங்கே உள்ளார்?" என்பதற்குப் பதில் "சுத்த அறிவே சிவ"மென்றும், "உயிர்களெல்லாம் தெய்வமன்றிப் பிறவொன் றில்லை" என்றும் விடையளிக்கப்படுகின்றது.

பழங்கந்தைகளைக் கட்டிச் சுமந்து வந்த குள்ளச்சாமியைக் கண்ணுற்ற பாரதியார், "மூட்டை சுமந்திடுவது என்னே?" என்றார். புன்னகை புரிந்த குள்ளச் சாமியார்,

> "புறத்தே நான் சுமக்கின்றேன்; அகத்தினுள்ளே,
> இன்னதொரு பழங்குப்பை சுமக்கிறாய் நீ"

என்றார். இவ்வடிகள் பாரதியாருக்கு இருதயத்தில் விடுதலை உணர்ச் சியை இசைத்ததாம். வாழ்வில் நற்பயனை அடைவதற்குப் பாரதி யார் சொல்லும் ஆலோசனை கொள்ளற்பாலதொன்றாம். அது வருமாறு:—

> "சென்றதினி மீளாது; மூடரே நீர்
> இன்று புதிதாப் பிறந்தோ மென்று நெஞ்சில்
> எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக் கொண்டு
> தின்று விளையாடி யின்புற்றிருந்து வாழ்வீர்."

(பாரதி அறுபத்தாறு)

"செத்தாரைப் போலே திரி" என்ற பட்டினத்தடிகள் வாக்கிற் கிணங்க சித்தர் இயல்புகள் 34-ம் பாடலில் கூறப்படுகின்றன. ஜீவன் முக்தர் நிலை இவ்வடிகளால் தெளியப்படும்.

> "ஸ்ரீதரன் யான் சிவ குமாரன் யானன்றோ?
> நன்றிந்தக் கணம் புதிதாப் பிறந்துவிட்டேன்,
> நான் புதியன், நான் கடவுள், நலிவிலாதோன்."

(பாரதி அறுபத்தாறு)

'பெண் விடுதலை' என்ற 45-ஆம் பாடலில் மண்ணுக்குள் எவ் வுயிரும் தெய்வமென்று கொள்ளுங்காலை, மனைவியையும் தெய்வ

மாகப் போற்ற வேண்டும் என்றும், விடுதலை அளிக்க வேண்டு மென்றும் கூறப்படுகின்றது. அவையாவன :—

**" பெண்ணுக்கு விடுதலை நீரில்லை யென்றால்**
**பின்னிந்த வுலகினிலே வாழ்க்கையில்லை."**

(பாரதி அறுபத்தாறு)

'காதலின் புகழ்' என்ற தலைப்பின்கீழ் பாரதியார் பாடிப் போகும் சிலவடிகள் சிந்திக்கத் தக்கன :—

**" ஆதி சக்திதனை யுடம்பில் அரனும் கோத்தான் ;**
**அயன் வாணிதனை நாவில் அமர்த்திக் கொண்டான் ;**
**சோதி மணி முகத்தினளைச் செல்வமெல்லாஞ்**
**சுரந் தருளும் விழியாளைத் திருவை மார்பில்**
**மாதவனு மேந்தினன் ; வானோர்க் கேனும்**
**மாதரின்பம் போற் பிறிதோ ரின்பமுண்டோ ?"**

(பாரதி அறுபத்தாறு, பாடல் 50)

காதல் என்பது மானுட வடிவில் நின்று துய்க்கும் மெய்யுறு காதலைப் போலாது உயிர்ப் பண்புடன் நிற்கும் ஆன்மநேயக் காதலே இங்கு சிறப்பிக்கப்படுகின்றது. " சக்தியின்றிச் சிவமில்லை " என்ற உயரிய கருத்தே பாரதியாரால் இவ்வடிகளில் அறிவுறுத்தப்படுகின்ற தென்னலாம். அம்மையின் வாயிலாகச் சிவ தரிசனம் கிடைப்பதும், திருமகளின் முகமாய் நாராயண தரிசனம் கிடைப்பதும் எளிதான முறை என்பதும், அதுவே மேலான நெறி என்பதும், ஆன்றோரால் கொள்ளப்பட்டிருந்தமையின், வாழ்க்கையின் வளத்தைத் தேடி நிற்கும் ஆடவன் தன்னிடம் காதல் செய்யும் மனைவியையே சக்தி சொரூபமெனக் கொண்டு கடவுள் நிலை எய்த வேண்டுமென்பதாம். இலக்கியங்கள் எல்லாம் காதற் புகழ்ச்சியின் வடிவங்களாதலான், மாதரோடு காதலோடு வாழ்தலே இயற்கையாம். அங்ஙனம் காதலைக் கொள்ளுங்கால் கற்புநெறி வழுவாத காதலே இருபாலா ராலும் கொள்ளக் கடவது.

'சர்வமத சமரசம்' என்ற தலையங்கத்தில் சில உயர்ந்த கருத் துக்கள் கூறப்படுகின்றன.

**" ஈரமிலா நெஞ்சுடையார் சிவனைக் காணார் ;**
**எப்போதும் அருளைமனத் திசைத்துக் கொள்வாய் ;**

வீரமிலா நெஞ்சுடையார் சிவனைக் காணார் ;
எப்போதும் வீரமிக்க வினைகள் செய்வாய் ;
பேருயர்ந்த ஏஹோவா அல்லா நாமம்
பேணுமவர் பதமலரும் பேணல் வேண்டும்."

(பாரதி அறுபத்தாறு, பாடல் 64)

"பூமியிலே நீகடவு ளில்லை யென்று
புகல்வது நின் மனத்துள்ளே புகுந்த மாயை ;
சாமிநீ அம்மாயை தன்னை நீக்கி
சதா காலம் 'சிவோஹ' மென்று சாதிப்பாயே."

(பாரதி அறுபத்தாறு, பாடல் 66)

4. குயில் :—இப்பிரபந்தம் பாரதியார் கண்ட பகற் கனவின் கற்பனைச் சித்திரமாக உள்ளது. வெளிப்படையான பொருளில் காதல் வளர்ச்சியையும், திறனையும், நல்லின்பங்களையும் குயில் எடுத்துக் கூறுவதுபோற் கூறிச் செல்லினும், வேதாந்தக் கருத்துக்கள் இலைமறை காய்போல் மிளிர்கின்றன. குயிலின் பிறப்பு வளர்ப்பும், பூர்வ ஜென்ம வாசனையும், தனது வாழ்க்கையில் அனுபவித்த இன்னல்களும், பிறவும், குரங்கினிடத்திலும் மாட்டினிடத்திலும் கதையாகச் சொல்லப்படுகின்றன. இக்கற்பனை நடந்தது புதுவை நகரின்கண் உள்ள ஓர் சோலையில். பொதிய மலை முனிவன் குயிலின் பூர்வ ஜென்மத்தைப் பற்றிக் கூறுவதுபோல் புனையப்பட்டிருக்கின்றது. அக்கதை வரலாற்றுப் பகுதி பின்வருமாறு சொல்லப்படுகின்றது :—

குயில் முற்பிறப்பில் வேடர் குலத் தலைவன் முருகனென்னும் வேடன் மகளாகப் பிறந்தாள். மாடனென்னும் மாமன் மகனை மாலையிடுவதாக வாக்களித்தாள். அது காதலினாலன்று, கருணையினாலென்பதாம். பின்னர், பெற்றோர்களின் விருப்பப்படி நெட்டைக் குரங்கனெனும் ஆடவனை மணக்கும்படித் திருமண ஏற்பாடுகள் நடந்தன. மணம் முடியுமுன் தன் ஆயத்தாருடன் ஓர் சோலையிலே விளையாடுங் காலத்து, சேரமான் மைந்தன் இவளின் எழிலைக் கண்டு காமுற்று வார்த்தையாடினான். பத்தினியாக வாழ்வதே பண்புடைத்தாமென்று சொல்லிக் காட்டிய அவ்வேட்டுவப் பெண்ணை அரசிளங் குமரன் விட்டானில்லை. அவன் உரைத்த சூளுரையால் அவள் மனம் மாறியது. மகிழ்ச்சியின் பெருக்கால் மனமிழந்த

மங்கைப் பருவத்தினளாய அப்பெண் மன்னனால் தழுவப்பட்டு இரும்பைத் தழுவிய காந்தம் போன்று இருந்தனள். இந்நிகழ்ச்சியைக் கண்டு கொண்டனர் மாடன் என்ற மாமன் மகனும், மணமுடிக்க இருந்த நெட்டைக் குரங்கனும். மாடனும், குரங்கனும் ஒருவரையொருவர் கலக்காமலேயே இக்காட்சியைக் கண்டு கொண்டனர். தனித்தனியே தங்களுடைய வாளை உருவி மன்னவனைக் கொன்றிட ஓடி வந்தனர். வேந்தன் முதுகினில் வெட்டு இரண்டு விழுந்தன. சட்டென்று மன்னவனும் தன் வாளுருவி இருவரையும் வீழ்த்தினன். இருவரும் மாண்டனர். மன்னவனும் இறக்கும் தருவாயில் தனது காதலியை (குயிலை)ப் பார்த்துக் கீழ் வருமாறு கூறி இறந்தான் :

**" சாவிலே துன்பமில்லை ; தையலே இன்னமும் நாம்**
**பூமியிலே தோன்றிடுவோம். பொன்னே, நினைக்கண்டு**
**காமுறுவேன் ; நின்னைக் கலந்தினிது வாழ்ந்திடுவேன்."**

(குயில்)

இறந்த மன்னன் தொண்டை நாட்டின்கண் உள்ளதோர் பட்டினத்திற் பிறந்து வளர்ந்து வந்தான். மாடனும், குரங்கனும் பேயாக மாறிக் காடு மலை சுற்றித் திரிந்து வருங்காலை இப்பெண்ணைக் கண்டு கொண்டனர். பின்னர் தங்களது மாய வித்தையால் அப்பெண்ணைக் குயில் வடிவம் அடையுமாறு செய்தனர். அங்ஙனம் ஏற்பட்ட குயில் வடிவத்தினளாய பெண்ணைச் சுற்றிக்கொண்டே இருந்தனர். தொண்டைவள நாட்டில் ஒரு சோலையிலே முன்னைய வேந்தன் மகன் வந்தகாலைக் குயிலினது பாட்டைக்கேட்டு நேசங் கொண்டான். பேய்களாய் மாறிய மாடனும் குரங்கனும் மாயச் செய்கை செய்து அரசன் மகன் மனம் மாறுபடச் செய்தார்கள். அவனும் குயிலினது தன்மை வஞ்சகத் தன்மை என ஓர்ந்து விட்டுவிடத் தீர்மானித்தான். பிறகு நிகழும் நிகழ்ச்சிகளைப் பின்னே கண்டு கொள்வாய் என்று குயிலுக்கு முனிவர் அறிவித்தார். இத்தன்மையான முறையில் கதை கதைக்கப்படுகின்றது.

இக்கதையின் கற்பனையை வேதாந்தக் கண்கொண்டு பார்த்தால் பதி, பசு பாச இலக்கணத்தைப் பின்பற்றி நிற்கின்றதெனத் தோற்றுகிறது. ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களில் காதலை மாயா சக்தியாகவும், ஆணவம், கன்மம் என்றவைகளை மாட

னும் குரங்கனுமாகப் பாவித்து, குயிலைப் பசுவாக (ஆன்மாவாக)ப் பாவித்து, மன்னவன் மகனைப் பதியாகப்பாவித்துப் பொருள் கொள்ளுதலே பொருத்த முடைத்தாம். மும்மலங்களில் தோய்ந்து உழலும் ஆன்மா தனது நித்தியானந்த வாழ்வை அடைய முயன்றும், காதல் என்ற மாயையின் கட்டுப்பாட்டினுல் ஆணவத்தினின்றும், கருமத்தினின்றும் பிரிய முடியாமல் தவிக்கின்றது. குயிலின் காதலை மன்னவன் மைந்தன் அறிந்த போதினும், மாடன், குரங்கன் சேட்டைகளால் குயிலின் உண்மைக் காதல் ஐயமுடையதாகின்றது. அதுபோல் சாந்தியை அடைய விரும்பும் ஆன்மா காதலாகிய மாயையைக்கண்டு களித்துப் புகழ்ந்து பாடிக்கொண்டே இறைவனை அடைய முயலுங்காலை, ஆணவம், கன்மம் என்ற பேய்கள், மாயையைத் தனித்துவிடாது அதனுடன் கலந்து ஆன்மாவின் முற்போக்கைத் தடைப்படுத்துகின்றன. குயில் விடுதலை அடைய வேண்டுமெனில் மாடன் குரங்கனை நீக்கிவிடவேண்டும். அத்தன்மையேபோல் ஆன்மாவும் முக்திநிலை பெற விழைந்தால் பதியினிடத்தில் காதல் கொண்டு, ஆணவம் கன்மத்தினின்றும் அறவே நீங்கவேண்டும். "நான்தானெனும் சொல் கெட்டாலன்றித் தோன்ருது சத்தியம்" என்ற அருணகிரியார் மதுரமொழி இவ்வுண்மையினை விளக்கும். நான், எனது என்ற அகங்கார மமகாரங்களாகிய ஆணவம் வினையினுல் வரும் பயனை வேண்டி நிற்கும். கன்ம உணர்வும் அடியோடு நீக்கப்பட்டாலன்றி மாயையின் உடலில் வளர்ந்து வரும் ஆன்மா பதியாகிய புருடோத்தமனைக் கண்டு கொள்ளாது என்பதுவே இக்கதையின் வேதாந்தச் சுருக்கமாகத் தோற்றுகிறது. குயில் தனது காதலின் பெருமையைக் குரங்கினிடத்தும், மாட்டினிடத்தும் தெரிவித்த வகையைக் காமம் என்ற இச்சையின் பெருமையை வெகுளி மயக்கம் என்ற குணத்ததிபர்கள் கேட்கலுற்ருர்கள் என்று கொள்ளலும்கூடும். வேறு முறையாக இக் கதைக் கருத்தினைக் கொள்வாரும் உளர்.

5. பாஞ்சாலி சபதம் :—'பாஞ்சாலி சபதம்' என்ற பிரபந்தத்தைப் பாரதிக் கவிஞன் ஓர் சிறிய காவியமாகவே இழைத்துள்ளார் என்று கூறுவது மிகையாகாது. இந்திய மக்களின் இதிகாசங்களாகிய இராமாயணத்தையும் பாரதத்தையும் அறியாதார் இல்லை. பாரதத்தின் எழுச்சியின் மூலகாரணமே கண்ணபிரான் பாரதப்போரை

நிகழ்த்திய ஞான்று போர்க்களத்தின் எண்ணற்ற அதிர்ச்சி களிடையே வேதாந்த சாரமாகிய கீதையைப் பார்த்தன் முகமாக மக்களுக்கு உபதேசித்ததாகும். பாரதப்போரின் அடிப்படையான தத்துவம் பெண்மையின் நலனை உயர்த்திக் காட்டுதலேயாம். பாஞ் சாலியின் சபதமே போர் நிகழ்வதற்குத் தகுந்த ஏது வாயிற்று. அச்சுவையான பாகமே பாரதியாரின் கவிதைக்கு இலக்காயது மேன்மையுடைத்தன்றோ! இச்சிறு காவியத்தை ஐந்து சருக்கமாகக் கொண்டு பாடியுள்ளார். இலக்கண நூல்களில் கூறப்படும் காவிய உறுப்புக்கள் இந்நூலில் எடுத்தாளப்பட்டுள்ளன. சுருங்கச் சொல் லல், விளங்கவைத்தல் முதலான அழகுகளும், அம்மை, அழகு, தொன்மை, தோல் முதலான வனப்புகளும் இக்காவியத்தில் ஆங் காங்குக் காணப்பெறுவது பாரதியாரின் தெளிந்த புலமையை நன்கு நிரூபிக்கும்.

பிரமஸ்துதியில் "ஓம்" எனும் பொருளை "ஆம்" எனப் பொருள்படக் கூறுவதும், சரஸ்வதி வணக்கத்தில் அவளது கேசாதி பாத வருணனையும் எழில் ஒழுக அமைந்துள்ளன. அஸ்தினபுர நகரச் சிறப்பு, கம்பன், காளிதாசன், திருத்தக்கத்தேவன் முதலி யோருடைய நூல்களின் நகரச் சிறப்புக்களைக் கடைந்தெடுத்த நவநீதமாகத் திகழ்கின்றது. துரியோதனன் சபையின் வருணனை அவனது பெருமையினை அளாவியே நிற்கின்றது. துரியோதனனின் "பெருமை" என்பது தருமனின் பெருமையையே கண்ணாகக் கொண் டுள்ளது. தருமனுக்கு யாகத்தின் கண்ணே வந்த திறைப் பொருள் களின் விவரத்தைக் கூறுமிடத்து, கரிகால் பெருவளத்தான், சேரன் செங்குட்டுவன் முதலான தமிழரசர்களின் திறைப்பொருள் களுக்கு நிகராமாறு இல்லை. துரியோதனன் தனது மாமனாகிய சகுனியின் நேசத்தை மிக்க விரும்பித் தனது உள்ளக் கிடக்கையான பாண்டவ ரிழிவைக் கூறுகின்ற முறையும், தோலுக்குப் பசுவைக் கொல்லும் கருத்துடைய சகுனியின் சதியும் படித்து இன்பமடைய வேண்டிய நகைச்சுவைப் பகுதிகளாகும். திருதராட்டிரன் தன் மைந்தன் துரியனுக்குப் புத்திமதி கூறுதலான பகுதி ஷேக்ஸ்பியரின் 'ஹாம்லெட்' என்ற நாடகத்தில் பொலோனியஸ் என்ற தந்தையான வன் பிரான்ஸ் தேசத்திற்குச் செல்லும் தன் அருமை மகனைப் பார்த்துக்கூறும் அறிவுரைபோன்று விளங்குகின்றது. பாண்டவர்

களைச் சதி செய்யக்கருதிய துரியனும், சகுனியும், திருதராட்டிரனால் இடித்து இழித்து உரைக்கப் பெறுகின்றனர். இப்பகுதியில் உயர்ந்த நீதிகள் போதிக்கப்படுகின்றன.

சூதின் இழிவைப் பலபேர் வாயிலாகக் கண்டித்தலும், விதுரன் தன் நல்லியல்பிற்குத் தகுந்த முறையில் நடந்து கொள்ளுதலும் பாராட்டற்பாலன. அஸ்தினபுரத்தை நோக்கி வருகின்ற பாண்டவர்களில் ஒருவனான அருச்சுனன் தன் காதற்தெய்வமாகிய திரௌபதியை மாலைக் காலத்தில் தனியே அழைத்துச் சென்று ஞாயிறு மறையும் காட்சியைக் காட்டிக் கூறுகின்றான். இங்கு வானத்தின் சிறப்பெல்லாம் ஓவியமாகத்தீட்டி எழுதிய பாரதியின் காவியச் சிறப்பை விளக்கி எழுதுவதைக் காட்டிலும், படித்து இன்புறுவதே ஏற்புடைத்தாம். இயற்கையின் எழிலை எடுத்துக்காட்டுவதில் மகாசக்தி வாய்ந்த காளிதாசனின் மாண்பு இங்கு ஒப்பிட்டு இன்புறத்தக்கது.

'சூதாடுதல்' என்ற பகுதியில் சூதாடுதலுக்கேற்ற பாடல்கள் அமைந்துள்ளன. தீய ஒழுக்க முடையோர்க்கு இச்செயல் பொருந்துமென்பதைச் சகுனியின் சொற்களால் காண்பிப்பதோடு, நன்மக்கள் வாழ்வு சூதினால் அடியோடு எங்ஙனம் சிதைக்கப்படுகின்றது என்பதையும் விளக்கிப் புலப்படுத்தி உள்ளார்.

பின்னர், துகிலுரிதற் சருக்கத்தின் துவக்கத்தில் 40 வரிகளில் பெண்மைச் சித்திரத்தைப் பாரதியார் தமிழமிழ்தால் உயிர் ஓவியமாகத் தீட்டியிருக்கின்றார். திரௌபதியைச் சபையின் கண்ணே துரியன் வருமாறு அழைக்கின்றான் என்று கூறவந்த பணியாளனிடத்தில் அப்பாஞ்சாலி கூறும் பதிலாகக் கூறியுள்ள அடிகள் சட்ட நிபுணர்களின் உணர்ச்சியைத் தட்டி எழுப்புவதாகும். அவ்வடிகள் சிலவருமாறு :—

**"நாயகர் தாந்தம்மைத் தோற்றபின்—என்னை**
**நல்கு முரிமை அவர்க்கில்லை.—புலைத்**
**தாயத்திலே விலைப் பட்டபின்—என்ன**
**சாத்திரத்தா லெனைத் தோற்றிட்டார் ?"**

**(பாஞ்சாலி சபதம்—துகிலுரிதற் சருக்கம், பாடல் 52)**

இக்கருத்துப்பட வில்லிபுத்தூராழ்வாரும் தனது பாரதத்தில் பாடியிருப்பினும் அதை எடுத்து வழங்கிய பாரதியாரின் அறி

வுடைமை நோக்கற் பாலதேயாம். சபையில் அதர்மத்தில் அண்ணனையும் விஞ்சிய துச்சாதனன் பாஞ்சாலியை அவையின் கண்ணே இழுத்து வந்தபின் சபையோரைப் பார்த்துக் கூறக்கூடிய அவளின் சொற்கள் அழகும் ஆற்றலும் பெற்று விளங்குகின்றன. அம்பு பட்ட மான்போல் அலறித்துடிக்கும் பாஞ்சாலியின் நிலைமையைக் கண்ட பீமன் ஆருச்சினங்கொண்டு, "கதிரை வைத்திழந்தான் அண்ணன் கையை எரித்திடுவோம்" என்று கூற, வில்விசயன் பீமனைச் சமாதானம் செய்தான். அது பின்வருமாறு:—

> **"'தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும் ;**
> **தருமம் மறுபடி வெல்லும்' எனு மியற்கை**
> **மருமத்தை நம்மாலே யுலகங் கற்கும்..."**

**(சபதச் சருக்கம், பாடல் 79)**

பின்னர் வீமன், அருச்சுனன் முதலானோர் சபதம் கூறவே 'பாஞ்சாலி சபதம்' என்னும் காவியம் முற்றுப் பெறுகிறது. இக்காவியத்தில் காணப்பெறும் எளிமை இன்பமும், சொல்லழகு பொருள் நயங்களும், எடுத்தாளப்பட்ட உவமைகளும் பழமொழிகளும் பாரதியாரின் கலைப்பரப்பையும், நுட்பமான அறிவுடைமையையும், அள்ளிக் கொழிக்கும் கவிதா சக்தியையும் அளவிட்டுக் காட்டுகின்றன.

## பாரதியார் வாழ்த்தும் சீட்டும்

பாரதியாரின் பிரபந்தங்களைப் பற்றிச் சிறிது கூறிய பின்னர் அவர் சிற்சில சமயங்களில் எழுதிப்போந்த வாழ்த்துப் பாக்களையும், சீட்டுக் கவிகளையும் சிறிது ஆராய்ந்து போதல் ஏற்புடைத்தாம். நாக்கொண்டு மானிடம் பாடுதல் பெரியோர் செய்கையன்றாயினும், புலமையும் ஒழுக்கமும் பெற்ற பெருந்தகையாளரைப் பாடுதல் தங்கள் பெருமைக்கு இழுக்காகாதென்று கருதிச் சில வமயங்களில் பாடியும் போந்துள்ளனர். பாரதியார் தேசியத்தையும், தெய்வத்தையும் சமூகத்தையும் பற்றியே எண்ணற்ற பாடல்களைப் பாடிப் போந்தாரெனினும், தக்கார் சிறப்பைக் கண்டவிடத்து அவர்களைப் புகழ்ந்து பாடுவதற்குப் பின் வாங்கினாரில்லை. தெய்வத் தன்மையுடையார் தெய்வமாகவே கருதப்படல் வழக்கினுள்ளமையான், மஹாமஹோபாத்யாய டாக்டர் சுவாமிநாத ஐயரவர்கள், ஓவியர் மணி ஸ்ரீ ரவிவர்மா, ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர், எட்டயபுரம் மஹா

ராஜா, சத்ரபதி சிவாஜி ஆகிய பெரியோர்களையும், காரைக்குடி ஹிந்துமதாபிமான சங்கத்தையும் பாரதியார் மனமுவந்து வாழ்த்தி யுள்ளார். இதற்குக் காரணம் இப்பெரியார்களும் சபைகளும், அவரவர் இயல்புக்கேற்ற அரிய பணிகளை ஆற்றி வந்தனர் என்பதே.

முதன்முதலாக 'மனைத் தலைவிக்கு வாழ்த்து' என்ற பாடலில் கவிதைத் தலைவியைப் பாராட்டியுள்ளார். பல இன்னல்களுக்கிடையே நடத்தப்படும் இல்லற வாழ்க்கையில் சக்தி தெய்வமே மனைத் தலைவியாகவிருந்து, ஒளியற்ற செய்திகளையும் பயனற்ற சொற்களையும் ஒளிபெறுமாறு செய்யக்கடவள் என்று துதிக்கின்றார். பாலை வாழ்க்கைப் பதம்பெற வேண்டுமாயின் அதற்குத் தெய்வமாய காளியின் குமாரி இம்மை வாழ்விற்கேற்ற பொருளின்பங்களைத் தந்து அறத்தைக் காப்பாற்றி மனையை வாழ்விக்க வேண்டும் என்பது பாரதியாரின் கருத்தாகும். எனவே, அழகுத் தெய்வமே தன் மனைத் தலைவியாகவிருந்து வாழ்வை ஒளிபெறச் செய்யவேண்டும் என்று காளிதேவியை வாழ்த்துகின்றார். புலவர் பெருமானுக்கு மனைவியாகத் திகழும் பெண்மணி கல்வியென்றும், அப்புலவனின் அருமை மகன் ஈர்ங்கவியென்றும் பாடிய குமரகுருபர சுவாமிகள் கருத்து இங்கு நினைந்து இன்புறத்தக்கது.

மஹாமஹோபாத்யாய சுவாமிநாத ஐயரைத் தெரியாதவர்கள் தமிழ் நாட்டில் யாரும் இலர் என்று சொல்வது மிகையாகாது. மகா வித்வான் திரிசிரபுரம் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையின் மாணாக்கருள் முதன்மைபெற்ற கும்பகோணம் அரசாங்கக் கல்லூரித் தமிழாசிரியராகவிருந்த திருவாளர் தியாகராச செட்டியாரின் அடிச்சுவடைப் பின்பற்றி அவரது உத்தியோகத்தையும் தான் பெற்று நல்ல தமிழ்ப் பணியை உயர்ந்தோர் போற்றும் வண்ணம் இயற்றியவர் சுவாமிநாத ஐயராவர். தமிழன்னையின் சிறந்த அணிகலன்கள் ஏட்டுச் சுவடியில் மறைந்திருந்த காலத்து அவைகளைத் தேடி எடுத்து அச்சு வாகன மேற்றித் தமிழ் மக்கள் படித்து அறிவு கொள்ளுமாறு செய்த சுவாமிநாத ஐயரின் வித்யாதானம் மிகவும் பாராட்டற்பாலதொன்றாம். மகா வித்வான் பிள்ளையவர்கள் மாணாக்கராகவும் இருந்த பெருமை சுவாமிநாத ஐயரவர்கட்குத் தனிப்பெருமை என்னலாம். அத்தகைய சிறப்பு வாய்ந்த தண்டமிழ்த் தொண்டனை நம் பாரதியார் புகழ்ந்து வாழ்த்துதல் நன்கு பொருத்த முடையதன்றோ? தமிழ் மொழியை

நன்கு வளர்த்து இலக்கணம் கொடுத்த அகத்தியனைப்போல் நம் சுவாமிநாத ஐயரவர்களும் தொண்டுசெய்துள்ளார் என்று பாடுகின்றார்.

**“ கும்பமுனி எனத்தோன்றும் சாமிநா**
**தப்புலவன் குறைவில் கீர்த்தி.”**

இவ்வடிகளில் சுவாமிநாத ஐயர் கும்பமுனிக்கு உவமிக்கப்பட்டது ஏற்புடைத்தாகும். கலைச்செல்வம் மிகுந்திருந்தும், நிதிச்செல்வம் நன்கு பெறாது இருக்கும் தன்மையைப் பாரதியார் தன்னிடத்து மன்றி, ஐயரவர்களிடத்தும் கண்டுகொண்டார். அங்கிலையைக் குறித்து வருந்தற்க என்று பாரதியார் ஐயரவர்கட்குக் கூறுமுகத்தானே தன்னையும் நோக்கிக் கூறினர் போலும்! பொதியத்தில் பிறந்து தென்னன் புகழிலே கிடந்த தமிழ்ப்பாவை வாழ்கின்ற காலமெல்லாம் ஐயரவர்களும் இறப்பின்றித் துலங்குவாராக என வாழ்த்திப் போதல் பெருமையினும் பெருமையன்றோ!

**“ ‘நிதியறியோம், இவ்வுலகத் தொருகோடி**
**இன்பவகை நித்தந் துய்க்கும்**
**கதியறியோம்’ என்று மனம் வருந்தற்க;**
**குடந்தைநகர்க் கலைஞர் கோவே!**
**பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்**
**காலமெலாம் புலவோர் வாயில்**
**துதியறிவாய், அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்,**
**இறப்பின்றித் துலங்குவாயே.”**

**(மகாமகோபாத்தியாயர் வாழ்த்து)**

ஓவியக் கலையில் அழியாப் புகழ்பெற்ற இரவிவர்மனையும் பாரதியார் வாழ்த்தாமலில்லை. அழகு, அறிவு, இனிமை எல்லாம் கண்டவர்களைக் களிக்கச் செய்யுமாதலால் தெய்வசக்தி வாய்ந்ததாகும். இரவிவர்மன் அழகு சுரக்கும் இயற்கை ஓவியங்களையும், உருவங்களையும் உயிர் சக்தி விளங்கும்படித் தீட்டிச் சென்றார். எனவே, கைவினை முற்றிய அறிஞன் ஓவியர்மணி இரவிவர்மன் மறைவு பாரதியார் உள்ளத்தில் மறையாமல் நின்றது. பின்னர், இரவிவர்மன் பண்புகளையெல்லாம் திரட்டி எடுத்துப் பாரதியார் தன் காவியத்தில் ஓர் ஓவியமாகத் தீட்டியுள்ளார். சில பாடலடிகள் இக்கருத்தைத் தெளிவுபடுத்தும்.

**“மலரினில் நீலவானில்**
**மாதரார் முகத்தில் எல்லாம்**
**இலகிய அழகை யீசன்**
**இயற்றினன், சீர்த்தி யிந்த**
**உலகினி லெங்கும் வீசி**
**யோங்கிய இரவி வர்மன்**
**அலகிலா அறிவுக்கண்ணு**
**லனைத்தையு நுகரு மாறே.”** (ஓவியர்மணி ஸ்ரீரவிவர்மா)

உலகப் பிரசித்திபெற்ற இத்தாலிய நாட்டு ஓவியக்கலைஞனை வியனர்டோ டிவான்சை என்ற பேரறிஞருக்கு ஈடாக நிற்கும் திறம் வாய்ந்தவர் இந்திய நாட்டு மகனை ஸ்ரீ ரவிவர்மன் என்பதை நன்கு உணர்ந்தே பாரதிப்பெருமானும் அன்னார்மீது வாழ்த்துப் பாடல் பாடினர் என்பது அறியத்தக்கது.

எட்டயபுரம் ஆஸ்தான சங்கீத வித்வானக விளங்கிய ஸ்ரீ சுப்ப ராம தீக்ஷிதர் தென்னிந்தியாவில் பிரபலமான புகழுடையவர். நம் கவிஞர் பெருமானிடம் மிக்க அன்பு காட்டியவர். அப்பெரியார் காலஞ் சென்றதைக் குறித்துப் பாரதியார் ஆற்ருெணுத் துயரால், அன்னார்மீது ஓர் இரங்கற்பா பாடியுள்ளார். அது டெனிசன் என்ற ஆங்கிலக் கவிஞன் பாடிய ‘இன் மெமோரியம்’ என்றதைப் போல் மிக்க உருக்கமாகப் பாடப்பட்டுள்ளது. பாரதியாரின் பாடலில் சுப்பராம தீக்ஷிதரின் பெருமைகள் நன்கு போற்றப்படுகின்றன. அவை:—

**“(ஞான) நிலைவிளக்கே! நினைப்பிரிந்த இசைத்தேவி**
**நெய்யகல நின்ற தட்டி**
**னுலை விளக்கே யெனத் தளரு மந்தோ!**
**நீ யகன்ற துய ருரைக்கற் பாற்ரோ?**

**மன்னரையும் பொய்ஞ்ஞான மதக்குரவர்**
**தங்களையும் வணங்கலாதேன்**
**தன்னனைய புகழுடையாய்! நினைக்கண்ட**
**பொழுது தலைதாழ்ந்து வந்தேன்...”** (இரங்கற் பாக்கள்)

பாரதியார் பாடிய சீட்டுக் கவிகள் இரண்டு பதிப்பிக்கப் பெற்றுள்ளன. அவை எட்டயபுரம் அரசர் சமூகத்துக்கு அனுப்பப் பட்டன என்று தெரிகிறது. ‘சீட்டுக் கவி’ என்பதும் ‘ஓலைத் தூக்கு’

என்பதும் ஒரு பொருள் பற்றியதேயாம். புலவர்கள் தாங்கள் காண விரும்பும் அரசர்களையோ பிரபுக்களையோ கண்டு கொள்வதற்கு முன் அவர்களின் மன நிலையைத் தெரிந்து கொள்வதற்கே 'சீட்டுக் கவிகளும்', 'ஓலைத் தூக்குகளும்' எழுதி அனுப்புவதுண்டு. நேராகச் சென்று வாளா திரும்புவதைக் காட்டினும் இம்முறை சிறந்ததாகப் பிற்காலங்களில் கருதப்பட்டு வந்தது. சென்ற நூற்றாண்டிலும் இத்தன்மையான சீட்டுக் கவிகளைச் சில புலவர் பெருமக்கள் எழுதிப் போந்துள்ளார்கள். அம்மரபே நம் கவிஞர் பெருமானாலும் இங்குக் கையாளப்பட்டது.

பாரதியார் 1919-ஆம் ஆண்டு புதுவையினின்றும் வெளியேறிச் சென்ற பின், சில காலம் தனது சொந்த ஊராகிய எட்டயபுரத்தில் தங்கலானார். முற்காலத்தில் எட்டயபுர மன்னனிடம் போய் ரூபாய் பன்னிரண்டு மாதச் சம்பளமாகத் தான் பெற்றிருந்த போதினும், தற்பொழுது ஏற்பட்டுள்ள சூழ்நிலையின் காரணமாக, தான் அவ்வரசரிடம்சென்று குறைவேண்ட மனங்கொள்ளவில்லை. வறுமையினால் ஏற்பட்ட துன்பங்கள் பாரதியாருக்கு அக்காலத்தில் அதிகமென்றே சொல்லலாம். எனினும், பல அன்பர்களின் தூண்டுகோலால் இரண்டு சீட்டுக் கவிகள் எழுதி அரசர் சமூகத்திற்கு அனுப்பி வைத்தார்.

'சீட்டுக் கவி' என்ற தலைப்பில் எழுதப்பட்டிருக்கும் பாடலில் கவிஞர் பெருமக்களை அவர்கள் விருப்பப்படி அரசன் நேரில் வந்து கண்டு கொள்வதே முறையானதென்றும், தனது பாவும் பண்ணும் மிக்க உயர்ந்ததென்றும், விண்ணளவுயர்ந்த கீர்த்தியும் கல்வி மேம்பாடும் அரசன் உடையவன் என்றும் கூறி, தனது பாடலை மெச்சி, தகுந்த பரிசுகள் வழங்க வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

**"விண்ணள வுயர்ந்த கீர்த்தி வெங்கடேசு ரெட்டமன்னா!**
**பண்ணள வுயர்ந்த தென்பண், பாவளவுயர்ந்த தென்பா,**
**எண்ணள வுயர்ந்த வெண்ணி விரும்புகழ்க் கவிஞர் வந்தால்,**
**அண்ணலே பரிசு கோடி யளித்திட விரைகிலாயோ?"**

(சீட்டுக்கவி)

இரண்டாம் முறையாக எழுதியனுப்பிய ஓலைத்தூக்கில் மன்னனுடைய தமிழபிமானத்தைத் தெற்றென விளக்கி, தன் பாடல்கள்

பிரான்சு தேசத்துப் புலவர்களாலும், ஆங்கிலப் புலவர்களாலும் நன்கு மதிக்கப்பட்டுப் பாராட்டப்படுகின்றன என்றும், தமிழ் நாட்டில் கவியரசர் இல்லை என்ற வசைச்சொல் தன்னால் அழிந்தது என்றும், பாடலின் பெருமையைப் போற்றி ஜெய பறைகள் சாற்று வித்து, சாலுவைகள், பொற்பைகள், பல்லக்குகள், குதிரைகள் முதலாகப் பரிசளித்துப் பாராட்ட வேண்டுமென்றும், பாடியனுப் பினர். இங்குக் கவியரசனைப் புவிஅரசன் தக்கபடி ஆதரிக்க வேண்டு மென்பது குறிப்பு. அவ்வோலைத் தூக்கில் சில அடிகள் வருமாறு:—

**“ வாசமிகு துழாய்த்தாரான் கண்ணனடி**
**மறவாத மனத்தான், சக்தி**
**தாசனெனப் புகழ்வளரும் சுப்ரமண்ய**
**பாரதிதான் சமைத்த தூக்கு.”**

**“ புவியனைத்தும் போற்றிடவான் புகழ்படைத்துத்**
**தமிழ் மொழியைப் புகழிலேற்றுங்**
**கவியரசர் தமிழ்நாட்டுக் கில்லையெனும்**
**வசையென்னாற் கழிந்த தன்றே!**
**‘ சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது,**
**சொற் புதிது, சோதி மிக்க**
**நவகவிதை, யெந்நாளு மழியாத**
**மகா கவிதை ’ யென்று நன்கு... போற்றுகின்றார்.”**

(ஓலைத்தூக்கு)

இப்பாடல் நம் பாரதியாரின் வீரத்தையும், ஆத்ம சக்தியையும் காட்டுகின்றது என்னலாம். உண்மைப் புலமை என்பது நண்ணார் நாண அண்ணாந்து நடப்பதாகும். வாழ்க்கையில் கம்பீரமாக வாழ முயன்றும், விரும்பியும், சிலர் அங்ஙனம் நடவாது தாழ்ந்து போதல் உள்ளத்தின் அச்சத் தன்மையைக் காட்டுகின்றது. தமிழ்மொழி யின் இனிமை தெரிந்த பண்டைய அரசர்கள் தமிழ்ப்புலவர் களை ஆதரித்த முறைகள் என்றும் சிந்தித்து மகிழ்தற்குரியன. உதாரணமாக, சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலாதனென்ற அரசன், தன்னிடம் வந்த மோசிகீரனார் என்ற புலவர் முரசுகட்டிலில் ஏறித் துயின்ற காலத்து, அவரிடம் சீற்றங்கொள்ளாது, தமிழ் மொழியின் இனிமை தெரிந்த காரணத்தால் தனது முழவுத் தோள் களால் விசிறி கொண்டு அன்னாருக்கு விசிறினான். முரசுகட்டி லென்பது வீர முரசம் வைத்திருக்கும் இடமாகும். நடந்த கதைப்

பால் வருந்திய மோசிகீரனார் அக்கட்டில் இன்னதென்று அறியாமல் ஏறி உறங்கிவிட்டார். பின்னர் அரசன் வந்து அவரது செயலைக் காணுங்கால், தனது உடைவாளைக் கொண்டு அவரை இரு கூறுக் காமல் தன்கை விசிறி கொண்டு விசிறினான். உடல்மீது பட்ட குளிர்காற்றால் விழித்தெழுந்த மோசிகீரனார் அரசனது செயலைப் பாராட்டி ஓர் பாடல் பாடினார். அப்பாடல் புறநானூற்றில் காணப் படுகிறது. அவ்வடிகளில் சில:—

**"அறியாதேறிய வென்னைத் தெறுவர**
**இருபாற் படுக்குநின் வாள்வாயொழித்ததை**
**அதூஉஞ் சாலுநற் றமிழ் முழுதறிதல்**
**அதனொடு மமையா தணுக வந்துநின்**
**மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென**
**வீசி யோயே!"** (புறம்-50)

இஃது இவ்வாறாக, புலவர் பெருமக்களின் பெருமை தெரியாத உபகாரிகள் முன்னிலையிலும் சான்றாண்மைமிக்க கவிவாணர்கள் வீரம் குறைந்து நடந்தாரில்லை. வானம்பாடியைப் போன்றவர்கள் புலவர்கள். ஓர் உதாரணம்! பெருஞ்சித்திரனார் என்ற புலவர் வெளி மானின் தம்பியிடம் தன் பெருமைக் கேற்ற பரிசிலைப் பெறாத தால் குமணனிடம் சென்று அவனால் கொடுக்கப் பெற்ற பகடை (யானையை) வெளிமானினது தம்பியின் ஊர்க்காவல் மரத்தில் பரிசிலாகக் கட்டுவித்துச் சந்தோஷமாகச் சென்றார். செல்லுங் காலை, பாடிய பாடலடிகள் சில:—

**இரவலர் புரவலை நீயுமல்லை**
**புரவல ரிரவலர்க் கில்லையுமல்ல**
**ரிரவல ருண்மையுங் காணினி யிரவலர்க்**
**கீவோ ருண்மையுங் காணினி......** (புறம்-162)

இப்பெருமித உணர்வே நம் பாரதியாரிடம் நன்கு காணப் பெறுகின்றது. வீரம், அறிவுடையோர் திறத்ததாகலின், அது புகழப்படுமாறு காண்க. பரிசில் விழைந்துநிற்கும் காலையிலும் தான் எழுதிய சீட்டுக் கவிகளில் தன் நல்லியல்பை இழந்தாரில்லை பாரதியார்! இதுவன்றோ சிறிய தமிழ்ப்புலமையின் மாண்புடைமை!

கடைசியாக, சத்ரபதி சிவாஜியின் பெருமையை மறைமுக மாகப் பாடிச்செல்லுதல் கவனிக்கத்தக்கது. இந்திய நாட்டின்

விடுதலைக்குப் போராடிய வீரர்களில் முதன்மை பெற்றவர் சிவாஜி. அன்னிய நாட்டின் ஆட்சியை அழித்துத் தள்ளிப் பாரதமாதாவின் மேன்மையை நிலைநாட்ட முற்பட்டவர் அவ்வீரபுருஷர். பாரதியார் போன்ற பாரதமணியின் புதல்வர்கள் வரிசையில் முன்னணியில் வைத்துப் போற்றப்படக்கூடியவர் அவரேயாம். காளியின் வரப் பிரசாதத்தை விரும்பியே பூசித்துவந்த அம்மாபெரும் வீரரின் செயல்களும் வார்த்தைகளும் சரித்திரப் பிரசித்தமானதுடன், காளி யின் புகழைப் பாடுவாராகிய நம் பாரதியாருக்கும் வழிகாட்டியாக விளங்கியதென்னலாம். ஆகவே, நாட்டின் விடுதலையைக் கருதிய பாரதியார் சிவாஜியை முன்னிலைப்படுத்தி அவர் தனது படைவீரர்களுக் குக் கூறுவது போன்று தனது கருத்துக்களை வைத்துப் பாடியுள்ளார். இப்பகுதியைப் படிக்குங்காலை ஆங்கில மகாகவியாகிய ஷேக்ஸ்பி யரின் நாடகமாகிய 'ஐந்தாம் ஹென்றி' என்பது ஞாபகத்துக்கு வருகிறது. பகைவர்களை முறியடிக்கச் சென்ற ஐந்தாம் ஹென்றி அரசன், தனது படைகளின் தளர்ச்சியைப் பார்த்து, வீரரசம் ததும்பும்படியான ஓர் சொற்பொழிவை "அஜின்கூர்" என்ற போர்க்களத்தில் நிகழ்த்துகின்றான். வீரர்கள், அச்சொற்பொழி வைக் கேட்டு உணர்ச்சிபெற்ற உள்ளத்தினராய், தங்கள் தாய் நாட்டின் சேவைக்காக நன்கு போர்விளைத்து வெற்றி கொள்கின்ற னர். அச்சரித்திர வரலாற்று முறையிலேயே நம் பாரதியார் சிவாஜி மன்னனை நிறுத்திப் பாரதப் படைகளுக்கு அன்னார் அறிவுறுத்துதல் போல் தான் விடுதலையின் உணர்ச்சியை அன்பு ததும்பப் பாடி உருக்குகின்றார். சில அடிகள் :—

**"அச்ச முற் றிருப்போன் ஆரிய னல்லன்.**
**புன்புலால் யாக்கையைப் போற்றியே தாய்நாட்**
**டன்பிலா திருப்போன் ஆரிய னல்லன்.**

**வீடு சென் றொளிக்க விரும்புவோன் விரும்புக!**

**பாசமே பெரிதெனப் பார்ப்பவன் செல்க!**
**நாட்டுளார் பசியினால் நலிந்திடத் தன்வயி**
**றூட்டுதல் பெரிதென உன்னுவோன் செல்க!**

**சோர நெஞ்சிலாத் தூயவ ரிருமின்!**
**தேவி தாள்பணியுந் தீரரிங் கிருமின்!**
**பாவியர் குருதியைப் பருகுவா ரிருமின்!**
**உடலினைப் போற்றா வுத்தம ரிருமின்!"** (சத்ரபதி சிவாஜி)

விசயன் முதலான வீரதிலகங்கள் வாழ்ந்த இந்நாட்டின் விடுதலைக்காகப் போராடுவதே வேண்டற்பாலது என்ற சீரியகொள்கை பாரதியாரின் பாடலில் நன்கு வற்புறுத்தப் பெறுகின்றது. கல்வி மேம்பாடும் தேசியத் தறுகண்மையும், கவிதா சக்தியினுல் இசையும், சிறந்த வித்தியாதானத்தினுல் நன்கொடையும் விளங்கப்பெற்ற பாரதி அண்ணலின் பெருமையை விரிவஞ்சிச் சுருங்கக் கூறினேம்.

## பாரதியார் அங்கதம்

சுவை ஒன்பதனுள் நடுவு நிலைமை அல்லது சாந்தம் நீங்கலாக, மற்றைய எண்சுவையும் நல்லிசைப் புலவோர் இலக்கியங்களில் நன்கு பயின்று வருகின்றன. நகையே, அழுகை, இளிவரல், மருட்கை என்ற தொடர்புடைய மெய்ப் பாட்டியல் சூத்திரத்தில் ஆசிரியர் தொல்காப்பியனுர் நகைச்சுவையை முன்னர் வைத்துள்ளார். இலக்கியத்தின் சுவையையோ, இசையின் சுவையையோ, நாடகத்தின் சுவையையோ அனுபவிக்கும் மக்கள், மற்றைய சுவைகளினும் நகைச்சுவையையே பெரிதும் அனுபவிப்பர். பொதுமக்கள் உணர்ச்சியை எழுப்புவது நகைச்சுவையேயாகும். வாழ்க்கையில் நகைச்சுவை அனுபவியாதவன் தன் உடல்நலத்தையும், உயிர்நலத்தையும் பேண முடியாதவனுகத் துன்புறுவான். இன்னல்களை எற்றித்தள்ளி இனிமையைக் கொள்வதே உயர்ந்த லட்சியமாதலின், நகைச்சுவையைப் பெருக்கிக் கொள்ளுதலே வாழ்க்கை இன்பத்தை நன்கு அனுபவிப்பதற்கு ஏற்ற சாதனமாகும். இச்சுவையைத் தமிழ்வாணர்கள் தங்கள் தங்கள் இலக்கியங்களில் பலவிடங்களிலும் காட்டிச் செல்கின்றனர். சங்க நூல்களில் காணப்படும் சில உதாரணங்களை எடுத்துத் தருமுன், அச்சுவைக்கென்று ஏற்படுத்தப்பட்ட இலக்கணங்கள் யாவை என்று சிறிது தெரிந்து கொள்ளுதல்பொருத்தமேயாம்.

"அங்கதம்" என்பதை ஆங்கில மொழியில் "செடயர்" (Satire) என்று வழங்குகின்றனர். ஒரு மனிதனின் குறைபாடுகளையோ, அல்லது ஒரு சமூகத்தின் குறைபாடுகளையோ, அல்லது ஒரு தேசத்தின் குறைபாடுகளையோ நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ குறிப்பிடுதல் அங்கதம் என்று வழங்கப்படும்.

> " அங்கதந் தானே அரில்தபத் தெரியின்
> செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே." (தொல்.)

**“மொழிகரந்து சொல்லினது பழிகரப் பாகும்...”** (தொல்.)

எனவே, அங்கதத்தை இரண்டு வகையாகக் கொள்ளவேண்டிய முறையில், ஒன்று செம்பொருள் அங்கதம், மற்ருென்று பழிகரப் பங்கதம் என்று பெயர் பெறும்.

**“தேவரனையர் கயவர் அவருந்தாம்**
**மேவன செய்தொழுக லான்.”** (குறள்)

கயவர்களின் கீழ்மைக் குணங்களைக் கூறவந்த குறளாசிரியர் மறைமுகமாகத் தேவருக்கு அன்னோரை ஒப்பித்தார். தேவர்கள் தங்களது புண்ணிய மேலீட்டால் நியமிப்பாரின்றி, தாம் எண்ணிய வாறு செய்தொழுகுபவராவர். கீழ்மக்களும் நியமிப்பாரின்றி, கீழ்ச் செயல்களைச் செய்தொழுகுபவராவர். எனவே, கயவர்கள் தேவர் களுக்கு ஒப்பானவர் என்று மறைமுகமாகக் கூறுவதனால் நகைச் சுவை தோன்றுவதாயிற்று.

ஔவையார் தொண்டைமானிடம் சென்றகாலத்து, அவன் தன் பேரழகுவாய்ந்த ஆயுதச்சாலையை அவளுக்குக் காட்டினன். தொண்டைமானே, போர்க்களத்தில் நின்று அரியபெரிய வீரச்செயல் களைச் செய்த தறுகண்மை மிக்குடையனல்லன். அதியமானிடத்தி லிருந்த ஔவையார் அதியமானின் வீர ஒழுக்கத்தை நன்கு அறிந்த வர். தொண்டைமான் தனது கர்வந் தோன்றும்படி காட்டிய ஆயு தச்சாலையைப பார்த்துக் கீழ் வருமாறு கூறினர் :

**“இவ்வே! பீலியணிந்து மாலை சூட்டிக்**
**கண்டிர ணோன்காழ் திருத்தி நெய்யணிந்து**
**கடியுடை வியனக ரவ்வே யவ்வே**
**பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து**
**கொற்றுறைக் குற்றில மாதோ!”** (புறநானூறு)

தொண்டைமானின் ஆயுதங்கள் அழகிய கட்டிடத்தில் செம்மை யாக அமைக்கப்பட்டிருக்கின்றனவென்றும், அதியமானின் ஆயுதங் கள் முனை சிதைந்து கொல்லனது உலைக்களத்தில் இருக்கின்றன வென்றும் கூறிய ஔவையார் வாக்கு நகைச்சுவையை விளைக்கின்றது. தொண்டைமானின் வீரம் மறைமுகமாகத் தூற்றப்பட்டதும் அதிய மானின் வீரம் புகழப்பட்டதும் பாராட்டற் குறியதாம். இச்செய்யுள் அங்கதச் செய்யுளாகும்.

எட்டுத்தொகை நூல்களிலும், தமிழ்ப்பெருங்காப்பியங்களி லும் இத்தன்மையான அங்கதச் செய்யுள் விரவி வருதலைக் காண்டல் தமிழ் இலக்கியங்களைப் பயில்வோர்க்கு எளிதானதே.

ஐங்குறுநூறு என்ற அகப்பொருட்சுவை ததும்பும் இலக்கிய நூலில் உள்ளுறையாக வரும் அங்கதத்தைக் கீழே வரும் அடிகள் காட்டுகின்றன.

**“ கரும்பு நடு பாத்தியுட் கலித்த ஆம்பல்**
**சுரும்பு பசி களையும் பெரும்புன லூர...”** **(ஐங்குறுநூறு)**

பரத்தையர் ஒழுக்கத்தில் ஈடுபட்டுள்ள தலைமகற்கு, தலைவியானவள் இடித்துரைக்கின்றாள். அதாவது, பரத்தையர் தங்கி வாழவேண்டிய இல்லில் யானிருந்து விருந்தினரை உபசரித்தலானேன் என்பது. தலைவனது தீய ஒழுக்கம் நன்கு கண்டிக்கப்பட்டது. “கரும்பு நடுபாத்தி” என்றது தலைவனது பரத்தை வந்து தங்குவதற்கென அவ்வில்லம் அமைக்கப்பட்டதென்றும், அப்பாத்தியில் தானே தோன்றிய ஆம்பல் மலர் வண்டுகளின் பசியைப் போக்குதலால், தலைவனால் விரும்பப்படாத தலைவி இல்லறம் நடத்திவருவதும் என்ற இவ்வருணனையில் மறைவாகத் தலைவன் கூடாஒழுக்கம் கண்டிக்கப்பட்டது. இத்தன்மையிலேயே, அநேக உதாரணங்களைத் தமிழ் நூல்களினின்றும் எடுத்துக் காட்டுதல் கூடுமாயினும், பாரதியார் அங்கதம் என்று எடுத்துக்கொண்ட தலைப்பிற்கு ஏற்றபடி சில உதாரணங்களே கொடுக்கப்பட்டுள்ளன.

தமிழ் நூல்களையும் ஆங்கில நூல்களையும் நன்கு கற்றுத் தேர்ந்த பாரதியார் தனது பாடல்களில் இரண்டு வகையான அங்கதம் தோன்றும்படிப் பலவிடங்களில் பாடியுள்ளார். சில உதாரணங்களை எடுத்துக் காட்டுவோமாக.

***“ நெஞ்சி லுரமு மின்றி***
***நேர்மைத் திரமு மின்றி***
***வஞ்சனை சொல்வாரடீ—கிளியே !***
***வாய்ச் சொல்லில் வீரரடி !”*** **(நடிப்புச் சுதேசிகள்)**

***“ சிந்தையிற் கள் விரும்பிச்***
***சிவசிவ வென்பது போல்***
***வந்தே மாதர மென்பார் !—கிளியே !***
***மனதி லதனைக் கொள்ளார்.”*** **(நடிப்புச் சுதேசிகள்)**

இங்கு, பாரத மக்களில் சிலர் தேசாபிமான உணர்ச்சி உடையோராய் நடித்துக் காட்டும் காட்சி பாரதியார் உள்ளத்தைப் புண் படுத்தியது. இடித்துக் கூறும் முகத்தானே நகைச்சுவை ததும்பும் படி வாய்ச்சொல் வீரர்கள் என்றார். மக்கள் திருந்தவேண்டு மென்று கூறப்பட்ட காலை அன்னார் குறைபாடுகளைக் கண்டித்து நகைக்கும்படிச் செய்தலால் இப்பாடல்கள் அங்கதத்தின்பாற்படும்.

'சுதந்திரப் பள்ளு' என்ற பாடலில் பாரதியார் வருணச் சிரம தர்மங்கள் நிலை குலைந்து வாழ்வதைக் குறித்துப் பேசும்பொழுது குல ஒழுக்கத்தை மறந்து வாழ்தல் மனித முன்னேற்றத்துக்கு மாறுதலானது என்ற உண்மை தோன்ற இடித்துரைக்கின்றார்.

**"பார்ப்பானை ஐயரென்ற**
**காலமும் போச்சே—வெள்ளைப்**
**பரங்கியைத் துரையென்ற**
**காலமும் போச்சே..."** (ஆடுவோமே)

**"மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்."** (குறள்)

அறுதொழில் மறையவர் அந்தணராதலின், அவர்களுக்கென்ற ஒழுக்க விதிகள் மக்கட் சமூகத்தின் மேன்மையைக் கருதியே முன்னோரால் வகுக்கப்பட்டிருக்கின்றமையின் அவ்வொழுக்கங்கள் நிலைதிரியாது இருத்தல் வேண்டுமென்பதே பாரதியாரின் அவா. முன்னணியிலேயே இருக்கும் பார்ப்பாரைக் கூறியிருப்பது உப சாரமேயன்றி, பின்னர் நிற்கும் வேறு ஒழுக்கத்தினர்க்கும் அது பொருந்துமாறு கண்டு கொள்க. பிறப்பையே அடிப்படையாகக் கொண்டு பேதங்களை வளர்க்கும் அறிவீனம் மக்களிடையே நீங்க வேண்டுமென்பதே பாரதியார் கருத்தாகத் தோற்றுகின்றது. இவ் வடிகளும் அங்கதத்தின்பாற்படுமாறு அறிக.

மற்றோரிடத்தில் பாரதியார் மனிதவாழ்வில் ஈடுபட்டுள்ள உலகமக்கள் உண்பதும், உடுப்பதும், உறங்குவதுமாக இருந்து, காலன் வந்த காலத்தில் ஒழிந்து விடுவதைப் பார்த்து விசனிக் கின்றார். இம்மையிலே அமரவாழ்வை அடைய வேண்டிய முயற்சி யில் ஆன்மா ஈடுபடாது வேடிக்கையான உலகத்தில் வேடிக்கை

யாகவே இருந்து வாழ்ந்து அழிகின்றார்களே என்ற எண்ணத்தைக் கண்டிக்க வேண்டிக் கீழ் வருமாறு பாடுகின்றார் :

**" தேடிச் சோறு நிதந்தின்று—பல**
**சின்னஞ் சிறு கதைகள் பேசி—மனம்**
**வாடித் துன்ப மிகவுழன்று—பிறர்**
**வாடப் பல செயல்கள் செய்து—நரை**
**கூடிக் கிழப் பருவ மெய்தி—கொடுங்**
**கூற்றுக் கிரையெனப் பின்மாயும்—பல**
**வேடிக்கை மனிதரைப் போலே—நான்**
**வீழ்வே னென்று நினைத்தாயோ ?"** (யோகசித்தி)

மனித சமூகத்தினர்மீது கூறப்பட்ட இப்பாடற் பகுதியும் அங்கதச் செய்யுளாமாறு காண்க.

**" இன்று தருகுவன் வெற்றியே— இதற்**
**கித்தனை வீண்சொல் வளர்ப்பதேன் ?"** (சகுனி சதி)

துரியோதனன் தனது மாமனிடம் பாண்டவர்களை அழிக்க வேண்டுமென்று முறையிட்டுக் கண்ணீர் விட, தீய எண்ணத்தில் இணையற்ற சகுனி மேலே உள்ளவாறு கூறினன். இவ்வடிகள் நகைச்சுவையை எழுப்பி இன்பம் செய்வன. இத்தன்மையான அடிகள் அங்கதமாகக் கொள்ளற்பாற்று. பாரதியார் பாடல்களில் நகைச்சுவை அமைந்த பாகங்கள் பல இருப்பினும் விரிவஞ்சிச் சிலவே இங்கு உதாரணமாகக் காட்டப் பெற்றன. பாடல்களைப் படிக்கும் அன்பர்கள் பலவாறு அனுபவித்து மகிழ்வார்கள் என்பது திண்ணம்.

## பாரதியார் கவிதாசக்தி

பாரதியாரின் கவிதாசக்தியைப்பற்றி அறிந்து கொள்வதற்கு முன், கவிதை இன்னதென்பதனைச் சிறிது ஆராய்ந்து தெளிதல் ஏற்புடைத்தாம். கவிதை என்பதை மேல்நாட்டு அறிஞர்களும் புலவர்களும் நம் நாட்டுக் கவிவாணர்களும் இலக்கணிகளும் வெகுவாக ஆராய்ந்துள்ளார்கள். அவ்வாராய்ச்சிகளின் பயனாகக் கவிதையென்பது யாது என்ற வினாவிற்குத் தகுந்த விடையளிக்கத்தக்க முறையில் நாம் இல்லையென்றே கூறலாம். கவிதையைச் சிலர் செய்யுள் என்றும், இன்னும் சிலர் பொருள்பொதிந்த சொல்லின்ப

மென்றும், இன்னும் சிலர் நவரசங்களென்றும், சிலர் இசையென்றும் கூறிப்போந்தனர். இம்முறையான விளக்கங்கள் கவிதை என்பதைத் தெளிவுபடுத்துமாறு இல்லை. மேல்நாட்டு அறிஞர்களில் சிலர், கவிதை என்பதைப்பற்றிக் கூறியுள்ள எண்ணங்களைச் சிறிது நோக்குவோம். வேட்ஸ்வர்த் என்ற புலவர்பெருமகன் கவிதை என்பது, "ஆற்றல் ததும்பிய சொற்கள் தாமாகவே பொங்கி வழிவது" என்றார். கீட்ஸ் என்ற மற்றொரு புலவர், "வாய்க்கால் இல்லாத இடங்களில் மழை பெய்தாலொத்த ஒளிதாரையே" கவிதை என்றார். ரஸ்கின் என்ற அறிஞர், "உணர்ச்சிக் குரிய சிறந்தகாரணங்களைப் பாவனை முகத்தால் குறிப்பிடுவது" கவிதை என்றார். டாக்டர் ஜான்சன் என்ற பெரியார், "கவிதை என்பது இதுவல்ல என்று கூறலாமே அன்றி இதுதான் கவிதை என்று சுட்டிக்காட்டல் இயலாது" என்றார். ஒளியை அறிந்துகொள்ளும் மக்கள் ஒளி இன்னதென்று கூறமுடியாத நிலையில் இருப்பது போல் இருப்பது கவிதையாகும் என்பது அன்னார் அபிப்பிராயம். மேத்யூ ஆர்னல்ட் என்பார், "கவிதை என்பது வாழ்க்கையின் ஆராய்ச்சி நிலை" என்றார். இத்தன்மைய விளக்கங்களெல்லாம் ஒரு சிறிதே ஒப்புமை பெற்றிருத்தல் வெளிப்படை. செய்யுள் இன்னதென்பதைத் தொல்காப்பியனாரும் பவணந்தியாரும் தங்கள் தங்கள் இலக்கண நூல்களில் விவரித்துச் சென்றுள்ளனர். பவணந்தி முனிவரின் நன்னூலையே இங்கு எடுத்துக்கொள்வோம்.

**"பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல**
**சொல்லால் பொருட்கிடனாகி உணர்வினின்**
**வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்."** (நன்னூல்)

இவ்வடிகளில் கூறப்படும் கவிதை இலக்கணம் ஒருவாறு கொள்ளத்தக்கதாகத் தோற்றுகிறது. பல வகையான தாதுக்களுடன் நிலைநிற்கும் உடல் உயிரோடு ஒன்றிநிற்பது போன்று, பொருள்களின் நிலைத்த தன்மைகளை உணர்ச்சிவிளங்கும் வண்ணம் அழகிய சொற்களால் அணிதோன்றும்படிச்செய்தலே செய்யுளாகும் என்பது இவ்வடிகளின் பொருள். எனவே, மக்கள் உயிர்வாழ்விற்கு இன்றியமையாத உயர்ந்த கருத்துக்களை உணர்ச்சிஎழும் முறையில் அழகிய செஞ்சொற்களால் அமைத்து எழுதப்படுவதே நல்ல கவிதையாகும் என்பது. உடலும் உயிரும் ஒன்றியிருப்பது போன்று அசை,

சீர், தளை, யாப்பு முதலிய எழுவகைத் தாதுக்களும் பொருத்தமுறச் செய்யுளகத்தே விளங்கவேண்டுமென்பது முடிந்த கருத்தாகும். பொருள்களைப்பற்றிப் பேசுங்கால் மக்கள் வாழ்க்கையின் இம்மை மறுமைப் பொருள்களைக் கூறிச் செல்லுதலே பயனுடைத்தாம்; அற்றேல், கவிதை நீண்ட காலம் மக்களிடையே நின்று திகழாது. அறம், பொருள், இன்பம், வீடு என்பவையே நூற்பயனாதலின், அத்தன்மையான உயர்ந்த மக்கள் லட்சியங்களைக் கூறிச்செல்லுதலே கவிதையில் மாண்புடைமையாகும். புலவன் தன் உள்ளத்தின் மேன்மையாலும் அனுபவ உணர்ச்சியாலும் ஏற்படுத்திக்கொண்ட கருத்துக்களைத் தன்முகமாகவோ அன்றிப் பிறபாத்திரங்கள் முகமாகவோ உலகத்தினர்க்குத் தெரிவிக்க விரும்புங்கால அக்கருத்துக்களைச் சாதாரணமான வசனமுறையில் எழுதாது மேலேகூறிய செய்யுள் வடிவாக எழுதி, படிப்போர் உள்ளத்தையும் கேட்போர் உள்ளத்தையும் கவருகின்றான். ஆகவே, ஆன்மநேய ஒருமைப் பாட்டுணர்வு கவிதையில் நன்கு அமைந்திருந்தாலன்றி மக்கள் மனங்கொள்ளார். காலம், இடம், தேசம் முதலிய வரைகளின்றி மனித உணர்ச்சிகளையே சிறந்த நோக்கமாகக்கொண்டு பாடிப் போகும் கவிகளே மகாகவிகளாவர். கவி இன்னதன்மையுடையதாக இருத்தல் வேண்டுமென்று விவரித்து நாம் கூறுவதைக் காட்டிலும், கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பநாடனின் பாடல் ஒன்றை ஈண்டு தருதல் மிகவும் பொருத்தமுடையதாகும். அது வருமாறு :—

**“ புவியி னுக் கணியாய் ஆன்ற பொருள் தந்து புலத்திற் றாகி**
**அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவி**
**சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச்**
**சான்றோர்**
**கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்.”**

(சூர்ப்பணகைப் படலம்)

கோதாவரி நதியையும், சான்றோர்களின் கவியையும் ஒருங்கு சேர்த்து வருணித்த கம்பநாடனின் கல்வி மேம்பாட்டை என்னென்று கூறுவது! மக்கள் கருத்துக்கேற்ற முறையில் சுவைப் பகுதிகளுக்கு ஒத்த நடையமைப்பும் யாப்பு வகைகளும் நன்கு அமைத்துப் பாடுவதே பெரும்புலவோர் செய்கையாகும். எனவே, கவிதை இன்னது என்பதை ஒருவாறு தெளிந்து கொண்டோம்.

பாரதியாரின் கவிதை எத்தன்மையானது என்று அறிதல் இனி வரும் நோக்கமாகும்.

நன்னூலாசிரியர் கூறிய கருத்துக்களையும், கம்பநாடன் கொண்டுள்ள கருத்துக்களையும் மனதிற்கொண்டு பாரதியாரின் கவிதையைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டியதாக ஏற்படுகின்றது. ஆன்ம இயல்பையும் உணர்வையும் குறித்துச் செல்வதே உயர் கவிதையின் நோக்கமாகும் என்று முன்னரே சுட்டப்பட்டது. அம்முறையில் பாரதியார் பாடல்கள் தலைசிறந்து விளங்குகின்றன. ஆன்ம நேயமும், ஆன்ம விசாரணையும், ஆன்ம லட்சியங்களும் அவர் பாடல்களில் விரவி வாராத இடங்கள் இல்லையென்றே சொல்லலாம். காதலைப் பற்றிய பாடல்களிலும், தேசீயத்தைப்பற்றிய பாடல்களிலும், தோத்திரப் பாடல்களிலும், காவிய நூல்களிலும், வாழ்த்துக்களிலும், இரங்கற் பாக்களிலும் பாரதியார் காட்டும் பலவிதமான சுவைகளில் முன்னணியில் நிற்பது ஆன்ம நேயமே. உதாரணங்கள் தந்து விளக்குவதெனில் விரிவாகுமாகையால் அன்பர்கள் படிக்குங்கால் அறிந்து கொள்வதே சிறப்புடைத்தாம்.

"பல்வகைக் தாதுவின்" என்பதற்கிணங்க, பாரதியாரின் பல பாடல்கள் யாப்பிலக்கண முறைக்குள் அடக்க முடியாத நிலையிலிருப்பினும் அறவே தள்ளுமாறு இல்லை. புறனடைச் சூத்திரத்தின் உதவியால் அவைகளைக் கொள்ளுதலே மேன்மையுடைத்து. கால தேச மாறுதல்களால் இலக்கண அமைப்புகள் மாறுதலடைதலே மொழி முன்னேற்றத்திற்கும் செய்யுளிலக்கிய முன்னேற்றத்திற்கும் துணை புரியுமாறு காண்க. ஆங்கிலமொழி முன்னேறியதற்குரிய காரணங்கள் பலவற்றினும் இக்காரணமும் ஒன்றாகும். மாஸ்பீல்டு, ராபர்ட் பிரிட்ஜஸ், ஜான் டிரிங்க்வாட்டர் முதலான முற்போக்காளர்கள் புதிய முறையில் ஆங்கிலச் செய்யுட்களை அமைத்துப் போதல் அநேகருக்குத் தெரிந்ததொன்றும். எனவே, பாரதியாரின் பாடல்களை யாப்பிலக்கணநெறியில் வைத்து எண்ணாமல் புறனடையில் அமைத்துக் கொள்ளுதல் சாலச்சிறந்தது. அன்னார் பாடல்கள் மேல்நாட்டுப் பிரான்ஸ் தேசத்தாராலும், ஆங்கில மக்களாலும் மொழிபெயர்க்கப்பட்டு அனுபவிக்கப்பட்டன. தேசக் கவிஞராக விளங்கிய தன்மையால் தமிழ்மொழியானது பெருமையும் மதிப்பும் அடைந்ததென்னலாம். எனவே, எழுவகைத் தாதுக்களோடு உயி

ரோடு உடல் ஒன்றியிருப்பதுபோல் பாரதியார் பாடல்கள் விளங்கு கின்றன என்பது வெறும் புகழ்ச்சியன்று.

இரண்டாவதாக, பாரதியார் பாடல்களில் முதன்மையாகக் காணப்பெறும் அழகு "சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்" என்பது. மற்றவகை அழகுகளான சொல்லழகும் அணியழகும் பொருளாழமும் அமைந்திருத்தலோடு நடையழகும் நயமாகவே அமைந்துள்ளது. புலமைமிக்க பண்டிதர்கள்தாம் சங்க இலக்கியங்களைப் படித்து இன்புற இயலும். ஆனால், நம் கவிதா மணியின் பாடல்கள் சாதாரணமான தமிழ்ப் பயிற்சியுடையாராலும் படித்துப் பொருள் தெரிந்துகொள்ளக் கூடிய எளிய நடையில் அமைந்துள்ளன.

மூன்றாவதாக, பாடல்களைப் படிக்கின்ற காலத்துப் படிப்போர் உள்ளக்கிளர்ச்சியுடனும், முகமலர்ச்சியுடனும் தோன்றுவரல்லாது கூம்பும் தன்மை பெறுமாறில்லை. உணர்ச்சி அலைகள் பாரதியாரின் பாடல்களில் ஒன்றன்பின்ஒன்றாய் வந்து காட்சி தருகின்றன. மகிழ்ச்சியே கவிதையின் லட்சியமாதலின், மகிழ்ச்சி வேண்டியவர்கள் பாரதியார் பாடலில் எப்பாடலையேனும் படிக்கலாம். வேதாந்தம், தேசியம், தோத்திரம், வாழ்த்து, காவியம் முதலான எப்பகுதியை எடுத்துப் படித்தபோதினும் அவரது கவிதாசக்தியைக் காணலாம். கம்பன் தனது இராமாயணத்தில் கவிதாசக்தியைக் காட்டாத இடமே இல்லையென்னலாம். பாரதியாரும் கம்பனையே பின்பற்றியவராய்த் தனது பாடல்களில் அநேக இடங்களில் தனது கவிதா உள்ளத்தைக் காட்டிச் செல்கின்றார்.

நான்காவதாக, பாரதியார் செய்யுள்நடை தனித்தன்மை வாய்ந்தது. வசனநடை போன்ற முறையாகத் தோன்றினும், அது நவமுறையாகச் செல்லும் இனிய செய்யுள் நடையாகும். அகராதிப்பதங்களை மிகுதியாகப்பெய்து செய்யுளியற்றும் வழக்கம் பாரதிக் கவிஞனிடம் இருந்ததாகத் தோற்றவில்லை. மன உணர்வில் தோன்றிய உயர்ந்த கருத்துக்களை ஒளிபெருகி வீசும்வண்ணம் அணி விளங்கக் கூறிச்செல்வதே அவரது இயல்பாகத் தோன்றுகிறது. இதற்குக் காரணம், உள்ளத்தில் ஏற்பட்ட உண்மை ஒளியே ஆகும். அவ்வொளியே வாக்கை மதுரமாகச் செய்கின்றது. இக் கருத்தையே பாரதியாரும் பாடியுள்ளார்.

**“உள்ளத்தில் உண்மை யொளி உண்டாயின்**
**வாக்கினிலே ஒளி உண்டாகும்.”** (தமிழ்)

ஐந்தாவதாக, கம்பன் கூறிய நல்லியல்புகளில் “அவியகத் துறைகள் தாங்கி” என்பதைப் பார்க்குமிடத்து, பாரதியார் பாடல்களாகிய ‘திருத்தசாங்கம்,’ ‘விநாயகர் நான்மணிமாலை,’ ‘திருப்பள்ளி யெழுச்சி,’ ‘பெண்கள் விடுதலைக் கும்மி,’ ‘நவராத்திரிப் பாட்டு’ முதலானவைகளில் பாக்களும், பாவினங்களும் நன்கு கையாளப் பட்டுள்ளன. பலதுறைகளிலும் சென்று பாடக்கூடிய சக்தியுடையவர் பாரதியார் என்பது வெளிப்படை.

ஆறுவதாக, “ஐந்திணை நெறியளாவி” என்று கூறுமிடத்து, திணையை ஒழுக்கமாகக் கொள்ளின், அகப்பொருள் ஒழுக்கத்திற்கே திணை பொருந்துவதன்னியில் புறவொழுக்கங்களுக்கும் பொருந்துவதாகும். பல பாடல்களில் அகப்பொருட்சுவையைத் தழுவியும் பாரதியார் பாடியுள்ளார். ‘கண்ணன் பாடல்க’ளும், ‘கண்ணம்மா என் காதலி’ என்ற பாடற் பகுதிகளும் ஐந்திணை ஒழுக்கநெறியில் பொருந்துமாறு காண்க. புறவொழுக்கங்கள் பலவற்றினும், ஐந்தாகிய சமய ஒழுக்கம், சமூக ஒழுக்கம், தேசாபிமான ஒழுக்கம், மன்னுயிர் ஒழுக்கம், தெய்வ வொழுக்கம் என்றபடியாக அமைத்துக் கொள்ளினும் இழுக்காமாறு இல்லை. இம்முறையாகப் பார்ப்பின் பாரதியார் பாடல்களை அகவொழுக்கம் ஐந்திற்கும், புறவொழுக்கம் ஐந்திற்கும் நல்ல முறையில் அமைத்துக் கொள்ளலாம்.

ஏழாவதாக, “செவியுறத் தெளிந்து” என்னுமிடத்து, தெளிவே பாரதியின் பாடல்களில் தெளிந்து நிற்பது என்பதாம். முடிந்த சித்தாந்த வேதாந்தக் கருத்துக்களையும், தேச விடுதலைக்கான தீர்மானமான எண்ணங்களையும், ஐயமில்லாமல் அழுத்தமாகவும் திடமாகவும் கூறிப்போதல் அவர் பாடல்களில் தெளிவாகக் காணப்படுகின்றது.

எட்டாவதாக எடுத்துக் கொள்ளப்படுவது “தண்ணென் றொழுக்கம்” தழுவி என்பது. பாரதியார் பாடல்களின் கருத்துக்கள் இடத்திற்கிடம் மாறுபடாத தன்மையாக இருப்பதோடு முற்கூறிய கருத்துக்கேற்பப் பிற்கூறப்படும் கருத்துக்கள் தொடர்புடையனவாகவே காணப்பெறுகின்றன. தண்ணிய ஒழுக்கமும், செப்பமாகச் செல்லும் நடையொழுக்கமும், மரபு ஒழுக்கமும், சொல்லொழுக்க

மும் கருத்தொழுக்கமும், மூதுரைகளை எடுத்தாளும் எளிய ஒழுக்க மும், உணர்வும் மிகவும் போற்றத்தக்கன.

ஒன்பதாவதாகக் கூறப்படுவது "சான்றோர் கவி கிடந்தவாறு கிடத்தல்" என்பதினால், பாரதியாரின் கவிதைகள் கிடந்த முறை யிலே உள்ளன. பொருளாழமும், இனிய சொல்நடையும், தொடை யழகும் கலந்திருப்பதினாலேதான் பாரதியாரின் பெருமையைப் பற்றிக் கூறவரும் நூலாராய்ச்சியாளர் பலமுகமாக அன்னாரைப் பற்றி எழுதி உள்ளனர். சால்புகள் நிறைந்த பெரியாராகிய பாரதி யாரின் வாழ்க்கையும், பாடல்களும் பல்வேறு முறையில் எழுதப் படுவதற்கு உரியநிலைக்களனாக இருக்கின்றது. திருக்குறள் நூலுக்கு உரை வகுத்தவர் பதின்மராயினும், இன்னும் உரையாசிரியர்கள் தற்காலத்திலும் தோன்றியுள்ளனர். அஃதேபோல் பாரதியாரின் பாடல்களைப்பற்றி எழுதுவதற்கென அறிஞர் பலர் முன்வந்துள்ள மையே, அன்னார் கவி சான்றோர் கவியெனக் கிடந்த தன்மையை நிரூபிக்கின்றது.

வரகவி பாரதியாரின் கவிதாசக்தியைத் தொகுத்துக் கூற வேண்டுமாயின் பின்வருமாறு கூறலாம்: "ஆன்ம இயல்புகள்," என்பதைப் 'பாரதசமுதாயம்,' 'சுதந்திரப் பெருமை,' 'தாயின் மணிக்கொடி பாரீர்' என்ற பாடல்களிலும், எழுவகைத் தாதுக் களால் "உயிர்க்குடல்போல்" என்பதைப் பாடல்கள் எல்லாவற்றி லும், "ஆன்ற பொருள் தந்து" என்பதை வேதாந்தப் பாடல் களிலும், தோத்திரப் பாடல்களிலும், "புலத்திற்றாகி" என்பதைப் 'பாஞ்சாலி சபத'த்திலும், "துறைகள் தாங்கி" என்பதைக் 'கண்ணன்,' 'கண்ணம்மா' பாடல்களிலும், "தெளிந்த" என்பதைச் சிறப்பாகப் 'பாரதி—அறுபத்தாறு,' 'தமிழ்மொழி,' 'பாரதநாடு' என்ற பாடல்களிலும், "ஒழுக்கம்" என்பதைப் 'பரசிவ வெள்ளம்' என்ற பாடலிலும் காணப்பெறுவது தமிழ் அன்னையின் தவப் புதல்வனும் பாரதநாட்டுக் கவிஞன் பாரதியாரின் கவிதாசக்தியைத் தெற்றென விளக்குமன்றோ!

ஆகவே, நம் பாரதியார், உயரிய ஒழுக்கத்தினாலும், அரிய சேவையினாலும், ஆன்ம ஜெயத்தினாலும், தவமிக்கத் தண்ணளியினா லும், கவிதைப் பெருக்கின் கண்ணியத்தினாலும், இறவாப் புகழ்

பெற்றதுமன்றி, இந்தியநாட்டுக் கவிஞர்கள் கொலுவீற்றிருக்கும் மணிமண்டபத்தில் தானும் வீறுற்றிருந்து நம்மனோர்க்கு இனிய காட்சியளிக்கும் பெற்றியைப் பெற்ருர் என்று கூறுவதே இந்நூலின் முடிவுரையாகும்.

**வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!**

**வாழிய பாரத மணித்திரு நாடு!**



